# நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் அறப்பணிகளும் வரலாறும்





டாக்டர். **தே. சொக்கலிங்கம்** எம்.ஏ.பி.ஓ.எல்., பி.எச்.டி
இணைப் பேராசிரியர், தமிழ்த்துறை
அழகப்பா பல்கலைக் கழகம்

---

**பார்வதி பதிப்பகம்**
காரைக்குடி - 3

# நாட்டுக் கோட்டை நகரத்தார்கள் அறப்பணிகளும் வரலாறும்






டாக்டர். **தே. சொக்கலிங்கம்** எம்.ஏ.பி.ஓ.எல்; பி.எச்.டி
இணைப் பேராசிரியர், தமிழ்த்துறை
அழகப்பா பல்கலைக் கழகம்

**பார்வதி பதிப்பகம்**
காரைக்குடி-3

முதற்பதிப்பு: 6 ஆகஸ்ட் 1997

உரிமை ஆசிரியர்க்கு

விலை ரூ.75.00



உயர்திரு வீர.கா. சுந்தரம் செட்டியார்- இந்திரா ஆச்சி மணிவிழாவில் 6-8-97 இல் வெளியிடப் பெற்றது.

இந்நூல் வெளியீட்டுக்குத் துணை நின்ற உயர் திரு எஸ். ஆதப்பன் பி.இ. அவாகளுக்கு நெஞ்சார்ந்த நன்றி

எஸ். ஆதப்பன் பி.இ.

திருச்சிராப்பள்ளி
21-7-1997

# பதிப்புரை

சீரும் சிறப்பும் மிக்க இந்நன்னாள் எங்கள் வாழ்வின் பொன்னாள்; எங்கள் வணக்கத்துக்கும் போற்றுதலுக்குமுரிய பெற்றோர் உயர்திரு கா. சுந்தரம் செட்டியார்- இந்திரா ஆச்சி அவர்களின் அறுபதாம் ஆண்டு மணி விழா நாள். இந்திருநாள் எங்கள் மகிழ்ச்சிக்கும் மனநிறைவுக்குமுரிய நாள்; மணிவிழாவில் இந்நூலை வெளியிட்டு அவர்கள் பொன்னார் திருவடிகளை இருகரங் கூப்பி வணங்குகின்றோம். இவ்வரிய நாளை என்றும் நினைவு கூரும் வண்ணம் அனைவர்க்கும் நாட்டுக் கோட்டை நகரத்தார்கள் - அறப்பணிகளும் வரலாறும் என்னும் நூலை வழங்குகின்றோம். இந்த நிலையான அன்புப் பரிசை அனைவரும் பெற்றுப்பயன் பெற வேண்டுகிறோம்.

தொழில் வளமும் தரும நலமும் மிக்க நாட்டுக்கோட்டை நகரத்தார்களின் அறப்பணிகளையும் வரலாற்றையும் ஆதாரங்களையும் இந்நூல் எளிய இனிய தமிழில் எடுத்துரைக்கின்றது. தமிழறிஞர் முனைவர் தெ. சொக்கலிங்கம் அவர்கள், பல ஆண்டுகளாகத் திரட்டிய கருத்துகளையும் கற்ற நூற்புலமையையும் வரன் முறைப்படுத்தி இவ்வரலாற்று நூலை எழுதியிருக்கிறார்கள். இதுகாறும் நாட்டுக் கோட்டை நகரத்தார் வரலாறு எழுதியவர்கள் போல் அல்லாமல், இந்நூலாசிரியர் கல்வெட்டுச் சான்றுகள், இசைகுடிமான வாசகம், இலக்கியக்குறிப்பு ஆகியவற்றைக் கொண்டு இந்நூலைக் கடின உழைப்புக்குப்பின் ஆக்கியுள்ளார்கள். மிகச்சிறந்த வணிகக் குழுவாக விளங்கிய நகரத்தார்களின் சரித்திரப் பூர்வமான இந்த நூலை இந்நன்னாளில் வெளியிடுவதில் பெரு மகிழ்ச்சி அடைகின்றேன். வாய்ப்பு நல்கிய நூலாசிரியர்க்கு நன்றி

S. ஆதப்பன்.

வாழ்க வளமுடன்

# காணிக்கை

நாட்டுக் கோட்டை நகரத்தார் அறப்பணிகளும் வரலாறும்
என்ற இந்நூலைப் பிறையாயிரப் பெரு விழாக்கண்ட
உயர் திரு வீர. காசிச் செட்டியார்—சேது ஆச்சி
ஆகியோருக்கு அன்புக் காணிக்கையாக்குகின்றோம்.

கல்லுக்குழியில் குடும்பம் காக்கும்
கந்தவேலன் கோயில் கட்டி
நல்லிதயக் கோயில் தன்னில்
நங்கை சேது அம்மன் கூட்டி
இல்லறத்தின் பயனைக் காட்ட
இன்மழலை ஆறு பெற்றார்
நல்லறத்தின் செல்வ மெல்லாம்
நலமுடனே பெற்று வாழி

அன்புக் காணிக்கை.

சொ. பார்வதி — தெ. சொக்கலிங்கம்
பி. அழகாபுரி.

# அணிந்துரை

டாக்டர் அ.விசுவநாதன்
எம்.ஏ., எம்.லிட்., பிஎச்.டி.,
தமிழ்த்துறைத் தலைவர்,
அழகப்பா பல்கலைக் கழகம்,
காரைக்குடி.

---

வரலாறு காணாத நாடில்லை, இனமில்லை, குடும்பமில்லை. ஒரு நாட்டின் இனத்தின் குடும்பத்தின் தொன்று தொட்டு வரும் பெருமைகளைப் பலரும் அறியச் செய்யத் துணை நிற்பன வரலாறுகளே. வரலாறுகள் இல்லையெனின் முன்னிகழ்வுகள் எதனையும் அறிய இயலாமற் போய்விடும். வாழ்வியற் கருவூலங்களாகத் திகழ்பவை வரலாறுகளே.

தமிழக வரலாற்றில் "மன்னர் பின்னோர்" என்று சிலப்பதிகாரம் சுட்டுவது தனவைசியர்களைத்தான். நகரத்தார்கள் என்றும் தனவைசியர் என்றும் சுட்டப் பெறுபவர்கள் செட்டிநாட்டுப் பகுதியில் பெருமளவில் வாழ்ந்து வருகின்றனர். பிற இனத்தாரிடம் காணப்பெறாத தனிச்சிறப்பு, நகரத்தாரிடை அமைந்துள்ள கோயிற் பிரிவுகளாகும். கொள்வினை, கொடுப்பு வினை கோயிலைப் பொறுத்தே அமையும்.

"அறன் எனப் பட்டதே இல்வாழ்க்கை" என்றார் வள்ளுவப் பெருந்தகை. நகரத்தார்கள் இயல்பாகவே அறச்சிந்தனையினர் எனில் அது மிகையாகாது. தமிழகம் இன்று கல்வியிலும், தொழில் வளத்திலும் முன்னணியில் நிற்பதற்குப் பெருங்காரணவர் நகரத்தார் பெருமக்களே. செட்டிநாட்டரசர் இராசா சர் அண்ணாமலைச் செட்டியார், கோடி கொடுத்த கொடைஞர் டாக்டர் அழகப்பச் செட்டியார், கலைத் தந்தை தியாகராசச் செட்டியார் போன்ற சான்றோர் பலரைக் கல்வியுலகம் என்றும் மறவாது போற்றும் இலக்கிய உலகிற்குப் பெருந்தொண்டாற்றிய தமிழ்க் கடல் ராய.சொ அவர்களையும் கம்பன் அடிப்பொடி சா. கணேசன் அவர்களையும் தமிழுலகம் நன்கு அறியும். பள்ளத்தூர் அ.மு.மு. முருகப்பச் செட்டியார், கானாடுகாத்தான் டாக்டர் ஏ.சி. முத்தையா செட்டியார் போன்ற பெருமக்களைத் தொழில் உலகம் நன்கறியும். இன்னும் பல பெருமக்கள் அறப்பணிகளைச் செய்து வருகின்றனர். அவர்கள் பெயர்களை விரிப்பின் அகலும் தொகுப்பின் எஞ்சும்.

நகரத்தார்களைப் பற்றிய முழுமையான நிறைவான வரலாற்று நூல் இன்னும் அமையவில்லை; அமைதல் வேண்டும். "நகரத்தார் வரலாறு" என்னும் இந்நூல் நகரத்தார்களின் அறப்பணிகளின் பகுதியை விளக்கு முகமாக அமைந்திருக்கிறது. நகரத்தார்களின் அறப்பணிகளுள், வாகனத் தருமங்கள், பாடசாலைகள், சாலைகள் போன்றவற்றை விரிவாக எடுத்துரைக்குமாறு இந்நூல் அமைந்துள்ளது.

இந்நூலைச் சிறந்த முறையில் உருவாக்கியுள்ளார் தையல் நாயகியின் சிந்தை மறவா அன்பர், அழகப்பா பல்கலைக் கழகத் தமிழ்த் துறை இணைப் பேராசிரியர் நண்பர் முனைவர் தே.சொக்கலிங்கம் அவர்கள் இந்நூலை உருவாக்கப்

பெருமுயற்சி, மேற்கொண்டார். எதையும் மேம்போக்காகக் கூறாமல், ஆழ்ங்காற்பட்டு, நுண்மாண் நுழைபுலத்துடன் கூறும் இயல்பினர். ஆய்வின் அடிப்படைக் கூறுகளுள் ஒன்று ஆய்விற்கான ஆதாரங்களை மூலங்களைச் சுட்டுவதாகும். அதனாற்றான் நூலின் தொடக்கத்தே ஆதாரங்களை விரிவாக எடுத்துரைத்துள்ளார். ஆய்வு நெறிமுறைக்கு இது ஒரு சான்றாகும். ஒவ்வொரு கட்டுரையின் இறுதியிலும் தான் கண்ட ஆய்வு மெய்ம்மைகளைத் தொகுத்துரைத்துள்ளமை பாராட்டத் தகும். சிறந்த முறையில்"நகரத்தார் வரலாறு" கண்ட நண்பர் சொக்குவிற்கு உளம் நிறைந்த பாராட்டுகள்.

இந்நூலின் தோற்றத்திற்கு மூலாதாரமாய் அமைந்தவர் மணிவிழா மணமக்கள் திரு.வீர.கா. சுந்தரம் செட்டியார், இந்திரா ஆச்சி ஆவர். திரு.கா.சு.அவர்கள் நிறை குணத்தவர், பண்பாளர், சிவனை மறவாச் சிந்தையர். "இல்லது என் இல்லவள் மாண்பானால்" என்றார் வள்ளுவர். இல்லறச் சிறப்புக்கு அடிப்படை இல்லறத் தலைவியே. உள்துறைச் சிறப்பாக அமைந்தால் வெளித்துறைச் சிறப்பாக அமையும். ஐயமின்று, திரு.கா.சு. அவர்களின் நிறைவாழ்விற்குக் காரணவர் திருமதி இந்திரா ஆச்சியே.

"நன் கலம் நன்மக்கட் பேறு" என்றார் வள்ளுவப் பெருந்தகை. அத்தகைய நன்மக்களைப் பெற்ற பெருமையர் திரு. சுந்தரம் செட்டியார், இந்திரா ஆச்சி. ஆவர். மக்கள் ஒவ்வொருவரும் பண்பாலும் குணத்தாலும் தொழில் வளத்தாலும் சிறந்து நிற்றல் பாராட்டுக்குரியதாகும். திரு.கா.சுவின் பெருமைக்குக் காரணம் அவர்தம் நன்மக்களே!

மணிவிழாக் காணும் திரு. கா. சுந்தரம் செட்டியார் திருமதி இந்திரா ஆச்சி அவர்தம் குடும்பத்தார் எல்லாச் சிறப்புகளும் வளங்களும் பெற்றுப் பல்லாண்டு வாழ எல்லாம் வல்ல இறைவனை இறைஞ்சுவன். பிறை ஆயிரப் பெருவிழாக் கண்ட மணிவிழா நாயகரின் தந்தை திரு. வீர. காசிச் செட்டியார் அவர்களைப் போலத் திரு.கா. சுந்தரம் செட்டியார் அவர்களும் பிறையாயிரப் பெருவிழாக் கண்டு, பெருவாழ்வு வாழ்வார்களாக.

திருமணங்களில், மணிவிழாக்களில் வழங்கப் பெறும் நூல்களைப் பலரும் பார்ப்பார்கள், புரட்டுவார்கள், தூக்கிப் போட்டுவிட்டுப் போய்விடுவார்கள்; இதுதான் உண்மை. ஆனால் உங்கள்கையில் இருக்கும் 'நகரத்தார் வரலாறு' நீங்கள் படித்து அறிவதற்குப் பல செய்திகளை உடையது. படிப்பதோடு அமையாது உங்களையும் அறவழிப்படுத்தும் போக்கினது. "ஒல்லும் வாயெல்லாம் அறஞ்செய்க' முன்னோர் பெருமை நம் பெருமை; அவர்வழி நிற்றல் நம் கடமை.

அ.விசுவநாதன்

காரைக்குடி–3
5.8.97

# முன்னுரை

"காசி விசாலாட்சி கவி மதுரை மீனாட்சி
கட்டியுள்ள ஆடைகளும் கழுத்திலுள்ள பொன்னகையும்
சுற்றியுள்ள மண்டபமும் தூக்கிவரும் வாகனமும்
ஆக்கிக் கொடுத்தவர்கள் அமர்ந்திருக்கும் பேரழகும்
நாட்டுக் கோட்டை வளர்த்த நகரத்தார் அல்லேமோ'

-கவியரசர் கண்ணதாசன்.

'நாட்டுக் கோட்டை நகரத்தார்கள் அறப் பணிகளும் வரலாறும்' என்னும் இந்த நூல் மூன்று பகுதியாக அமைந்தது. முதற்பகுதி நகரத்தார்களின் தரும காரியங்களை விரிவாக விளக்குகிறது. நகரத்தார்களின் கல்விப் பணி, திருக்கோயிற்பணி, மருத்துவப் பணி ஆகியன பலராலும் தொகுத்துக் கட்டுரைகளாகவும் நூல்களாகவும் ஆராய்ச்சியாகவும் எழுதப்பட்டிருக்கின்றன. இன்று வரை ஆராய்ந்தெழுதப்படாத ஊருணி, வாகனம், பசுமடம், பாடசாலை, சாலை (Road) பற்றிய தருமங்கள் மட்டும் இங்குத் தரப்பட்டிருக்கின்றன. சாலை அறத்தில் தண்ணீர்ப் பந்தல், சுமை தாங்கி நிறுவல் போன்றனவும் விளக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு கட்டுரையின் இறுதியிலும் அந்த தருமம் நிறுவப் பெற்ற இடம், நிறுவியோர் பற்றிய குறிப்புகள் பட்டியலிடப்பட்டுள்ளன. இப்பட்டியலில் இடம் பெற வேண்டியவை இன்னும் இருக்கின்றன. அவற்றை அறிந்தோர் ஏற்படுத்தியவர்கள் விவரம் தெரிவிப்பின் பட்டியலில் சேர்த்துக் கொள்ள வாய்ப்பாகும்.

நகரத்தார்களின் தருமப் பணிகளை இன்னும் பல்வேறு தலைப்புகளாகப் பகுத்து விரித்து எழுத வாய்ப்புள்ளது. காலத்தினருமை கருதியும் பொருட் செலவு கருதியும் சிலவற்றைப் பற்றிய செய்திகளே திரட்டி எழுதப் பட்டிருக்கின்றன. நகரத்தார்களின் அறத்தொடர்பான கட்டுரைகளே முதற்கண் தொகுத்தளிக்கப் பட்டிருக்கின்றன. பலரும் எழுதிய தலைப்புகள் ஒதுக்கப்பட்டிருக்கின்றன.

இரண்டாம் பகுதி, நகரத்தார் வரலாறு பற்றி எழுதுவதற்குரிய ஆதாரங்களையும் அவை நவிலும் செய்திகளையும் பேசுகின்றன. நகரக்கோயில் புராணம், இலக்கியம், பட்டயம் ஆகியவற்றில், சில நூல்களே ஈண்டு ஆய்ந்து எழுதப்பட்டுள்ளன. நூற்றுக்கு மேலான சிற்றிலக்கியங்கள் நகரத்தார்களைப் பற்றியும் அவர்களின் வரலாறுகளைப் பற்றியும் சுட்டுகின்றன. இன்னும் பல இலக்கியங்கள் இயம்பும் செய்தி இங்குத்தரப்படவில்லை; பாடுவார் முத்தப்ப செட்டியார் பாடிய நூற்குறிப்புகள் இங்குச் சேர்க்கப்படவில்லை. (பாடுவார் முத்தப்பர் வரலாறும் நூலாராய்ச்சியும் என்ற நூலைக் காண்க).

'நாட்டுக் கோட்டை நகரத்தார் வரலாறு' என்ற பகுதி மூன்றாம் பகுதியாகும். இப்பகுதி நகரத்தார்களின் வரலாற்றைச் சான்றுகளின் அடிப்படையில் எடுத்தியம்புகின்றது. 'நகரத்தார்களின் சமய வரலாறு' என்ற ஆய்வு தனி நூலாக, வெளியிடற்குரியது; ஆதலின் அந்த ஆராய்ச்சி ஈண்டுச் சேர்க்கப்படவில்லை.

நாட்டுக்கோட்டை நகரத்தார்களின் வரலாற்றில் ஒரு சில பகுதிகளே இங்கு ஆராயப் பட்டிருக்கின்றன.

நாட்டுக் கோட்டை நகரத்தார் வரலாற்றை வரலாற்றுச் சான்றுகளின் அடிப்படையில் எழுத வேண்டும் என்பது விழைவு; உயர் திரு. வீர.காசிச் செட்டியார்- சேது ஆச்சி அவர்களின் பிறையாயிரப் பெருவிழாவில் (சதாபிஷேகம்) இந்த விருப்பம் நிறைவேறிற்று. 24.7.86 அன்று இருபத்து நான்கு பக்கத்தில் 500 பிரதிகள் அச்சிடப்பட்டன. அதனைப் பலரும் படித்து மகிழ்ந்தனர்; அந்நூலை இரண்டு பகுதியாக்கிச் சிதம்பரம் நகரத்தார் சங்கம் தங்கள் மலரில் வெளியிட்டது. அக்கட்டுரைகளை மேலும் விரிவாகவும் தெளிவாகவும் வெளியிட முயன்றேன். தேவையான நூல்களையும் இதழ்களையும் வாங்கிடப் போதிய பொருளும் எழுதிடக் காலமும் கனியவில்லை; எனினும் பல நூலகங்களில் சென்று திரட்டிய குறிப்புகளைக் கொண்டு மிக விரைவாக இந்நூலை எழுதி முடித்தேன். வரலாற்றுக்கு முரண்படாதவாறும் மெய்யான வரலாறாகவும் இந்நூல் உருவாகியிருக்கிறது.

திருவருளும் குருவருளும் கூட்டுவிக்குமானால், நாட்டுக் கோட்டை நகரத்தார் வரலாற்றை மேலும் ஆராய்ந்து எழுத வேண்டும் என்பது திட்டம். எனினும் எண்ணிய எண்ணங்கள், கருத்துச் சிந்தனைகள் காற்றோடு கலந்து விடாமல் இருக்க வேண்டும் என்று எண்ணி என் திட்டத்தின் ஒரு பகுதி இந்நூலாக வெளி வருகின்றது. பெரு மதிப்புக்குரிய திரு கா. சுந்தரம் செட்டியார் - இந்திரா ஆச்சி அவர்களின் மணி விழா வெளியீடாக இந் நூலை வெளியிடுவதில் பெருமகிழ்ச்சி அடைகின்றேன். இறவாத இன்ப அன்பும் குறையாத மனித நேயமும் வாய்ந்த இவர்கள் எல்லாச் செல்வமும் பெற்றுப் பிறையாயிரப் பெருவிழாக்கண்டு வாழ ஸ்ரீ பாலாம்பிகை சமேத வைத்தியநாத சுவாமி திருவடிகளை இறைஞ்சுகின்றேன்.

நகரத்தார்கள் திருமணங்களில் நல்ல நூல்களை வெளியிட்டு அன்பளிப்பாக வழங்கி வருகின்றனர். அவ்வாறே இந்நூலைச் செவ்வனே சிறந்த முறையில் மணி விழா மணமக்களின் மூத்த திருமகனார் உயர்திரு சுந்தர ஆதப்பன் பி. இ. அவர்கள் செலவிட்டு வெளியிடுவது பாராட்டத்தக்கதாகும். அவர்கள் தமிழ் அன்பும், தொழிலார்வமும் மிக்க இளைஞர். நல்ல நூல்களை வெளியிடுவோரோ அதை விலைக்கு வாங்கிப் படிப்போரோ குறைவு. நாட்டுக் கோட்டை நகரத்தார் வரலாற்றையும் அறப் பணிகளையும் வெளியிட்டு நகரத்தார்களின் தொன்மையையும் வணிக வரலாற்றையும் அனைவரும் அறியச் செய்த செல்வன் ஆதப்பனாரின் பணி, நகரத்தார்களால் போற்றற் பாலது; நகரத்தார் வரலாற்றில் பொன்னெழுத்துகளால் பொறிக்கத்தக்கது. திரு ஆதப்பன் அவர்களும் அவர்கள் குடும்பத்தினரும் எல்லா நலனும் பெற்றுப் பல்லாண்டு வாழ வாழ்த்துகிறேன்; அன்னாருக்கு என் நன்றி.

இந்நூலை நன் முறையில் அச்சிடத் துணை நின்ற திரு. சுப சீனிவாசன் அவர்களுக்கும் அச்சகத்தாருக்கும் என் நன்றி உரியது.

வாழ்க வளமுடன்

அன்புடன்

*தெ. சொக்கலிங்கம்.*

எஸ். வெங்கட்டராமய்யங்கார்
சோதிடர்
ஆசிரியர், அநுபவ சோதிடம்

கீழச்சிவல் பட்டி (P.O.)
1.8.97

# வாழ்த்துரை

ஓங்கி உலகளந்த உத்தமன் பேர் பாடி
நாங்கள் நம்பாவைக்குச் சாற்றி நீராடினால்
தீங்கின்றி நாடெல்லாம் திங்கள் மும்மாரி பெய்து
ஓங்கிப் பெருஞ்செந்நெல் ஊடு கயல் உகள
பூங்குவளைப் போதில் பொருவண்டு கண்படுப்ப
தேங்காதே புக்கிருந்து சீர்த்த முலைபற்றி
வாங்கக்குடம் நிறைக்கும் வள்ளல் பெரும்பசுக்கள்
நீங்காத செல்வம் நிறைந்தேலோர் எம்பாவாய்

நண்பர் சிறு கூடல் பட்டி சென்டர் திரு. காசி செட்டியார் அவர்கள் குமாரர் திரு. சுந்தரம் செட்டியார் இந்திரா ஆச்சி அறுபதாம் ஆண்டு நிறைவு மணி விழாவில் எனது குடும்ப நண்பர் டாக்டர் TKT சொக்கலிங்கம் அவர்கள் எழுதி வெளியிட்டுள்ள "நாட்டுக் கோட்டை நகரத்தார் அறப்பணியும், வரலாறும்" என்ற புத்தகத்தை வெளியிடு முன் படித்துப் பார்த்தேன்.

108 சிவ தலங்களும் 108 வைணவத்தலங்களும், பிற கோவில்களும் நம் நாட்டில் நிறைந்திருக்கின்றன. அவற்றில் பெரும்பான்மையான தலங்களில் திருக்கோவில் திருப்பணி, அறக்கட்டளைகள், பசுமடம், வேதபாடசாலை போன்றவைகளை நாட்டுக் கோட்டை நகரத்தார்கள் செய்துள்ளனர். அதன் விபரங்களைச் சிறப்பாக சொக்கலிங்கம் அவர்கள் எழுதியுள்ளார்கள்.

சுவாமி திருவுலாவிற்கான தங்க வெள்ளி வாகனங்கள் செய்துள்ள விபரமும், பசுமடம் அமைத்துள்ள விபரமும் பாடசாலைகள் அமைத்த விபரமும் எழுதியுள்ளார். சமூகப்பணியாகச் சாலை அமைத்தல் போன்ற விபரமும் தந்துள்ளார்கள்.

நன்றி மறப்பது நன்றன்று நன்றல்லது அன்றே மறப்பது நன்று என்ற படி நகரத்தார்கள் செய்துள்ள அறப்பணிகளைப் பாராட்டிப் பல புலவர்கள் பாடியுள்ளார்கள்

அவற்றைச் சேகரித்து வெளியிட்டிருப்பது மிகச் சிறப்பானது பின் சந்ததியினர் அறிந்து கொள்ளும் பொருட்டுக் கல் வெட்டுக்களில் அக்காலத்தில் எழுதியுள்ள வற்றையும் ஆராய்ந்தறிந்து அதையும் தெரிவித்துள்ளார். நகரத்தார்களின் பூர்வீகத்திலிருந்து வரலாற்று விபரமும் எழுதியுள்ளார்.

இந்நூலினால் நாட்டுக் கோட்டை நகரத்தார்களின் வரலாறும், அவர்களின் தெய்வீக சிந்தனையும்,தெய்வீக ஈடுபாடும் அவர்களின் அறப்பணி, சமூகப்பணி எப்படி அமைந்துள்ளப் என்பவற்றை அறிந்து கொள்ள முடிகிறது. இந்நூலை படிப்பவர்களுக்குத் தெய்வீக சிந்தனை பெருகவும், நாமும் அறப்பணிகளில் ஈடுபடவேண்டும் என்ற ஆர்வமும் ஏற்படும்.

இந்நூலினைச் சிறப்பாக எழுதியுள்ள திரு. சொக்கலிங்கம் அவர்கள் குடும்பத்தாரும், நூல் வெளியீட்டிற்குக் காரணமான மணி விழாக் காணும் சுந்தரம் செட்டியார் அவர்கள் குடும்பத்தாரும் எல்லா வளங்களுடனும் பல்லாண்டு வாழ எனது ஆசியினை தெரிவித்துக் கொள்கிறேன்.

ஸ்ரீ வெங்கடாஜலபதி துணை.

# 1. நகரத்தார்களின் ஊருணித் தருமம்

## முதன்மை அறப்பணி

நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் திருக்கோயில்களுக்குத் திருப்பணி செய்வதில் பெரும் விருப்பமுடையவர்கள். இவர்களைப் போலத் தாங்கள் தேடிய பொருளைக் கோயிலுக்கும் கோயிலைச் சார்ந்த நிறுவனங்களுக்கும் கோயிற் கலைகளுக்கும் செலவிட்டோர் எவரும் இரார். தொழில் செய்யும் போது, தெய்வங்களுக்கு என்று பங்கு வைத்து அதனால் வரும் வருமானத்தை நெடுகலும் அறம் செய்யும் பாங்குடையவர்கள் நகரத்தார்கள். இந்த மரபினர், திருக்கோயில் திருப்பணி செய்வதற்குப் பல நூற்றாண்டுகள் முன்னரே நீர் நிலைகளை அல்லது திருக்குளங்களை அமைக்கும் அரிய பணியில் ஈடுபடலாயினர். செட்டிநாட்டு வட்டாரத்திலுள்ள சில பழைமையான கல்வெட்டுகள், நகரத்தார் குழுவின் நீர்த்தேக்கப் பணியைச் சுட்டுகின்றன.

## முதல்அறச் செயல்

அரிமழத்துக்கு அருகிலுள்ள முனைசந்தை செட்டிநாட்டு ஊர்களில் ஒன்று; இங்குக் குடியிருந்த நகரத்தார் குடும்பங்கள், இப்போது கடியாபட்டி இராமச்சந்திரபுரத்தில் குடியேறிவிட்டன. இப்பழைமையான ஊரிலுள்ள கல்வெட்டு, நகரத்தார்களின் ஏரிப் பணியைக் கூறுகிறது. இக்கல்வெட்டு, 'ஐந்நூற்றுவப் பேரேரி' என்ற குறிக்கிறது. அக்கல்வெட்டுக் கண்மாய்க் கரையில் நடப்பட்ட கல்லில் காணப்படுகிறது. இக்கல்வெட்டில், நாட்டுக்கோட்டை நகரத்தார் 'ஐந்நூற்றுவர்' என்று சுட்டப்படுகின்றனர். இப்பெயர் இவர்களின் மிகப் பழைமையான பெயர். இவர்கள் ஒரு கூட்டமாக வழங்கிய வணிகக் குழு வினராகிய திசையாயிரத்து ஐந்நூற்றுவர் என்பதாம். இவர்கள் ஐந்நூற்றுவப் பேரேரிக்குக் காசு எடுத்து மூலதனமாக வைத்திருக்கின்றனர். இக்கல்வெட்டே (பு. ச. க. 61) இவர்களைப் பற்றிய மிகத் தொன்மையான கல்வெட்டு. ஐந்நூற்றுவரின் முதல் கல்வெட்டே அவர்களின் ஏரிகாத்த அறத்தைப் பற்றியதாகத் திகழ்கிறது.

## வரலாற்றுப் பழமை

கி.பி. 1260இல் பில்லமங்கலம் அழகாபுரியில் ஐந்நூற்றுவன் என்ற பெயரால் ஏரி ஒன்று இம்மரபினருக்குரியதாக விளங்கியது. இதனை வெண்ணீறுடையான் என்பான் விலைக்கு வாங்கிப் பெயர் மாற்றியிருக்கின்றான். (பு.ச.கா. 363). இது போல் மறவா மதுரையில் அகளங்கீசுவரர் கோயில் சிவபெருமான் கருவறையின் தென்புறம் ஒரு கல்வெட்டுக் காணப்படுகிறது. இது கி.பி1518 க்குரியது. இக்கல்வெட்டில், ஆறிலொன்று காணி அங்கிஷமாகப் பூண்ட செட்டிகளில் இளையாத்தக்குடிக் கழனிவாசலுடையான் (பு.ச.க. 726) என்று வருகிறது. இவர் மறவா மதுரையில் ஊருணி அமைத்தார். அப்போதே அந்த ஊருணிக்கு மழை பெய்தால் தண்ணீர் வருவதற்காக ஊருணியைச் சார்ந்த நிலப் பகுதியை ஊராரிடமும் பூச்சை நாயக்கரிடமும் விலைக்கு வாங்கியுள்ளனர். ஊருணிக்குத் தண்ணீர் இன்றியமையாதது; தண்ணீர் இன்றேல் ஊருணியால் பயன் இல்லை. எனவே ஒன்றை அமைக்கும் போதே அதற்கு வேண்டிய அடிப்படைத் தேவையையும் உணர்ந்து நகரத்தார்கள் தக்க ஏற்பாடு செய்திருக்கின்றனர்.

கி.பி.1538 இல் இளையாத்தக்குடியான குலசேகரபுரத்தில் திருவேட்பூருடையான் அழகிய பரிபாலார் சோலையார் ஏகப் பெருமாள் சேவகப் பெருமாள் புத்திரன் அழகன் செட்டியார் அழகப் பெருமாள் ஊருணியைக் கோணாபட்டில் புதிதாக உருவாக்கினார். ஊருணியுடன் கற்பக விநாயகர் கோயிலையும் அமைத்தார். (பு.ச.க. 861). இதனைக் கி.பி. 1854 இல் மீண்டும் புதுப்பித்தனர்.

**வணிகவருமானமும் ஊருணியும்.**

மதுரை மேலூருக்கு அருகிலுள்ள நரசிங்கன் பட்டியில் கி.பி. 1615 ஐ சார்ந்த கல்வெட்டு ஒன்று பொறிக்கப்பட்டிருக்கிறது. பஞ்சு, உப்பு ஆகிய வற்றை வணிகம் செய்ய நகரத்தார்கள் எல்லாரும் நரசிங்கன்பட்டி அர்ச்சுனப் பெருமாள் அம்பலகாரர் வீட்டுக்குவந்து ஒன்று கூடிப் போவார்கள். வணிகம் முடிந்து திரும்பி வரும்போது அம்பலகாரர் வீட்டிலேயே அனைவரும் ஒன்று கூடிக் கணக்குப் பார்த்து ஊருக்குத் திரும்புவார்கள். இந்த உண்மை பஞ்சு, உப்பு வணிகக் கூட்டுறவு முறிகளால் அறிய முடிகிறது. அதில் ஒரு வியாபாரக் கூட்டில் வந்த வருமானம். 743.3/4 வராகன். இதனைக் கொண்டு இங்கு ஓர் ஊருணி வெட்டிக் கற்கட்டிடம் கட்டியுள்ளனர் நகரத்தார்கள். இந்த ஊருணிக்கு நகரத்தார் ஊருணி என்றும் பஞ்சுப்பொதி ஊருணி என்றும் பெயராகும். இதனை இந்த ஊருணியிலுள்ள கல்வெட்டுணர்த்துகிறது. (புலவர் இராம. தெய்வராயன் (1982) மெய்யாத்தாள் படைப்பு. பக் 17.18)

**ஊருணி அமைந்த முறைமை**

கண்டவராயன்பட்டியில் கி.பி. 1876 இல் பழ. கரு. குடும்பத்தார் பொதுத்தருமமாகத் தண்ணீர் ஊருணி அமைத்தனர். இவ்வூருணியை வெட்டும் முன்னர் அந்த இடத்தில் பூமிபூசை செய்யப் பெற்றது. பின் நூற்றெட்டுப்பசு மாடுகளை விலைக்கு வாங்கி வந்து ஊருணி அமையும் இடத்தில் மூன்று நாள்கள் கிடை போட்டனர். பின் வேத பாராயணம் செய்து பழ. கரு. வினைதீர்த்தான் செட்டியார் திருக்குளத்தைத் தொடங்கி நிறைவு செய்தார். குளத்துக்கு முன்னே தன்னுடைய அன்னையார் முத்துக்கருப்பி ஆச்சி பெயரால் முத்துக்கருப்ப விநாயகரையும் எழுந்தருளச் செய்தார். இந்த ஊருணியில் ஆறுபடித்துறைகள். மிக நன்றாகக் கல் திருப்பணி இரணியூர்க் கல்தச்சர்களால் செய்யப்பட்டிருக்கிறது. கண்ட விராயன்பட்டியில், ஆகம முறைப்படி வேதம் ஒலிக்க ஊருணி அமைக்கப்பட்டிருக்கிறது. பிற ஊர்களில் இந்த முறை பின்பற்றப்பட்டதா என்பது தெரிந்து கொள்ள இயலவில்லை.

**ஏரி ஊருணியாதல்**

ஏரிகளை அமைத்தும் செப்பனிட்டும் அறம் செய்த நகரத்தார்கள், இதனைக் காலப் போக்கில், குடி தண்ணீர் நலங்கருதி ஊருணிகளாக அமைக்கலாயினர். ஏரி அல்லது கண்மாய்க்கு ஒருபுறம்மட்டும் கரை இருக்கும், ஊருணிக்கு நான்கு புறங்களிலும் கரை உண்டு. மேற்காட்டிய சான்றுகளால் ஒன்பதாம் நூற்றாண்டு முதலே நகரத்தார்கள் தாம் வாழ்ந்த பகுதிகளில் நீர்நிலைகளை அமைக்கும் அறத்தை மேற்கொண்டமை வெளிப்படும்.

## ஊருணி அமைக்கும் பழக்கம்.

நிலத்தில் எங்கே பள்ளம் தென்படுகிறதோ அங்கே மழை நீர் தேங்கிவிடும்; இக்குட்டையே குளமாகும். இயற்கை, தோன்று தொட்டுத் தண்ணீரைச் சேகரிக்கும் ஏரிகளையும் குண்டுகளையும் உண்டாக்கியிருக்கிறது. இவற்றை மேலும் ஆழமாக்கிச் சீர்திருத்தி நீரைத் தேக்க வேண்டும். மழைக் காலத்தில் தண்ணீரைச் சேகரிக்கும் ஊருணிப் பணி பிற்காலத்திலும் நகரத்தாரிடையே தொடர்ந்தது. நகரத்தார்கள் தொண்ணூற்றாறு ஊர்களில் வாழ்ந்திருந்து இன்று சில ஊர்களை விடுத்து வேற்றூர்க்குக் குடியேறிவிட்டனர். எனினும் தாங்கள் வாழ்ந்தபோது அந்த ஊர்களில் ஊருணிகளை நகரத்தார்கள் அமைத்திருந்தனர். இன்று செம்பனூரில் வாழும் நேமங்கோயிலார், கண்டமாணிக்கம் அருகிலுள்ள சிறு பெருச்சியூரில் வாழ்ந்தவர்கள். அங்கு அவர்கள் வாழ்ந்த காலத்தில், ஊருணியும் பிள்ளையார் கோயிலும் அமைத்திருக்கின்றனர். பின் இவர்கள் செம்பனூர்க்குக் குடிபோயினர். எனினும் இந்த ஊருணியும் பிள்ளையார் கோயிலுமுள்ளன.

## ஊருணிகள் அமைக்காமை.

நகரத்தார்கள் தாங்கள் வாழும் ஊர்களில் எல்லாம் ஊருணிகள் அமைத்திருக்கின்றனர். ஆயினும் சில ஊர்களில் வேண்டிய அளவுக்கு ஊருணிகள் முன்னரே இருந்தமையால், நகரத்தார்கள் மேலும் புதிய ஊருணிகளை அமைத்திலர். அமராவதிபுதூர், அரண்மனை சிறுவயல், அலவாக்கோட்டை, க. அழகாபுரி, கொ. அழகாபுரி, கண்டனூர், கருங்குளம், கல்லல், காளையார்மங்கலம், சக்கந்தி, சொக்கநாதபுரம், சொக்கலிங்கபுரம் (மதகுபட்டி), பனங்குடி, பனையப்பட்டி, பாகனேரி, பிள்ளையார்பட்டி, புதுப்பட்டி (பொன்னமராபதி), பூங்குடி, மகிபாலன்பட்டி, மாநகரி, ராங்கியம், கொ. லெட்சுமிபுரம், விராமதி, விரையாச்சிலை, வெற்றியூர் ஆகிய இருபத்தைந்து ஊர்களில் நகரத்தார்கள் வெட்டிய திருக்குளங்கள் இல்லை; மற்ற ஐம்பத்து மூன்று ஊர்களில் நகரத்தார்களுக்குச் சொந்தமான அல்லது தொடர்புடைய ஊருணிகள் காணப்படுகின்றன.

## அடிப்படை தெரியாமை

நகரத்தார்கள், ஊருணிகளை எந்த நோக்கத்தில் அமைத்தனர் என்பதற்குத் தெளிவான ஆதாரங்கள் கிட்டில. ஊருணி குடிதண்ணீருக்காக வெட்டப்பட்டதா? குளி தண்ணீருக்காக வெட்டப்பட்டதா? கோயிலுக்குக் கிழக்கேயும் தெற்கேயும் ஊருணி அமைக்க வேண்டும் என்பதற்காக ஊருணி அமைத்தார்களா? ஊருணியை முதற்கண் நகரத்தார்கள் அமைக்க என்ன அடிப்படை? என்பதைத் தெளிவாக இன்று தெரிந்து கொள்ள முடியவில்லை.

## ஊருணிப்புறம்

நகரத்தார்கள் கட்டிய வீடுகள் மிகப் பெரியவை; இவற்றில் மழை பெய்யும்போது விழுகின்ற தண்ணீரைப் பெரிய அண்டாக்களில் பிடித்து வைத்துப் பயன்படுத்துவர். அதுபோல ஊருணிகள் மழை நீரைச் சேகரித்துத் தேக்கி நெடுங்காலம் குடிதண்ணீராகப் பயன்படுத்துவதற்கு ஏற்பட்டனவேயாகும். இதனாலேயே, ஊருணியை அமைக்கும்போது ஊருணியில் மழை நீர் நிரம்பவும் தூயதண்ணீர் வந்துசேரவும் ஊருணியை ஒட்டிய நிலப் பகுதியையும் ஊருணிப்புறமாக விலைக்கு வாங்கினர். குடிநீர், சுற்றுப்புறக்கேடுகளால் அருந்துதற்குத்

தகுதியற்றதாய்ப் போயின் குடிநீர் ஊருணி, குளி நீர் ஊருணியாகிவிடும். தண்ணீரை ஆற்று நீர், ஊற்று நீர், மழை நீர் என்று மூன்றாகக் கொள்வது மரபு. இவற்றில் நகரத்தார்கள் அமைத்த ஊருணிகள் அனைத்தும் மழை நீரைத் தேக்குதற்குரியனவாகும். இவ்வூருணிகளில் ஊற்று நீர் இருப்பதில்லை.

## திருக்கோயில் திருப்பணியாய் மலர்தல்

நகரத்தார்கள், தலைசிறந்த அறங்களுள் ஒன்றான தண்ணீர் ஊருணி அமைக்கும் அறத்தையே முதற்கண் செய்யலாயினர்; இதன் தொடர்ச்சியாக ஊருணிக் கரைகளில் அரசமரம், வேப்பமரம், வன்னி மரம், வில்லமரம், நெல்லி மரம் போன்ற பல்வேறு மரங்களை நட்டுக் கரைகளைக் காக்கலாயினர்; மரங்கள் வளர்ந்தபோது மரத்தடிகளில் பிள்ளையார், நாகர் போன்ற தெய்வ உருவங்கள் பிரதிட்டை செய்யப்பட்டன. அரசமரத்துக்கும் வேப்பமரத்துக்கும் கல்யாணம் செய்தனர். ஊருணியை ஒட்டித் தங்களின் பிள்ளையார் வழிபாட்டையும் நகரத்தார்கள் வலிவுபடுத்திக் கொண்டனர்.

'அரசமரத்துப் பிள்ளையார்' என்ற நிலை மாறிப் 'பிள்ளையார் கோயில்' என்று போற்றும் வளர்ச்சி ஏற்பட்டது. பிள்ளையார் கோயில் திருப்பணி நகரத்தார்களைச் சிவன் கோயில்கள் கட்டுவதில் கொண்டுபோய்விட்டது. விநாயகர் வழிபாட்டில் சிறந்திருந்த நகரத்தார்கள், கால வளர்ச்சியில், சிவனடியே சிந்திக்கும் சிவகோத்திரத்தினராயினர். நகரத்தார்களைத் திருகோயில் திருப்பணியில் ஈடுபடுத்தியவை, அவர்களின் திருக்குளப் பணிகள் என்பது உறுதி.

## ஊருணிகள் அமைந்த இடங்கள்

ஊருணிகள் அமைக்க நகரத்தார்கள் சில இடங்களைத் தேர்ந்தெடுத்திருந்தனர். அவையாவன : (1) ஊரின் எல்லைத் தொடக்கம் அல்லது முடிவு. (2) ஊரின் நடுமையப் பகுதி. (3) திருக்கோயிலுக்குக் கிழக்கு அல்லது வடக்குப் பக்கம். (4) ஊர் விட்டு ஊருக்குச் செல்லும் ஆற்றிடைப் பகுதிகள். ஊருணிக்குத் தேவையான தண்ணீர் வேண்டுமானால், ஊருணி ஊரை ஒட்டிய எல்லையில்தான் அமைக்கப் பெறும். அப்போதுதான் ஊருணிக்குத் தூய தண்ணீர் கிட்டும். காடு மேடுகளில் விழுகின்ற மழை நீர் திரண்டு நல்ல நீராக ஊருணிக்கு வரும். ஊர் மக்களின் கழிவு, வீடுகளின் குப்பை கூளங்கள் ஆகியன சேர்ந்த தண்ணீர், ஊருக்கு நடுவே அமைந்த ஊருணியில் கலக்க வாய்ப்புண்டு. பெரும்பாலும், ஊர் நடுவே அமைந்த ஊருணிகள் குளிநீர் ஊருணிகளாகவே விளங்குகின்றன.

## நகரத்தார் அறம் செய்த பாங்கு

நகரத்தார்கள் ஊருணிகளை நகர விடுதிகளைப் போலப் பொதுவாக அமைத்திலர். 1. சில தனிப்பட்ட குடும்பத்தார், தங்கள் சொந்தப் பொருளிலேயே இடம் வாங்கி ஊருணிகளையும் ஊருணிக்கு நீர்வரும் பகுதிகளையும் அமைத்தனர். 2. ஒன்றுக்கு மேற்பட்ட குடும்பத்தார் அமைத்த சில ஊருணிகளுண்டு. 3. தனிப்பட்ட கோயிலாரோ கோயில் உட்பிரிவான வகுப்பினரோ அமைத்த ஊருணிகள். 4. நகரப் பொதுவாக அமைந்த ஊருணிகள். இந்நான்கு அடிப்படையில் செட்டிநாட்டில் ஊருணிகள் தோண்டப் பட்டிருக்கின்றன.

உய்யக்கொண்டான் சிறுவயலில் பொன்னழகி சந்நிதிக்குத் திருக்குளத்தை நல்ல அழகன் செட்டியார் உண்டாக்கினார். பலவான்குடி புதூருணி குஞ்சான் செட்டியார் வகையறா அமைத்தது. அரிமழம் சிறிய பொற்குடையான் ஊருணி, நேமம் கோயிலாராலும் உய்யக் கொண்டான் சிறுவயல் சிவன் கோயிலூருணி இலுப்பைக்குடிக் கோயிலாராலும் நிறுவப் பெற்றவை. ஆத்தன்குடிச் சிவன் கோயில் சுவாமி சந்நிதிக்குளம், குருவிக் கொண்டான்பட்டி சிவன் கோயில் குளம், சண்முகநாதபுரம் பிள்ளையார் கோயில் குளம், ஆகியன நகரப் பொதுவாகக் கட்டப்பட்டவை. அரிமழம் பெரிய பொற்குடையான் ஊருணி காடப்ப செட்டியார், சடையன் செட்டியார் குடும்பத்தினரால் ஏற்பட்டவை.

## செட்டிநாட்டுச் சிறப்புகள்

ஒரே ஊருக்குள் பல ஊருணிகளை நகரத்தார்கள் ஏற்படுத்தியிருக்கின்றனர். கடியாபட்டி, பலவான்குடி, புதுவயல், பொன்னமராவதி ஆகிய ஊரிகளில் மூன்று ஊருணிகளும், செம்பனூர், சொக்கலிங்கம்புதூர் (சொக்கனேந்தல்), நாட்டரசன் கோட்டை, நெற்குப்பை, மிதிலைப்பட்டி, வலையபட்டி ஆகிய ஊர்களில் நான்கு ஊருணிகளும் தேவகோட்டையில் ஏழு ஊருணிகளும் ராயவரத்தில் ஒன்பது ஊருணிகளும் நகரத்தாரால் உண்டாக்கப்பட்டவை. செட்டிநாட்டில், ராயவரம் வெ.மு. குடும்பத்தாரே ஏழுக்கு மேற்பட்ட ஊருணிகளை ஒரே ஊரில் அமைத்தவர்கள் என்று பெருமை பெறுகின்றார்கள். நிறைய ஊருணிகள் அமைந்த ஊர் என்ற சிறப்பு இளையாத்தக்குடிக்கும் ராயவரத்துக்கும் உரியதாகும்.

## சுற்றுப்புற ஊருணிகள்

செட்டிநாட்டைச் சுற்றிச் அமைந்த குன்னக்குடி, கோயிலூர், கோட்டூர் (நயினார்கோயில்), கோட்டூர் (புதுக்கோட்டை), சாக்கோட்டை, செங்கரை, சேந்தம் பட்டி, இளஞ்சாவூர், அரளிப்பாறை, இலங்குடி, உமையாள்புரம், கண்டதேவி ஆகிய ஊர்களில் ஊருணிகள் அமைக்கப்பட்டிருந்தன. தேவாரப்பாடல் பெற்ற தலங்கள் இருபத்தொன்றில் நகரத்தார்கள் திருக்குளத் திருப்பணிகள் செய்திருக்கின்றனர். இவை பழைய ஊருணிகளைப் புதுப்பித்தனவாகும்.

சிவன் கோயிலில் அம்மன் சந்நிதி முன்னர் உள்ள திருக்குளங்களை நகரத்தார்கள் திருத்தமாகவும் சிறப்பச் சிறப்புடனும் அமைத்திருக்கின்றனர்.

## ஆற்றிடை அமைந்த ஊருணி

ஓர் ஊரிலிருந்து இன்னொரு ஊருக்குப் போகும்போது, பழைய நாளில் நடந்தோ மாட்டு வண்டியிலோதான் நகரத்தார்கள் போவர். போக வேண்டிய தொலை மிகுதியாக இருந்தால், அவர்கள் இடைவழியில் எங்கேனும் ஓரிடத்தில் தங்கிச் செல்வர்; அல்லது இளைப்பாறிச் செல்வர். தாங்கள் உடன் கொண்டு வரும் கட்டுச் சோற்றை ஊருணிக் கரையில் மரத்தடியில் வைத்து உண்டு களைப்பாறிப் பின் பயணத்தைத் தொடர்வர். இன்றைக்கும், நகரத்தார்கள் திருமணத்தில் பெண்ணழைத்துப் போகும்போது கட்டுச்சோறு கரைக்கும் மரபு பின்பற்றப்படுகிறது. வழிப்போவாரின் நலங்கருதிப் பாதை வழிகளில் ஊருணிகள் நிறுவப்பட்டு மரங்களும் நடப்பட்டன. ராயவரம் வெ.மு. குடும்பத்தினர், இராயவரத்துக்கும் அரிமளத்துக்குமிடையில் செங்கரையில் ' நல்ல பிள்ளை பெற்றான் ஊருணி' யை வெட்டியமைத்தனர்.

## பெயர் வழங்கல்

ஊருணிகளை அமைக்கும்போது ஊருணிகளுக்குப் பெயர் வைத்தும் ஊருணிகளை அமைத்தனர். ' நல்ல பிள்ளை பெற்றான் ஊருணி' பொற்குடையான் ஊருணி, மாணிக்கவல்லி, சோழ சிரோன்மனி என்பன போல ஊருணிகளுக்குப் பெயரமைந்தன. பி. அழகாபுரி கலங்காத கண்ட விநாயகர் கோயில் ஊருணிக்குக் 'கமலாயம்' என்று பெயரிடப்பட்டது. திருவாரூர் கமலாய ஊருணிபோல, இந்த ஊருணியும் ஐந்து வேலி நிலப் பரப்பில் அமைந்தது. ஆனால், ஊருணிகளுக்கு இடப்பட்ட பெயர்கள் காலப்போக்கில் மறைந்து, காரணப் பெயர்களாலேயே அழைக்கப் பட்டன.

## ஊருணிகளின் அமைப்பு

நகரத்தார்கள் தண்ணீரின் தேவையையும் இன்றியமையாமையையும் கருதி நான்கு புறமும் கரை அமைத்து ஊருணியைக் கட்டினர். மண்ணை வெட்டிக் கரை அமைக்கப்பட்ட ஊருணிகளில், தண்ணீர் வருவதற்கு மட்டும் மடைகள் கற்களால் கட்டப்பட்டிருந்தன. நீர் முகக்கப் படிக்கட்டுகள் இல்லாத போதும், மடைகள் மட்டும் கட்டப்பட்டன; அவை கட்டபடவில்லை எனில் வெள்ளமாய்த் தண்ணீர் புகும்போது கரை உடைந்துவிடும் ; ஊருணி மண் மேடிட வாய்ப்புமுண்டு. சிறுகூடல்பட்டி, பிள்ளையார் கோயில் ஊருணியைக் கு.ப.அ. குடும்பத்தார் அமைத்தனர். இவ்வூருணியின் நாற்புறமும் மண் மேடுகள் ; அவற்றில் படிகள் கூட இல்லை. அவசரத்தையும் பொருள் சிக்கனத்தையும் கருதிச் சில ஊருணிகள் இவ்வாறு அமைந்தனவாதல் வேண்டும்.

## அமைப்பின் அழகு

ஊருணிகள் சிலவற்றின் ஒரு பக்கமோ இரு பக்கமோ படித்துறைகள் கட்டப்பட்டிருக்கும்; ஏனைய பக்கங்களில் மண்ணாகவே விளங்கும். திருக்கோயிலுக்கு முன்னர் அமைந்த பெரும்பாலான ஊருணிகள் மிக மிக நேர்த்தியாகக் கட்டப்பட்டவை. கீழ்ச்சிவல்பட்டி - பி. அழகாபுரி கலங்காத கண்ட விநாயகர் ஊருணி, செட்டிநாட்டில், வெள்ளைக் கற்களால் கட்டப்பட்ட மிகப் பெரிய ஊருணியாகும். இவ்வூருணி வெள்ளைக் கற்களால் ஆளோடியுடன் (ஆலவடி) நேர்த்தியாக (Fine) அடுக்கப்பட்டுக் கட்டப்பட்டிருக்கிறது. ஊருணி ஒரே ஆழமாக இல்லாமல் ஆறு அலங்கம் உடையதாகக் கட்டப்பட்டிருக்கிறது. அவை ஒன்றுள் ஒன்றாக அடுக்கடுக்காக அமைந்திருக்கின்றன. ஒவ்வொரு மட்டத்திலும் வலிய சுவர் கட்டப்பட்டிருக்கிறது. இதனால் ஊருணியின் உள்பகுதி எக்காலத்திலும் ஒரே மட்டமாகப் போவதற்கு வாய்ப்பில்லை. ஊருணியின் நடு மையம் சதுரமாகவும் பள்ளமாகவும் விளங்குகிறது. இதற்கு அடுத்த அலங்கம் சுவராகக் கட்டப்பட்டிருக்கிறது. இவ்வூருணியில் மழை நீருடன் ஊற்று நீரும் வர ஆழ்குழாயும் போடப்பட்டுள்ளது. இத்தகைய ஊருணியின் உள்ளமைப்பைக் கீழ்ச்சிவல்பட்டி அம்மன் சந்நிதி ஊருணியிலும் இளையாத்தக்குடிக் கைலாச விநாயகர் கோயிலூருணியிலும் காணமுடிகிறது. கமலாலய ஊருணியில் நீர் நிறைந்திருக்கும் போது எல்லாப் படித்துறைகளிலும் நீர் மட்டம் ஒரே அளவாக இருக்கும் வண்ணம் நீர் மட்டம் கட்டியிருப்பது இந்த ஊருணியின் சிறப்பு அம்சமாகும்.

நீர் வருவதற்கு அழகான மடை இருப்பது போல ஊருணியில் நீர் நிறைந்தால் மிகுந்து வெளியே போவதற்கு என்று தனியே ஒரு போக்கு மடையும் வைக்கப்பட்டிருக்கிறது. ஆளோடியின் மேற்பகுதி நெடுகிலும் விளக்கேற்ற மாடக் குழிகள் அமைக்கப்பட்டுள்ளன. திருக்கார்த்திகைத் திருநாள் இரவன்று மாடக் குழிகளில் கார்த்திகை விளக்கேற்றுவர் ; ஊருணி நிறையத் தண்ணீர் இருக்கும் போது தீபங்கள் ஒளிவீசித் திகழும் காட்சி கண்ணுக்கு விருந்தாகும்.

### கலைச் சிறப்புடைய ஊருணி

மிக நன்றாக வெள்ளைக் கல்லாலோ செம்புரான் கல்லாலோ கட்டப்பட்ட ஊருணிகளுள் எண்கோண வடிவாகக் கட்டப்பட்டது திருமெய்யம் பெருமாள் கோயிலூருணி - சத்திய புஷ்கரிணி - மிக்கக் கவினுடையது. இக்குளம் இன்றும் தன் கட்டிளமை குன்றாமல் இருக்கிறது. திருமாலின் அஷ்டாச்சரம் போல ஊருணியும் எண்கோணமாய் வடிவமைக்கப்பட்டிருக்கிறது. இதனைக் கட்டியவர் காரைக்குடி பிள்ளையார்பட்டிக் கோயில் மெ. முருகப்ப செட்டியார் குமாரன் இராமநாதன் செட்டியார். இப்பணி நிறைவேறியது காளயுக்தி ஆண்டு தை மாதம் 12ஆம் தேதி (கி.பி. 1919). இது சிறிய ஊருணியாக இருந்தாலும் கலை நுட்பமும் தொழில் நுட்பமும் அமையக் கட்டப்பட்டிருக்கிறது.

### மடைகளின் அமைப்பு

பள்ளத்தூரில் அ.மு. கட்டிய ஊருணிக்குத் தண்ணீர் வருவதற்கு ஏறத்தாழ மூன்றரைக் கிலோ மீட்டர் தொலை மூடுமடை அமைக்கப் பெற்றிருக்கிறது. காட்டுக்குள் பெய்யும் மழைத் தண்ணீர் ஊருணிக்கு வரவேண்டும் என்பதற்காகவும் தூய நீர் மக்கட்குக் கிட்ட வேண்டும் என்பதற்காகவும் இந்த ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. கோனாபட்டு அழகப் பெருமாள் ஊருணிக்கு ஒரு கிலோ மீட்டர் தொலைவிலிருந்து மூடுமடை கட்டப்பட்டிருக்கிறது. 'செய்வன திருந்தச் செய்' என்பதற்கேற்ப நகரத்தார்கள் திருக்குளங்களைச் செவ்வனே அமைத்துச் சீரிய வண்ணம் கட்டியிருக்கின்றனர்.

### சிற்பவளம்

நகரத்தார்கள் ஊருணியைத் தண்ணீர் தேக்கி வைக்கும் இடமாக மட்டும் கருதிலர். அவற்றைக் கலை நிலையமாகவும் கட்டினார். ஊருணிப் படிக்கட்டுகளில் பூரண கலசத்துடன் யானையும் பாகனும் போன்ற உருவங்கள் பொலிவுடன் செதுக்கப் பட்டிருக்கின்றன. இவை ஊருணியின் அளவுக்குத் தகப் பெரியனவாகவும் சிறியனவாகவும் விளங்கின. படிகளில் தாமரைப் பூக்கள், இலைக் கருக்குகள், கோலங்கள் ஆகிய அழகு வடிவங்கள் படிக்கட்டுகளில் செதுக்கப்பட்டன. கோயிலூர் ஊருணியைக் கலைக்கூடமாகச் சிதம்பரையா உருவாக்கி மாத்தூர் நகரத்தார்க்கு உரிமைப்படுத்தினார். இவ்வூருணியில் நீராழிமண்டபம் உண்டு. படிக்கட்டுகளில் - ஆளோடி உயர அளவில் - ஒருபுறம் விநாயகரும் அவருக்கு எதிர்ப்புறமும் முருகனும் புடைப்புச் சிற்பமாக வடிக்கப்பட்டனர். இவை ஆகம மரபு தழுவி அமைந்தவை. ஒரு பக்கத்துக்கு ஒரு பாதை அமைக்கப்பட்டது ; மிகப் பெரிய ஊருணிகளில் ஒரு பக்கத்திற்கு இரண்டு படித்துறைகள் இருந்தன. 'நகரத்தார் ஊருணிகளின் கலைச் சிறப்பு' தனியாராய்ச்சிக்குரிய பெரிய களமாகும்.

## அரண் அமைந்த ஊருணிகள்

ஊருணிகளில் குப்பை கூளங்கள் பறந்து விழாமலும் விலங்குகள் சென்று தண்ணீரின் தூய்மையைக் கெடுத்துவிடாமலும் ஊருணியைச் சுற்றிக் கல்தூண் நாட்டிக் கம்பி போட்டிருந்தனர் ; வேறு சில இடங்களில் ஈட்டியைப் போலக் கம்பிகள் அமைந்த தடுப்புகளைத் தூண்களுக்கு இடையே பொருத்தி ஊருணியைச் சுற்றி வேலி இட்டிருந்தனர். கீழச்சிவல்பட்டி சிவன் கோயில் ஊருணி, இளையாத்தக்குடி கைலாச விநாயகர் கோயிலூருணி ஆகியவற்றில் மிகக் காவலான இந்த இரும்பு வேலித் தடுப்பை இன்றும் காணமுடியும். இவை இரண்டும் அன்றி ஊருணியைச் சுற்றிச் சுவர் கட்டிக் காப்பதும் இன்னொரு வகையான அரண் அமைத்தலாகும். இராயவரம் வெ. மு. குடும்பத்தினர் தங்கள் சிவன் கோயில் ஊருணிக்கு இவ்வாறு காப்பரண் எழுப்பியிருக்கின்றனர்.

## ஊருணிகளின் நோக்கம்

ஊருக்கு வேண்டிய தண்ணீர்த் தேவையை நிறைவேற்றுவதே ஊருணிகள் அமைப்பதின் முதன்மையான நோக்கமாகும். ஆற்று நீரைத் தேக்க அணைகள் அமைப்பது போல மழை நீரைத் தேக்க ஊருணிகள், கண்மாய்கள் இன்றியமையாதன. கண்மாய்கள் நீர்பாசனத்திற்குரியவை. ஊருணிகள் அல்லது குளங்கள் குடிதண்ணீர்க் குரியவை. தேவையானபோது தண்ணீரை எடுத்துக்கொள்ளும் வகையில் நீர் தேக்கி வைக்கப்பட்டாலும், அந்த ஊரின் நிலத்தடி நீர் மட்டம் குறையாமல் காக்க ஊருணித் தண்ணீர் பெரிதும் துணைபுரிகின்றது. கும்பகோணம் பகுதியில் ஆற்றுக்காலில் காவிரித் தண்ணீர் ஓடினால் தான், அந்த வட்டாரக் கிணறுகளில் தண்ணீர் மட்டம் உயர்ந்திருக்கும். அதுபோலச் செட்டிநாட்டு ஊருணிகளில் தண்ணீர் நிறைய இருந்தால், அவ்வூர்க் கிணறுகளிலும் நீர் மட்டம் உயர்ந்திருக்கும். ஆதலின் செட்டிநாட்டு நிலத்தடி நீர் வளத்துக்கு ஊருணிகள் ஆதாரமானவை என்பது திண்ணம்.

## தருமக் கேணிகள் தோன்றுதல்

மக்கள் தங்கள் தேவைகளை நிறைவேற்றிக் கொள்வதில் மிக எளிய நெறிகளைப் பின்பற்றலாயினர். கால வளர்ச்சியில் விளைந்த இந்த மாறுதல்கள் தவிர்க்க முடியாதவை. தண்ணீரை நாடி ஊருணிக்கு மக்கள் சென்ற நிலை மாறி மக்களைத் தேடித் தண்ணீர் குழாய்களின் வழி வரலாயிற்று. ஊருணிகள் மேல் நிலைத் தொட்டிகளாய் மாறுதலுக்கு இடையே, நகரத்தார்கள், கிணறுகளை அமைக்கும் அறத்தையும் மேற்கொண்டனர். மழை சில ஆண்டுகள் பெய்யாது பொய்த்தபோது மழை நீரின்றி மக்கள் வாடினர் ; அக்காலை, நகரத்தார்கள் ஊற்று நீரின் சிறப்பை உணர்ந்து அதனைப் பெற்றிடப் பல்வேறு கிணறுகளை வெட்டினர். இவற்றை மக்கள்'தர்மக்கேணி' என்பர். இத்தகைய கிணறுகள் இன்றும் மக்களால் பயன்படுத்தப் படுகின்றன.

## மேல்நிலைத் தொட்டிகள்

ஊருணி அமைத்து நீர் வளம் கண்ட நகரத்தார்கள், தங்களின் அறப் போக்கைக் காலத்துக்கேற்பவும் மாற்றிக் கொண்டனர் ; ஊருணி அறம், மிகுந்த பொருட் செலவுடையதாயும் மழை பெய்தால் தான் நீர் கிட்டுவதாயும் அமைந்தது. எனவே குறைந்த பொருட் செலவில் சிறிய நிலப் பரப்பில் நிலத்துள் நிறைந்த

ஊற்று நீரை மக்கள் பயன்படுத்தத் தருமக் கேணி உண்டாக்கினர். இதனைத் தொடர்ந்து கிணற்றிலிருந்து நீரை மேலேற்றிக் குழாய்கள் மூலம் குடி நீர் வழங்கும் அறத்தை நகரத்தார்கள் செய்தனர். கானாடுகாத்தான் திவான்பகதூர் சா. ராம. மு. இராமசாமிச் செட்டியார் 23.12.1915இல் ரூபாய் இரண்டு இலட்சம் செலவில் சிதம்பரம் நகரம் முழுமையும் குடிதண்ணீர்க் குழாய்கள் அமைத்து அறம் செய்தார். காரைக்குடியில் மெ. செ. மெ. மெ. மெய்யப்ப செட்டியார் ஆழ்த்துளைக் கிணறு அமைத்து மேல் நிலைத் தொட்டி இருபது அமைத்துக் குடிதண்ணீர் கி. பி. 1936இல் அளித்தார். உள்ளூர் மக்களுக்குத் தூய குடி தண்ணீர் கிடைக்க மேல்நிலைத் தொட்டிகள் பயன்பட்டன.

## தண்ணீர்ப் பந்தர்கள்

உள்ளூர் மக்களின் தண்ணீர்த் தேவையை நிறைவேற்றியது போல வழிப் போக்கர்களின் தண்ணீர்த் தேவையைத் தீர்க்கத் தண்ணீர்ப் பந்தர்கள் ஏற்பட்டன. பாதை வழிகளில் ஆங்காங்கே ஊருணிகள் அமைத்த நிலை மாறித் தண்ணீர் பந்தர்கள் தோன்றின ; இதற்கெனத் தனிக் கட்டிடம், தண்ணீர் வண்டி எனச் செலவுகள் மிகுந்தன. தண்ணீர் பந்தர்கள் இரண்டு ஊர்களுக்கு இடையேயோ ஊரின் வெளி எல்லையிலோ நிறுவப்பட்டிருந்தன. இவை நிலையாக ஆண்டு முழுவதும் செயல் பட்டன. சில தண்ணீர்ப் பந்தர்கள் திருவிழாக் காலங்களில் மட்டும், விழாவுக்கு வருவோர் போவோருக்கு உதவும் வண்ணம் விளங்கும். இவ்வாறு அமையும் தண்ணீர்ப் பந்தர்களின் எண்ணிக்கை மிகுதி. இவற்றில் நீர் மோர், பானகம், மாங்காய் ஊறுகாய் போன்றனவும் வழங்கப்பட்டன.

நிலையாகத் தண்ணீர்ப் பந்தர்கள் நடத்திட வசதியான கட்டிடங்கள் கட்டப் பட்டன. இவற்றில் வழிபோக்கர்கள் சற்றுக் களைப்பாறிப் போகவும் போதிய இடவசதிகள் இருந்தன. தண்ணீர்ப் பந்தர்ப் பணியாளர் குடியிருப்பும் அதனுள்ளேயே அமைக்கப்பட்டது. இந்த அறத்தை நடத்தியோர்க்குத் 'தண்ணீர் பந்தல் கார வீடு' என்ற பட்டப் பெயரும் வழங்கிற்று. இன்று தண்ணீர் பந்தல்கள் எல்லாம் மறைந்துவிட்டன; ஆனால் பட்டப் பெயர்கள் மட்டும் நிலைத்திருக்கின்றன.

## விலங்கினங்களுக்கு அறம்

மக்கள் நலம் பெற ஊருணி, தண்ணீர் பந்தர், மேல்நிலைத் தொட்டி, கிணறுகள் என்று பல பணிகள் ஆற்றிய நகரத்தார்களிடையே விலங்குகளைப் பற்றி எண்ணிய நகரத்தார் திருமகன் ஒருவரும் உளர் ; கடியாபட்டி தீ. நா. முத்தையா செட்டியார் நினைந்து போற்றத் தக்க சான்றோராவார். அவர் விலங்கினங்கள் நீரருந்த திருப்பாதிரிப்புலியூரில் நான்கு இடங்களில் பாதாளக் கிணறுகள் நிறுவினார். இம்மரபினரே புதுக் கோட்டைச் சந்தையில் கால் நடை நீரருந்த கலையழகு தவழும் நீர்த் தொட்டிகளை அமைத்திருக்கின்றனர். இத்தொட்டியின் வடபுறமும் தென்புறமும் ஒரே சமயத்தில் முப்பது கால் நடைகள் தண்ணீர் குடிக்க முடியும். சந்தைக்குள்ளே இருந்து பதினைந்து கால் நடைகளும் சந்தைக்கு வெளியே இருந்து பதினைந்து கால் நடைகளும் தண்ணீர் குடிக்க முடியும். இத்தொட்டியில் தூசிகள் விழாமலும் நீர் அருந்தும் கால் நடைகளுக்கு வெயில் விழாமலும் மேலே சுதையால் மறைவு கட்டப்பட்டிருக்கிறது. இதனமைப்பு, வேறெங்கும் காணமுடியாதது. இதில் பளிங்குக் கற்களும் இலச்சினைகளும் பதிக்கப்

பட்டுள்ளன. மக்கள் நலம் நாடும் நாட்டில், விலங்குகளின் நலம் நாடுகின்ற இக்குடும்பத்தினர் வணக்கத்துக் குரியோராவர். இத்தொட்டியைச் சிதைத்துவிடாமல் காப்பாற்ற வேண்டியது நகரத்தார்களின் கடமை.

நகரத்தார்களின் ஊருணித் தருமம் ஒன்றின் ஒன்றாய் ஆல் போல் தழைத்து அருகு போல் வேரோடியிருக்கிறது. இவர்களின் உயரிய பணி, பத்தொன்பதாம் நூற்றாண்டு தமிழ்ச் சமுதாய வரலாற்றில், பொன்னெழுத்துகளால் பொறிக்கத்தக்கது.

| வ. எண் | ஊர் | ஊருணி | அறம் செய்தவர் |
|---|---|---|---|
| 1. | அரிமளம் | பெரிய பொற்குடையான் ஊருணி | காடப்பசெட்டியார் சடையன் செட்டியார் |
| 2. | | சிறிய பொற்குடையான் ஊருணி | நேமம் கோயிலார் |
| 3. | அரியக்குடி | பிள்ளையார் கோவில் குளம் | அழ. கி. முரு. குடும்பம் |
| 4. | ஆத்தங்குடி | சிவன் கோயில் திருக்குளம் | நகரப் பொது |
| 5. | ஆ. தெக்கூர் | ஊருணி | நா. பழ. |
| 6. | ஆவினிப்பட்டி | ஊருணி | நகரப் பொது |
| 7. | உ. சிறுவயல் | சிவலாயச் சந்நிதிக் குளம் | இலுப்பைக்குடிக் கோயிலார் |
| 8. | | பொன்னழகியம்மை சந்நிதிக் குளம் | நல்லழகன் செட்டியார் |
| 9. | உலகம்பட்டி | ஞானியார் மடத்து முருகன் கோயில் குளம் | கரு. பழ. கரு. |
| 10. | | வேறொரு குளம் | |
| 11. | | வேறொரு குளம் | |
| 12. | ஒக்கூர் | ஊருணி | சி. கரு. சி. லெ. |
| 13. | கடியாபட்டி | வெள்ளைக்கல் திருக்குளம் | கொத்தமங்கலம் ராம.அ.பொதுக்குடும்பம் |
| 14. | | ஊருணி | நகரப் பொது |
| 15. | | ஊருணி | நகரப் பொது |
| 16. | கண்டமாணிக்கம் | பிள்ளையார்கோயில் குளம் | நகரப் பொது |

| வ. எண் | ஊர் | ஊருணி | அறம் செய்தவர் |
| --- | --- | --- | --- |
| 17. | கண்டவிராயன்பட்டி | சிவாலயத்தின் வடபுறமுள்ள குளம் | பழ. கரு. |
| 18. | | தண்டாயுதபாணி குளம் | தெ. சி. நா. |
| 19. | காரைக்குடி | நாகநாதசுவாமி ஊருணி | ராய. நாகப்பசெட்டியார் |
| 20. | கீழச்சிவல்பட்டி | சிவன் கோயிலூருணி | நகரப் பொது |
| 21. | கீழச்சிவல்பட்டி | கல்லுக்கட்டி ஊருணி | மு. அள. ஆரி. வகை |
| 21A. | கீரணிப்பட்டி | இராங்கியம். மு. பெரி உலகம்மை ஆச்சி ஊருணி | மு. பெரி. |
| 22. | பி. அழகாபுரி | கமலாலய ஊருணி | மாத்தூர் க.தெ. மற்றும் பிறர் |
| 23. | குருவிக்கொண்டான் பட்டி | திருக்குளம் | பொது |
| 24. | குழிபிறை | ஊருணி | பொது |
| 25. | கொத்தமங்கலம் | ஊருணி | பொது |
| 26. | கொப்பனாபட்டி | பிள்ளையார்கோவில் ஊருணி | பொது |
| 27. | கோட்டையூர் | " | பொது |
| 28. | | " | பொது |
| 29. | கோனாபட்டு | ஊருணி | பொது |
| 30. | | அழகப் பெருமாள் ஊருணி | கற்பக விநாயகன் |
| 31. | | ஊருணி | நகரப் பொது |
| 32. | சண்முகநாதபுரம் | பிள்ளையார்கோயில் ஊருணி | " |

| வ. எண் | ஊர் | ஊருணி | அறம் செய்தவர் |
|---|---|---|---|
| 33. | | " | " |
| 34. | சிறுகூடல் பட்டி | " | கு. ப. அ. |
| 35. | செம்பனூர் | ஊருணி | நகரத்தார் |
| 36. | | " | " |
| 37. | | " | " |
| 38. | | " | " |
| 39. | செயங்கொண்டபுரம் (செக்காலை) | பிள்ளையார்கோயில் குளம் | வாரியப்பட்டி சுப்பிரமணியன் செட்டியார் |
| 40. | | கல்கட்டுக்குளம் | நாட்டார்வயல் சோம சுந்தரம் செட்டியார் |
| 41. | செவ்வூர் | ஊருணி | நகரத்தார் |
| 42. | சொக்கலிங்கம் புதூர் (சொக்கனேந்தல்) | பிள்ளையார் கோயில் ஊருணி 20.6.1918 | " |
| 43. | | செட்டியார் ஊருணி | நகரத்தார் சிலர் |
| 44. | | தண்ணீர்ப்பந்தல் குளம் | |
| 45. | | சத்திரம் ஊருணி | |
| 46. | சோழபுரம் | ஊருணி | பி. சு. ஆத. |
| 47. | சொர்னநாதபுரம் | தாணிச்சாவூருணி | சொர்னநாதபுரம் நகரத்தார் |
| 48. | தேவகோட்டை | ஊருணி | மு.கு.மு.ப.குடும்பத்தார் |
| 49. | | எழுவங்கோட்டையில் ஊருணி | முத்து. கரு. |

| வ. எண் | ஊர் | ஊருணி | அறம் செய்தவர் |
|---|---|---|---|
| 50. | | திண்ணன் செட்டியார் ஊருணி | " |
| 51. | | கைலாசநாதர் கோயில் சந்நிதித் திருக்குளம் | பழ.செ.குடும்பத்தினர் |
| 52. | | புதூர்ப் பிள்ளையார் குளம் | ராம.அரு.அரு. அருணாசலம்செட்டியார் |
| 53. | | கருத்தான் ஊருணி | பழ. ராம |
| 54. | | ஊருணி | வீர. அழ. பொது |
| 55. | | ஊருணி | வள்ளியப்ப செட்டியார் வகையினர் |
| 56. | தேனிபட்டி | பிள்ளையார்கோயில் குளம் | செல்லப்ப செட்டியார் வகையரா |
| 57. | | சிவாலயத் தென்புறக் குளம் | நகரத்தாரில் சிலர் |
| 58. | | மேற்படி இன்னொரு ஊருணி | நகரத்தாரில் சிலர் |
| 59. | நடராஜபுரம் | விநாயகர் கோயில் கீழ்புறக்குளம் | நகரப் பொது |
| 60. | நற்சாந்துபட்டி | பெருமாள் கோயிலூருணி | வீ. மு. வீரப்ப செட்டியார் |
| 61. | நாச்சியாபுரம் | சிவாலாய ஊருணி 2.7.1906 | சுப. ராம. இராமன் செட்டியார் |
| 62. | நாட்டரசன் கோட்டை | அம்மை கோயில் குளம் கல் திருப்பணி 1874 | வெ. க. சு. |
| 63. | | தீர்த்தாகுளம் | லெ.லெட்சுமணன் செட்டியார் |

| வ. எண் | ஊர் | ஊருணி | அறம் செய்தவர் |
|---|---|---|---|
| 64. | | அடைக்கப்ப செட்டியாருணி | ................. |
| 65. | | மாணிக்கவல்லி | ................. |
| 66. | நெற்குப்பை | 1. ஊருணி | ................. |
| 67. | | 2. ஊருணி | ................. |
| 68. | | 3. ஊருணி | ................. |
| 69. | | 4. ஊருணி | ................. |
| 70. | பலவான்குடி | திருக்குளம் | ராம. கு. குடும்பத்தார் |
| 71. | | புதூருணி | குஞ்சான் செட்டியார் வகையரா |
| 72. | | குளம் | நகரத்தார் சிலர் |
| 73. | பள்ளத்தூர் | மூன்றரைக் கல் மூடு மடையுடன் திருக்குளம் | அ. மு. |
| 74. | | வடக்கு ஊருணி | |
| 75. | | கிழவன் செட்டியார் குளம் | |
| 76. | பறியாமருந்துப்பட்டி | ஊருணி | முத்து. கு.மு.வகையார் |
| 77. | புதுவயல் | கைலாச விநாயகர் கோயிலூருணி | இளையாத்தக்குடி பட்டணசுவாமி வகையினர் |
| 78. | | சாக்கோட்டைப்பாதை ஊருணி | முருகப்ப செட்டியார் |
| 79. | | கரணாக்குடியார் ஊருணி | ................. |

| வ. எண் | ஊர் | ஊருணி | அறம் செய்தவர் |
|---|---|---|---|
| 80. | பூலாங்குறிச்சி | சண்முகநதி(ஊருணி) 4.6.1889 | ராம. ப. வ. பொதுக் குடும்பத்தார் |
| 81. | பொன்னமராபதி | கோவில் குளம் புதுப்பித்தல் | பழ. முரு. பழ. பழநியப்பசெட்டியார் |
| 82. | | சேங்கை ஊருணி | முத்துக்கருப்பன் செட்டியார் |
| 83. | | கலுங்குப்பாறை ஊருணி | மு. கா. லெ. கா. லெட்சுமணன் செட்டியார் |
| 84. | மிதிலைப்பட்டி | 1.ஊருணி<br>2.ஊருணி<br>3.ஊருணி<br>4.ஊருணி | நகரத்தார் சிலர்<br>"<br>"<br>" |
| 85. | ஆ. முத்துப்பட்டிணம் | பிள்ளையார்கோவில் ஊருணி | " |
| 86. | மேலைச்சிவபுரி | சோழசிரோன்மணி | வ.பழ.வி.குடும்பத்தார் |
| 87. | ராயவரம் | 1.ஊருணி | நகரத்தார் சிலர் |
| 88. | | 2. பொன்னாத்தா ஊருணி | வெ. மு. |
| 89. | | 3. சிவன் கோயில் ஊருணி | " |
| 90. | | 4. ஊருணி | " |
| 91. | | 5. ஊருணி | " |
| 92. | | 6. " | " |
| 93. | | 7. " | " |
| 94. | | 8." | " |
| 95. | | 9." | " |
| 96. | நெ. லெட்சுமிபுரம் | குளம் | நகரப்பொது |

| வ. எண் | ஊர் | ஊருணி | அறம் செய்தவர் |
|---|---|---|---|
| 97. | வலையபட்டி | பிள்ளையார் கோவில் குளம் | அ. மு. நா. நாகப்ப செட்டியார் |
| 98. | | அடைக்கன் குளம் | ந. ராம. வகை |
| 99. | | வையாபுரிக் குளம் | வயிL வ. |
| 100. | | பிள்ளையார் கோயில் முன்னமைந்த குளம் | நகரத்தார் சிலர் |
| 101. | வேகுப்பட்டி | ஊருணி | நகரப் பொது |
| 102. | வேந்தன் பட்டி | திருக்குளம் | நகரத்தார் |
| **திருத்தலங்கள்** | | | |
| 1. | குன்றக்குடி | வடக்கு வையாபுரிக் குளம் | .... |
| 2. | | தெற்கு வையாபுரிக் குளம் | .... |
| 3. | | சரவணப் பொய்கை | தேவகோட்டை அள. சுப. சு. |
| 4. | | சண்முக நதி பிங்கள ஆண்டு தை மாதம் | காரைக்குடி அண. சா.அண.சாமிநாதன் செட்டியார் தை தாயார் வெள்ளாச்சி ஆச்சி |
| 5. | | மேற்கு மருதாபுரிக் குளம் -சீர்திருத்தம் | |
| 6. | கோயிலூர் | திருக்குளம்-ஆளோடி மைய மண்டபம் | சிதம்பரையா |
| 7. | | குடி தண்ணீர்க் குளம் | காரைக்குடி ப. முரு. |

| வ. எண் | ஊர் | ஊருணி | அறம் செய்தவர் |
| --- | --- | --- | --- |
| 8. | கோட்டூர் (புதுகை) | கோயில் திருக்குளம் (22.1.1929) | தேவகோட்டை திண்ணன் செட்டியார் வகையினர் |
| 9. | கோட்டூர் (புதுகை) | கோயில் குளம் (22.1.1929) | கடியாபட்டி. தீ. சொ. இராமசாமிச்செட்டியார், முருகப்ப செட்டியார் கிருஷ்ணப்பசெட்டியார் |
| 10. | சாக்கோட்டை | சோழன் குளம் | குமா |
| 11. | செங்கரை | நல்லபிள்ளை பெற்றான் ஊருணி | வெ. மு. |
| 12. | இளஞ்சாவூர் | முத்துமாரியம்மன் கோயிலூருணி | காரைக்குடி இரணிக் கோயில் |
| 13. | சேந்தம்பட்டி | பிள்ளையார் கோயிலூரணி | பாடுவார் முத்தப்பச் செட்டியார் வழியினர் |
| 14. | அரளிப்பாறை | ஊருணி | நெற்குப்பை ப. ராம. லெ. ராம. இராமன் செட்டியார் |
| 15. | இலங்குடி | ஊருணி | காரைக்குடி பி. அ. குடும்பத்தார் |
| 16. | | கற்கட்டுக் குளம் | இளையாத்தக்குடி ஒக்கூர் நகரத்தார் |
| 17. | உமையாள்புரம் | ஊருணி | கடியாபட்டி |
| 18. | கண்டதேவி | கண்மாய்க்கரை | வயி. நாக. ராம. பொதுவில் செப்பனிட்டார் |
| 19. | | ஊருணி | ஷை - கட்டினார் |

பாடல் பெற்ற திருத்தலங்கள்

| வ. எண் | ஊர் | ஊருணி | அறம் செய்தவர் |
|---|---|---|---|
| 1. | சிதம்பரம் | சிவகங்கைத் திருக்குளப்பணி | கானாடுகாத்தான் வெ.சா.குடும்பத்தார் |
| 2. | புலிச்சரம் | இளமையாக்கிய திருக்குளம் | காரைக்குடி பெரி.க.குடும்பத்தினர் |
| 3. | திருநெல்வாயில் (சிவ புரி) | திருக்குளம் | ........ |
| 4. | திருவெண்காடு | அக்கினிதீர்த்தம் | கோட்டையூர் பசுமடம் அண்ணாமலை செட்டியார் |
| 5. | திருக்கண்ணார் கோயில் | திருக்குளம் | ஆ. முத்துப்பட்டினம் சித. மு.நா.வெ. நாச்சியப்பசெட்டியார் |
| 6. | கோயிற்பத்து (திருத்தெளிச்சேரி) | திருக்குளம் | ......... |
| 7. | திருவிற்குடி | திருக்குளம் | பள்ளத்தூர் சொ.மு. அ.மெ.அண்ணாமலை செட்டியார் |
| 8. | | திருக்குளம் | ........ |
| 9. | திருமருகல் | திருக்குளம்(13.6.1943) | தேவகோட்டை கும. கரு. கரு. |
| 10. | திருக்கடுவாய்க் கரைப்புத்தூர் | திருக்குளம் | தேவகோட்டை அ. ராம. அ. லெ. குடும்பத்தினர் |
| 11. | திருக்களர் | திருக்குளம் | நாட்டரசன் கோட்டை அரு. சு. கண்ணப்ப செட்டியார் |
| 12. | திருக்களர் | திருக்குளம் | காரைக்குடி சா.நா.அ. சொ. வகை |
| 13. | திருநெல்லிக்கா | திருக்குளம் | புதுவயல் வீ. அ. குழந்தையன் செட்டியார் |

| வ. எண் | ஊர் | ஊருணி | அறம் செய்தவர் |
|---|---|---|---|
| 14. | திருக்காறாயில் (திருக்காரை வாசல்) | திருக்குளம் | தேவகோட்டை அழ. வீர. சித. |
| 15. | கிள்ளுகுடி | திருக்குளம் | கொத்தமங்கலம் நகரத்தார் |
| 16. | திருப்பரங்குன்றம் | தெப்பக்குளம் | நகரத்தார் |
| 17. | | சரவணப்பொய்கைத் திருக்குளம் | சக்கந்தி சுப. க. சுப்பிரமணியன் செட்டியார் |
| 18. | திருஏடகம் | ஆற்றுப்படித்துறை | மு. ப. முத்தையா செட்டியார் |
| 19. | திருப்புத்தூர் | திருக்குளம் | அமராவதி புதூர் வயிநாகரம் சுப்பிரமணியன் செட்டியார் என்ற முத்தையா செட்டியார் |
| 20. | திருப்புனவாசல் | குளம் | காரைக்குடி அரு. அ. அரு. இராமசாமிச் செட்டியார் |
| 21. | திருவாடானை | பிள்ளையார் கோயில் குளம் | தேவகோட்டை குமு. குடும்பத்தினர் |
| 22. | திருக்கானப்பேர் | ஆனைமடுத்திருக்குளம் | தேவகோட்டை சமீன்தார் வகை |
| 23. | | திருக்குளம் | அமராவதிபுதூர் வெ. ராமு. ஆ. நாட்டரசன் கோட்டை ஆ. சுப. அ |
| 24. | திருவண்ணாமலை | பிரம்மதீர்த்தக் குளம் | கானாடுகாத்தான் ராசா ஸர் அண்ணாமலை செட்டியார் |
| 25. | | சிவகெங்கைத்திருக்குளம் | கோட்டையூர் க. வீ. அழ |
| 26. | வன் பார்த்தான் பனங்காட்டூர் | திருக்குளம் | கல்லல் ஆ. மு. ஆ. முருகப்ப செட்டியார் |

# 2. நகரத்தார்களின் வாகனத் தருமம்

திருக்குளம், திருக்கோயில் என்று அறப்பணிகளைச் செய்து வந்த நகரத்தார்கள், இறை வழிபாட்டுக்கு நிலையான களங்களை அமைத்த பின்னர்த் திருக்கோயில் தொடர்பான அகவளர்ச்சிகளிலும் புறவளர்ச்சிகளிலும் ஈடுபடலாயினர்.

## திருக்கோயில் அகவளர்ச்சி

அகவளர்ச்சி என்பது திருக் கோயிலுக்கு உள்ளே வழிபாட்டுக்கும் விழாவுக்கும் தேவையானவற்றைச் சேர்த்துக் கொள்வதாகும். மடைப்பள்ளி, அதற்கு வேண்டிய பாத்திரங்கள், உரல், உலக்கை, அம்மி, தண்ணீர் அண்டாக்கள், என்பன ஒரு வகையின; ஆல வட்டம், சுருட்டி, தேர் கொடி, குடைகள், தீவட்டி, என்பன மற்றொரு வகையின; இவை திருவிழாவுக்குரியன; விளக்குகள், கற்பூரத் தட்டுகள், திருவாட்சிகள், சோடச உபசாரக் கருவிகள் ஆகியன வழிபாட்டுக்குரிய கருவிகள், இவை இன்னொரு வகையின. இவையனைத்தும் திருகோயிலில் நடைபெறும் நித்திய பூசைக்கும் திருவிழாவுக்கும் வேண்டியவை. இவற்றைக் கோயிலுக்கு மக்கள் தங்கள் கொடையாக வழங்கியிருக்கின்றனர். மேற்சுட்டிய கருவிகள் கோயிலினுள்ளே நடைபெறும் காரியங்களுக்காகக் கோயிலுக்குள்ளேயே காப்பாக வைக்கப்பட்டிருக்கின்றன.

## புற வளர்ச்சி

கோயிலில் நடைபெறும் பல்வேறு வேதாகமச் சடங்குகளுக்குக் (வேதம் ஓதல், தேவாரம் பாடல், பால் அபிஷேகத்துக்குக் கொடுத்தல், என்பன) கோயிலுக்கு வெளியே தேவையானவற்றை உருவாக்குதல், கோயிலின் புற வளர்ச்சியாகும். இது கோயிலைச் சார்ந்து நகர சத்திரமாகவும் வளர்ந்த வளர்ச்சியாகும். இவற்றை நகரத்தார்கள் நிறையப் பொருட் செலவு செய்து நிறுவி நடத்தி வந்திருக்கின்றனர். இவ்வாறு திருக்கோயில் வழிபாட்டுக்கு வேண்டியவற்றைக் கோயிலுக்கு வெளியிலிருந்தே அணியமாக்கியிருக்கின்றனர். ஆகம வழிபாட்டு மரபுகள் பெருகப் பெருகத் துணைக் கருவிகளும் பிறவும் பெருகத் தொடங்கின.

## நிலையான அமைப்பும் வளர்ச்சியும்

ஒருவன் தனக்கு நிலையாக வருமானம் ஏற்பட்ட பின், தான் வாழச் சொந்தமாக வீடு அமைத்துக் கொண்டபின் தன்னுடைய பிற தேவைகளைப் பெருக்கிக் கொள்ளவும் வசதிகளை அமைத்துக் கொள்ளவும் செய்வான்; அதன் பின் சிறுகச் சிறுகத் தனக்கு வேண்டியவற்றை அவன் சேகரிக்கத் தொடங்குவான். அது போலச் சிவபெருமான் எழுந்தருளச் சாலச் சிறந்ததும் திட்ப நுட்பம் அமைந்ததுமாகிய திருக்கோயிலை நகரத்தார்கள் கட்டி முடித்தனர். பாடல் பெற்ற திருத்தலங்களில் எல்லாம் கல் திருப்பணி செய்யப் பெற்றுச் செவ்வனே நிறைவேறிற்று. அவர்கள் வாழ்ந்த ஊர்களிலும் விநாயகர் கோயிலோ அம்மன் கோயிலோ சிவன் கோயிலோ கட்டப்பட்டன். திருக்கோயில்கள் கட்டிமுடித்தபின் தொடர்ந்து நகரத்தார்களின் மனம் தெய்வத் திருத்தொண்டிலேயே ஈடுபடலாயிற்று. தெய்வப் பணியை விழைந்த அவர்கள் உள்ளம், கோயில் வளங்களைப் பெருக்கிடச்

சென்றது. இறைபணியே இனிய பணி என்று மேன் மேலும் நகரத்தார்கள் பெருகிய செல்வத்தைக் கோயில் வழிபாட்டுக் தொண்டுகளிலேயே செலவிட்டனர்.

திருக்கோயில் திருப்பணி, நகரத்தார்களுக்குப் பலவேறு சமூகத்தினருடன் உறவாட வழி வகுத்தது. ஸ்தபதிகளுடனும் சிவச்சாரியார்களுடனும் பழகிய நகரத்தார்கள், அவர்களுடைய கலைத் தொடர்பான அறிவுண்மைகளை, அறியலாயினர்; அவர்களிடையே கருத்துப் பரிமாற்றங்கள் ஏற்பட்டன. சிற்ப சாத்திரம், ஆகம சாத்திரம் ஆகியன பற்றிய அறிவும் நகரத்தார்களுக்கு உண்டாயிற்று. இதனால் கோயில் தொடர்பான பணிகளில் நகரத்தார்கள் ஈடுபட வாய்ப்பேற்பட்டது.

## இறைவன் திருவுலா

கோயிலில் இருந்த இறைவன், கோயிலுக்கு வெளியே வந்து அடியார்களுக்கு அருள் புரிய எழுந்தருளினான். அவ்வாறு இறைவன் வெளிப் போந்த போது எவ்வாறு வரவேண்டும் என்று அடியார்கள் எண்ணலாயினர். . இறைவன் உலா வந்திட எந்நாளில் என்ன வாகனத்தில் வரவேண்டும் என்று ஆகமங்களால் நகரத்தார்கள் அறிந்தனர். இதனால் கோயிலுக்குத் தேவையான புதிய புதிய வாகனங்களை அவர்கள் செய்யலாயினர். அம் முயற்சியில் தச்சாசாரிகளும் கொல்லாசாரிகளும் பங்கு பெற்றனர். இதனால் திருக்கோயிலில் பல்வேறு வாகனங்கள், மரத்தால் செய்யப்பட்டன; அவற்றுக்கு வண்ணங்கள் பூசப்பெற்றன. மரத்தில் வாகனங்கள் செய்யப் பெற்றுத் திருவிழாக்கள் சீரும் சிறப்புமாக நிகழ்ந்தன.

## வாகனங்களும் ஆகமமும்

திருக்கோயில் திருவிழா, பத்து நாள்களோ அதற்குக் கூடுதலான நாள்களோ நிகழும். இதனால் ஒவ்வொரு நாளும் வெவ்வேறு வகையான அலங்காரமும் வாகனமும் தேவையாயின, இதனால் திருகோயில்களில் வாகனங்களின் எண்ணிக்கை கூடிற்று. காரணாகமம்,'இன்ன நாளில் இன்ன வாகனத்தில் இறைவனை எழுந்தருளச் செய்ய வேண்டும்' என்று விதிக்கிறது.

| நாள் | காலை வாகனம் | மாலை வாகனம் |
|---|---|---|
| முதல் | மூடு பல்லக்கு | ஹம்ஸம் |
| இரண்டு | சூரிய பிரபை | சந்திர பிரபை |
| மூன்று | சிம்மம் | பூதம் |
| நான்கு | நாகம் | மகரம் |
| ஐந்து | கட்டில் | ரிஷபம் |
| ஆறு | கேடயம் | யானை |
| ஏழு | இரதம் (தேர்) | பிரயத் சித்ரம் |
| எட்டு | புருஷாமிருகம் | குதிரை, பாரிவேட்டை |
| ஒன்பது | பீடம் அல்லது தேர் | புலி, கிருஷ்ணகாந்தம் சாத்தல், நடேசர்வீதிவலம் |
| பத்து | சிம்மாசனம் | கைலாச வாகனம். |
| பதினொன்று | விமானம் | சக்தி ஊடல் |

இவ்வாறு காரணாகமம் வாகனங்களைக் குறிப்பிட்டாலும் நகரத்தார்கள் மேற் கட்டிய வாகனங்களையெல்லாம் திருகோயில்களுக்குச் செய்து கொடுத்தனர் என்று கூற முடியாது. இந்த நாள் விழாவுக்கு இன்ன வாகனம் என்று விதித்த ஆகமங்கள், இன்ன வாகனம் செய்து கொடுத்தால் இன்ன பலன் ஏற்படும் என்று குறிப்பிட்டுள்ளன.

வாகனங்களின் பயன்கள்

| வ.எண் | வாகனம் | பயன் |
|---|---|---|
| 1. | பெருச்சாளி | எக்காரியமும் தடையின்றி நிறைவேறும்; |
| 2. | மயில் | செல்வங்கள் பெருகும்; புகழ், ஜன வசீகரம் உண்டாகும். |
| 3. | சிம்மம் | அரசாங்க ஆதரவு, அதிகாரவிருத்தி, மக்கள் பணிவாக நடப்பார்கள். |
| 4. | யானை | எந்தச் சிரமங்கள் ஏற்பட்டாலும் அவை ஒரு நொடியில் தீர்ந்து விடும்; கிராம தேவதை அருள் சித்திக்கும். |
| 5. | பூதவாகனம் | சோர பயம் தீரும்; பொருள்கள் காப்பாக இருக்கும். |
| 6. | ரிஷபம் | எடுத்த காரியங்கள் வெற்றி, சகல நன்மைகளும்போக போக்யங்களும் உண்டாகும். |
| 7. | ஆட்டுக்கிடாய் | சகலரோக நிவர்த்தி, இஷ்டசித்திகள் நடைபெறும். |
| 8. | சூரியபிரபை | உஷ்ண வியாதி நிவர்த்தி, தீர்க்காயுசு. |
| 9. | சந்திரபிரபை | சீதள வியாதி நிவர்த்தி, ஆரோக்கியம், பாபநிவர்த்தி, மன சந்துஷ்டி, வமிச விருத்தி |
| 10. | கற்பகவிருட்சம் | நாடிய பொருள் கைகூடும், நினைத்த காரியங்கள் வெற்றி, செல்வம் பெருகும். |
| 11. | காமதேனு | பசு விருத்தி, பால் பாக்கியம், தேவியின் அருள் கிட்டும். |
| 12. | மஞ்சம் | ராஜயோகம். |
| 13. | சிம்மாசனம் | அரசபதவி, ராஜ்ய அனுகூலம், ஆட்சி, பதவி உயர்வு |
| 14. | திருத்தேர் | தெய்வ கடாட்சம், அரச பதவி, அஷ்ட ஐஸ்வரியம், நல்ல மனைவி, மக்கள், சதா இறையன்பு ஆகியன உண்டாகும். |

இதில் குதிரை சுட்டபடவில்லை. இன்ன வாகனம் செய்தால் இன்ன பயன் விளையும் என்பதை உணர்ந்து நகரத்தார்கள் வாகனங்கள் செய்திருக்கலாம்; பயனை அறியாமல் வாகனம் செய்திருக்கவும் கூடும். செட்டிநாட்டில் நகரத்தார்களுக்குச் சொந்தமாக உள்ள சிவன் கோயில்களில் ஒன்றோ இரண்டோ வெள்ளி வாகனங்கள் இருக்கும்; மர வாகனங்களும் காணப்படும். இவற்றை நகரத்தார்களே செய்தளித்திருப்பர்.

## மரவாகனம் வெள்ளியாதல்

தொடக்கத்தில், திருமேனிகளைக் கையில் தூக்கியும் படிச் சட்டப் பலகைகளில் வைத்துத் தூக்கியும் உலாவாகக் கொண்டு திருவிழாச் செய்த மக்கள், இறைவனுக்கு வாகனங்கள் அமைத்து அவற்றில் இறைவனை எழுந்தருளச் செய்தனர். இதற்காக மரத்தில் வாகனங்கள் செய்தனர். மரவாகனங்களைத் திருவிழாவில் எழுந்தருளிச் செய்ய அவற்றுக்கு எண்ணெய் பூசியும் வண்ணம் பூசியும் அழுகுபடுத்தினர். மரவாகனங்களின் வண்ணம் ஓரிரு ஆண்டுகளில் குலைந்து விடுவதாலும் கறையான் பிடித்து அழிந்து போவதாலும் வாகனங்களை அடிக்கடி செப்பனிட வேண்டியதிருந்தது; ஆண்டுதோறும் அவற்றைப் புதுப்பித்து வண்ணம் பூச வேண்டியிருந்தது. எனவே வாகனங்களை நெடுநாள் காக்க என்ன வழி என்ற எண்ணம் ஓடலாயிற்று; நகரத்தார்களிடம் செல்வமும் நிலையாகக் குவிந்தது; சொத்துக்களும் சேர்ந்தன; இதனால் மரவாகனங்கள், வெள்ளியால் செய்யப்பட்டன. வெள்ளி வாகனங்கள், நெடுநாள் கெடாதனவாயும் திருவிழாவில் எழுந்தருளி வரும்போது அழகு தருவதாயும் விளங்கின.

## வாகனத் திருப்பணியாக வளர்தல்

தெய்வத் திருப்பணியே தங்களின் வளர்ச்சிக்கும் வள வாழ்வுக்கும் அடிப்படை என்பது நாட்டுக் கோட்டை நகரத்தார்களின் நம்பிக்கை. அவர்கள் தங்கள் வருமானத்தைத் தெய்வங்களுக்குச் செலவு செய்ய வேண்டும் என்று எண்ணினர். ஒருவர் கோயில்களுக்குச் செலவு செய்து வளமும் நலமும் பெற்றதைக் கண்டு அவரைப் பார்த்துப் பிறரும் கோயில்களுக்குச் செலவு செய்யலாயினர். இவ்வாறு செலவு செய்யத் தொடங்கிய போது, மரவாகனங்களுக்குத் தங்கத்தகடு போர்த்தியும் வெள்ளித் தகடு போர்த்தியும் புதிய வாகனங்களை உருவாக்கினர்; நகரத்தார்களின் திருப்பணி, வாகனங்கள் செய்யும் பணியாக வளர்ச்சி பெற்றது.

பாடல் பெற்ற திருத் தலங்களிலே தான் முதற் கண் வெள்ளி வாகனங்கள் செய்யும் பணி தொடங்கப் பெற்றது. பின் நகரத்தார்கள் தாங்கள் வாழ்ந்த ஊர்களிலேயுள்ள கோயில்களிலும் இப்பணியை மேற்கொண்டனர். இவர்கள் திருகோயில்களில் தனியாகவும் கூட்டாகவும் கோயில் வாரியாகவும் (இளையாத்தக்குடி, மாத்தூர் என்பன போல) பொருள் திரட்டிப் பல்வேறு வாகனங்களைச் செய்தனர்.

## மனம் விரும்பிய கடவுளர்

நாட்டுக் கோட்டை நகரத்தார்கள், எந்தக் கடவுளுக்கு என்ன வாகனம் உரியது என்பதை உணர்ந்து, அவர்கள் வாகனங்களைச் செய்து வழங்கினார். சிவன் கோயிலை, நகரத்தார் அனைவரும் பொதுவாகக் கட்டும்போது, எல்லாத் தெய்வங்களின் கருவறைகளையும் பொதுவாகக் கட்டுவதுண்டு. சில கோயில்களில்,

விநாயகர் கருவறையை ஒரு குடும்பத்தாரும் முருகன் கருவறையை ஒரு குடும்பத்தாரும் கட்டியதுமுண்டு. இவ்வண்ணம் தாம் விரும்பும் கடவுளை மிகுதியாக வணங்குவதும் அதற்குப் பல்வேறு அணிகலன்களைச் செய்து அளிப்பதும் நகரத்தாரியற்கை. சிவன் கோயிலில் அந்தவூரைச் சேர்ந்தோர் எந்தக் கருவறையைக் கட்டினாரோ அத் தெய்வத்திற்குரிய வாகனங்களை அவரே செய்து கொடுத்திருப்பார். திருக்கோயிலிலுள்ள ஒவ்வொரு கடவுள் மீதும் ஒருவர் பற்றுதல் கொண்டு அக் கடவுளுக்குத் தேவையானவற்றைச் செய்தளித்திருப்பர். இவ்வாறு திருக் கோயிலிலுள்ள எல்லாத் தெய்வங்களுக்கும் அணிகலன்கள், வெள்ளிக் கவசம், வாகனம் ஆகியவை இருக்கும்.

## கடவுள் காட்சிதரக் காளை வாகனம்

நகரத்தார்கள் சிவன் கோயிலுக்கு வழங்கிய வாகனங்களில் மிகுதியானவை, காளை வாகனமே (ரிஷபம்), இது சிவபெருமானுக்கு உகந்த வாகனம்; இன்றியமையாத வாகனம். திருஞானசம்பந்தரைப்பால் கொடுத்தது யார்? காட்டு என்ற கேட்ட போது, அவர் அங்க அடையாளங்களுடனே `என்னை இது செய்த பிரான் இவனே` என்று காட்டினார். உலகத்தவர்க்கு இறைவரைக் காட்டியருளிய முதல் திருப்பாட்டில் 'தோடுடைய செவியன் விடையேறி' என்று திருஞான சம்பந்தர் குறிப்பித்தார். சிவபெருமான் அடியார்க்கெல்லாம் காட்சி தந்தமையைத் துணையுடன் விடைமேல் கண்டார் (399) என்றும் ``மழவிடை மேல் எழுந்தருளி வந்தது"(3657) என்றும் திருத்தொண்டர் புராணம் பேசுகின்றது. இதனால் சிவபெருமான் நயந்த ஊர்தி காளை வாகனம் என்பது பெறப்படும். எனவே நகரத்தார்கள், திருக்கோயில்களுக்கு ரிஷப வாகனம் செய்வதில் பேரீடுபாடு காட்டினர்.

சிவன் கோயில்களில் ரிஷப வாகனம் மிகப்பெரியது, பெரியது, சிறியது என்று பல அளவுகளில் இருந்தன. திங்கள் தோறும் பிரதோஷ விழாவில் இறைவன் எழுந்தருளச் சிறிய காளை வாகனம் உண்டு. இவ்வாகனத்தில் பிரதோஷத்தன்று பிரதோஷ நாயகர் அல்லது உமாமகேசுவரர் எழுந்தருளிக்காட்சி தருவார். இந்த ரிஷப வாகனம் அழகியதாயும் சிறியதாயும் குறைந்த எண்ணிக்கையுள்ளவர்களால் தூக்கக் கூடியதாயும் விளங்கும். மற்றைய காளை வாகனங்கள் இதைவிடப் பெரியனவாக இருக்கும். பெரிய ரிஷபம், பஞ்சமூர்த்தி திருவுலாக் காட்சியில் பங்குபெறும். எல்லாக் காளைளும் கட்டைக் கொம்புடனும் அளவான திமிலுடனும் நின்ற கோலமாகக் காணப்படும்; இதன் கழுத்தில் மணிக்கோவையும் கொம்பில் கொப்பியும் கால்களில் சலங்கையும் திகழ்கின்றன. ஓர் அழகிய வெண்ணிறக் காளை உயிருடன் நிற்குமாறு ரிஷபம் விளங்கும், காளையின் உடலில் பல அணிகள் நிறைந்து அழகு வீசச் சிற்பி உருவாக்கியிருக்கும் கலைச் சிறப்பு, நகரத்தார் கலை வரலாற்றில் குறிப்பிடற்பாலது

## மிகப் பெரிய காளை வாகனம்

கீழச்சிவல்பட்டி ஸ்ரீ மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோயிலில் உயிருள்ள பெரிய காளை மாடு போன்ற மாபெரும் ரிஷபம் ஒன்று வெள்ளியில் செய்யப்பட் டிருந்தது. அதனைப் பலர் கூடினாலும் தூக்க முடியாது. அந்த வெள்ளி ரிஷப வாகனத்தைச் சகடையில் வைத்தே பொருத்தியிருந்தனர். இது மிக அழகான வடிவம்; ஐம்பெருங் கடவுளர் திருவுலாக்காட்சியில் அம்மையப்பர் அதில் வீற்றிருந்து உலாவரும் காட்சி வேறு எங்கும் காணமுடியாதது. இதனைச் சூரக்குடிக்கோயிலைச்

சேர்ந்த கருப்பஞ்செட்டியார் குடும்பத்தினர் செய்திருந்தனர். சிவபெருமான் எல்லாக் கடவுளரிலும் பெரியோன் என்பதை இந்தப் பெரிய வாகனத்தின் மூலம் அவர்கள் காட்டினர். எதிர்பாரா வண்ணம் இந்த அரிய வாகனம் திருடர்களால் சிதைக்கப் பட்டுவிட்டது: இத்தகைய பெரிய காளை வாகனம் தமிழகத்தில் வேறெங்கும் கிடையாது.

அமராவதிபுதூர் வயிநாகரம் குடும்பத்தார் சீர்காழியில், வெள்ளிக் காளை வாகனம் செய்து வைத்திருக்கிறார்கள். திருவண்ணாமலை அண்ணாமலையார் கோயிலுக்குக் கோட்டையூர் அ.க.ராம. அரு. அருணாசலம் செட்டியார் பிரதோஷத்திற்கு வெள்ளியில் சின்ன ரிஷபம் கொடுத்திருக்கிறார். புதுவயல் பெரி.யெ.குடும்பத்தினர் சாக்கோட்டை வீரசேகரருக்கு வெள்ளி ரிஷபம் செய்திருக்கின்றனர். அதுபோல அவ்வூர்க்கிள்ளான் வீரப்ப செட்டியார் குடும்பத்தினர் அம்மைக்கு வெள்ளி ரிஷப வாகனம் செய்துள்ளார். கோயிலூர் குட்டையப்ப சுவாமிகள் மதுரை ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமானுக்கு அஷ்டமிப் பிரதட்சிணத்தில் தெற்கு வீதிக்குச் சுவாமி எழுந்தருள வெள்ளி இடப வாகனம் அமைத்திருக்கிறார்.

## தெய்வங்களுக்கேற்ற வாகனங்கள்

நகரத்தார்கள் வெள்ளிக் காளை வாகனம் செய்து சிவபெருமானுக்கும் அம்மைக்கும் கொடுத்து போல அவர்கள் பெரு விருப்புடன் முருகப் பெருமானுக்கு வெள்ளி ரதம் (வெள்ளித் தேர்) மாடுபூட்டி ஒட்டும் வண்ணம் அமைத்து நல்கியுள்ளமை குறிப்பிடத்தக்கது. கீழச்சிவல்பட்டிச் சிவன் கோயிலில் க.தெ.நா. அங்கப்ப செட்டியார் வெள்ளிரதம் ஒன்று செய்து வைத்திருக்கிறார். ஐப்பசித் திங்கள் சூரன் திருவிழாவின் போது முருகப் பெருமான் வெள்ளித் தேரில் உலாவருவார். ஆத்தங்குடியில் வெள்ளித்தேர் நகரப் பொதுவில் செய்யப்பட்டது. நாட்டரசன்கோட்டை கண்ணுடையம்மனுக்கு நகரத்தார்கள் 18.5.1930 இல் வெள்ளித் தேர் செய்தனர். செய்கோன், சிங்கப்பூர்க்கோயில்களுக்கும் வெள்ளித் தேர் செய்தனுப்பப் பெற்றது. இங்ஙனம் திருக்கோயில் கடவுளர் உலாவரச் சிவன் கோயில்களில் வெள்ளியாலும் தங்கத்தாலும் நிறைய வாகனங்கள் ஏற்பட்டன. நகரத்தார் தொடர்புடைய செட்டிநாட்டுக் கோயில்களில், மரவாகனங்களைக் காட் டிலும் வெள்ளியால் செய்யப் பெற்ற வாகனங்களே மிகுதி

விநாயகர்க்குப் பெருச்சாளி வாகனம்; முருகனுக்கு மயில் வாகனம் அல்லது வெள்ளிரதம்; இவையன்றிக் கேடகமும் செய்யப் பெறும். அம்மையப்பருக்குத்தான் பலவகையான வாகனங்கள் நகரத்தாரால் கொடுக்கப்பட்டிருக்கின்றன. ரிஷப வாகனம் போலக் குதிரை வாகனமும் உண்டு. குதிரை வாகனம் வெள்ளியாலும் தங்கத்தாலும் செய்யப்பட்டன, கைலாச வாகனம், காமதேனு, இந்திர விமானம், பல்லக்கு, சூரியபிரபை, சந்திரபிரபை என்பன வாகனங்கள்; கைலாய வாகனம், அஃது ஊர்தியன்று.

## இலக்கியம் உருவாக்கிய வாகனம்

கைலாச மலை, சிவபெருமானைத் தாங்கி நிற்பது. இம்மலையை இராவணன் பெயர்த்தெடுக்க முயலவே, சிவபெருமான் தன் கால் பெருவிரலால் சிறிது அழுத்தவே அதில் மாட்டிக் கொண்டு அலறினான்; பின் அரக்கன் இராவணா அஸ்தம் என்னும் யாழைப் பூட்டிச் சாம வேதம் பாடி உய்தி பெற்றான். இதனைத்

திருநாவுக்கரசர் தாம் பாடிய தேவாரப் பதிகங்களின் பத்தாவது பாடல் கருத்தாகக் கொண்டு தமக்கு அருள் செய்யப் பாடியிருக்கிறார்.

`நரம்பெழு கைகள் பிடித்து நங்கை நடுங்க மலையை
உரங்களெல் லாம் கொண் டெடுத்தான் ஒன்பதும் ஒன்றும் அலற
வரங்கள் கொடுத் தருள் செய்வான் வளர்பொழில் வீரட்டஞ் சூழ்ந்து
நிரம்பு கெடிலப் புனலும் உடையார் ஒருவர் தமர் நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை அஞ்ச வருவதும் இல்லை`

என்று திருநாவுக்கரசர் தமக்கும், இராவணனுக்குக் கருணை செய்தது போலச் செய்யவேண்டும் என்ற குறிப்பமையப் பாடினார். மண்ணுலகில் வாழ்வார்கள் பிழைத்தாலும் வந்தடையில் கண்ணுதலான் பெருங் கருணைக் கைக் கொள்ளும் என்று காட்டிட அமைந்த காட்சியைக் கைலாச வாகனம் என்ற பெயரால் சிற்பாசிரியர்கள் துணையோடு நகரத்தார்கள் உண்டாக்கினர். தேவார திருமுறைகளை ஓதியோதி உணர்ந்ததன் வாயிலாக இந்த வாகனம் உருவாகியிருக்கிறது.

## கற்பக தருவும் காமதேனுவும்

கைலாச வாகனம் மரத்தாலும் வெள்ளியாலும் செய்யப்பட்டிருக்கின்றன. கற்பகவிருட்சம் தேவலோகத்திலுள்ளது. இது வேண்டுவார்க்கு வேண்டுவன நல்கும் தன்மையது. கற்பக மரம் போன்ற வடிவில் இவ்வாகனம் இருக்கும். ``திண்டேர் கற்பகத் தருவோடு ஈந்தான்"(திருவால வாயுடையார் புராணம். 37:75) என்று கற்பகத் தருவாகிய வாகனம் வழங்கியமை பேசப்படுகிறது. கற்பக மரம், தேவர்கள் பாற்கடல் கடைந்த காலத்தில் தோன்றியது. மரங்களைப் போல எட்டுக் கிளைகளுடன் காமவல்லி என்ற கொடிபடர்ந்திருக்க அமைக்கப் பெறும். காமதேனு, அமிர்த மதன காலத்தில், தோன்றிய தெய்வீகப் பசு; காமதேனு வாகனத்தை ஆவின் தோற்றமும் மனித முகமும் தலையில் கொம்பும் மார்பில் முலையுமாக நான்கு கால்களுடன் விளங்கும் பௌராணிக விலங்கு. இது வேண்டுவார்க்கு வேண்டுவன நல்கும். இதனை இறைவன் உலாவர நகரத்தார்களும் பிறரும் செய்தளித்திருக்கின்றனர்.

## குதிரையும் கேடகமும்

சிவன் கோயிலில் அம்மைக்குரிய வாகனங்களில் தனிச் சிறப்பாகக் குறிக்கத்தக்கது, குதிரை வாகனம். சிவபெருமான் இன்றி அம்மை மட்டும் தனியே உலாவரும் போது வெள்ளிக் குதிரை அல்லது தங்கக் குதிரை, அல்லது மரக் குதிரை வாகனத்தில் தான் எழுந்தருளி வருவார். கீழச்சிவல்பட்டிச் சிவன் கோயிலில் தங்கக் குதிரை வாகனமுள்ளது. நவராத்திரி விழாவில் அம்மை அம்பு போடவரும் போது குதிரை வாகனத்திலே தான் எழுந்தருளி வருவாள். போருக்குச் செல்லும் வீரன் குதிரையில் செல்லுமாறு அம்மையும் பகையை அழிக்கக் குதிரையிலேயே புறப்படுகின்றாள். சிவபெருமானைத் தனியே குதிரையில் எழுந்தருளச் செய்வதில்லை. கேடகம் நான்கு கால்களையும் கூம்பு வடிவிலான கூரையையுமுடைய தேர் போன்ற அமைப்பினது: ஓடுவதற்குச் சக்கரம் இன்றி ஆட்கள் தூக்குமாறு இருக்கும்.'திருவாசியோடு கூடியதாய் விக்கிரகத்தை எழுந்தருளப் பண்ணுவதற்கு உதவும் தோளுக்கினியான் என்னும் வாகனம்' என்று தமிழ் லெக்சிகன் (தொகுதி: 2.ப.1092) கூறுகிறது. இதில்

எல்லாத் தெய்வங்களையும் எழுந்தருளச்செய்வர். கேடகங்கள் சிறியதும் பெரியதுமாகப் பல அளவுகளில் அமைந்திருக்கும். சண்டேசுவரர், மாணிக்கவாசகர், சுந்தரர் போன்ற அடியார்களை இதில் வைத்து அலங்காரம் செய்வர். இதனை ஆட்கள் தூக்கி வருவதும் சகடையில் ஏற்றிவருவதும் உண்டு. கோயில் மூர்த்தியை எளிதாகத் தூக்கிச் செல்லக் கூடிய வாகனம், தோளுக்கு இனியான். நாள்தோறும் சிவபெருமான் அம்மையின் பள்ளியறைக்குச் செல்லப் பயன்படுத்துவது பல்லக்கு. இது சிவபெருமானுக்குரியது என்பதால், பல்லக்கை வெள்ளியாலோ தங்கத்தாலோ நகரத்தார்கள் செய்து கொடுத்திருக் கின்றனர்.

## தேரும் தேர்ச் சிறப்பும்

திருக்கோயில்களில் தேரோட்ட விழா சீரும் சிறப்புமாக நடைபெறும்; இதற்கு மக்களும் பெருந்திரளாகக் கூடுவர். தேரோட்டத்தில், பெரியதேரை இழுப்பதும் உண்டு; சில ஊர்களில் படிச்சட்டத் தேர் இருக்கும்; இத் தேரை இழுப்பது எளிமையானது. பல ஊர்களில், நாட்டுக் கோட்டை நகரத்தார்கள் தேர் செய்து வைத்திருக்கின்றனர். தொல்பொருள் துறை அறிஞர் பி.ஆர். ஸ்ரீநிவாசன் ``பெரும்பான்மையாக இவ்வகைத் தேர்கள் தெய்வ பக்தியுள்ள பணக்காரர்களால் தானம் செய்யப்பட்டவைகளாகும். இவர்களில் நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் ஒரு பெரும் பகுதியினர் எனலாம்"(கலைக் களஞ்சியம் - தொகுதி: 6.ப.173) என்று குறிப்பர். நகரத்தார்கள் செய்தளித்த தேர்கள் பல. திருமா ஸ்ரீபாதாளேச்சுவரர் திருக்கோயில் தேர்வாரியப்பட்டி நகரத்தார் செய்தது; அதனை ஒழுங்காகக் காப்பாற்றாமல் அது சிதைந்துவிட்டது.

திருவாரூர்த் தேர், புதிதாகச் செய்தற்கு முதன் முதலில் கையெழுத்திட்டுக் கொடுத்தவர் சக்கந்தி உல.க.கண. சோமசுந்தரம் செட்டியார். அவருடைய கைராசியால் திருவாரூர்த் தேர் வேலை முற்றுப் பெற்றது. இவ்வாறு தேர் செய்யக் கூட்டாகவும் தனியாகவும் நகரத்தார்கள் பெரும் பொருளைச் செலவு செய்திருக்கின்றனர். அண்மையில் பாகனேரி புல்வாநாயகிக்கு நகரத்தார்கள் முயற்சியில் பல இலட்சம் ரூபாய் செலவில் தேர் செய்யப்பட்டிருக்கிறது.

திருக்கோயில் விழாக்களில் பயன்படுத்த நகரத்தார் பலர் வாகனங்கள் செய்திருக்கின்றனர். நகரத்தார் ஒருவர், திருக்கோயிலில் மண்டகப்படி செய்தால், அந்த விழாவில் எழுந்தருளப் பண்ண என்று தனியே வாகனம் செய்து வைத்ததுமுண்டு.

## செய்யும் முறைமை

வெள்ளியாலோ தங்கத்தாலோ வாகனம் செய்தால், அந்த வடிவத்தை முதற்கண் மரத்தில் செய்து கொள்ளவேண்டும். முதலடிப்படை மரத்தில் செய்வதுதான். வாகனம் செய்யத் தக்க மரங்களைத் தேர்ந்தெடுத்துச் செய்ய வேண்டிய வாகனத்தைச் செய்து கொள்ளுவர். அதன் பின் வெள்ளித் தகட்டைப் பயன்படுத்தி அந்த வடிவத்தைப் போர்த்தி வெள்ளி ஆணிகள் இட்டுத் தகட்டை முடுக்கிவிடுவர்; பின்னர் அணிகலன்கள், கோடுகள் போன்ற இழைப்பு வேலைகளும் நகாசு வேலைகளும் செய்யப்பெறும். வெள்ளி வாகனங்கள் செய்ய வெள்ளி அளவு மிகுதியாக இருக்க வேண்டும்; கூலியும் சேதாரமும் மேலும் செலவாகும்.

வெள்ளி வாகனம் செய்வதில், பெரிதும் வெள்ளியே பயன்படுத்தப்படுகிறது. தங்க வாகனத்தைத் தங்க தகடு போர்த்திச் செய்வதில்லை. செப்புத் தகட்டில் தங்க முலாம் பூசியோ இலேசான தங்கத் தகட்டை ஒட்டியோ தங்க வாகனங்கள் செய்யப்பட்டன. முழுக்க முழுக்கத் தங்கத்தால் வாகனங்கள் செய்வது மிக அருமை.

## வெள்ளோட்டம்

வாகனங்கள் முழுமையாகச் செய்யப்பட்ட பின் நன்னாள் பார்த்துச் சாத்திர முறைப்படி வெள்ளோட்டம் நிகழும். அப்போது அதனை உருவாக்கியவர்களுக்கு வேட்டி துணி முதலியன வழங்கி மரியாதை செய்யப்பெறும். இது திருக்கோயிலைச் சார்ந்த விழாவாகும்.

வாகனங்கள் செய்யப்பெறும்போது, அவற்றின் முதுகில் கடவுள் வடிவம் வீற்றிருக்கும் வண்ணம் பீடம் அமைக்கப்பட்டிருக்கும், அல்லது கொக்கிகள் இருக்கும். பீடப் பலகையை வாகனத்தின் மீது வைத்துக் கட்டிப் பின் இறைத் திருமேனியை அதன்மேல் செவ்வனம் நிறுவி நூல் கயிறிட்டுக் கட்டிச் சாத்துப்படி (அலங்காரம்) நடத்துவர்; கேடகம், தேர் போன்றவற்றில் நடுவில் இருக்கை காணப்படும். இதனால் வாகனங்களின் மீது தெய்வ உருவங்களை வைத்துச் சாத்துப்படி செய்வது மிக எளிமை.

## பூத்தேவையின் மிகுதியும் குறைவும்

எந்த வாகனத்தில் இறைவனை எழுந்தருளச் செய்தாலும் அஸ்தம் பாதம் (கை, கால்) வைத்துத் துணிமணிகள் அணி மணிகள் பூட்டி அலங்காரம் செய்குவர். ரிஷபம், சிம்மம், அன்னம் போன்ற வாகனங்களில் கடவுளரை எழுந்தருளச் செய்தால், பல்வேறு மாலைகள் அணிவிக்கப் பெறும்; இறை உருவத்தைச் சுற்றிப்பூவாலாகிய திருவாட்சி மேலும் கீழும் அமையும். இவை அரை வட்டமாக இருக்கும். இரண்டும் இணைந்து இறைவனைச் சுற்றிப் பூவட்டம் காட்சி தரும். இந்தத் திருவாட்சியில் சிவப்பு, பச்சை, மஞ்சள், கருப்பு (வேர்) என்று வண்ணப் பூக்கள் அமைந்து காண்போர் கண்ணைக் கொள்ளையிடும். இறைவடிவிற்கும் திருவாட்சிக்கும் பூக்கள் மிகுதியாக வேண்டும். குதிரை வாகனத்திற்கு இவ்வளவு பூ அலங்காரமில்லை. கேடகம், படிச்சட்டப் பலகை போன்றவற்றிற்குப் பூத் தேவை குறைவு; வாகனங்களில் தெய்வங்களை எழுந்தருளச் செய்தால், பூத் தேவை மிகுந்து பொருட் செலவு கூடுதலாகும். பொருட் செலவு குறைவாக இருக்க வேண்டும் என்று கருதுவோர், வாகனங்களில் இறைவனை எழுந்தருளச் செய்யாமல், கேடகத்தில் எழுந்தருளச் செய்வர்.

## சிறுதெய்வக் கோயில்கள்

திருக்கோயில் திருவிழாவுக்குத் தேவையான பல வகையான வாகனங்களை நகரத்தார்கள் தனதாகவும் பொதுவாகவும் பொருள் திரட்டிச் செய்து கொடுத்திருக்கின்றனர். நகரத்தார்களைப் போலப் பிற இனத்தாரும் வாகனங்கள் செய்திருக்கின்றனர். அங்காளம்மன்,அய்யனார், கருப்பர் போன்ற சிறு தெய்வங்களுக்குத் தேவையான வாகனங்களும் நகரத்தாரால் செய்யப்பட்டிருக்கின்றன; இவற்றில் மரத்தால் அமைந்தவையே மிகுதி.

## உலாவரும் கடவுளரும் வாகனக் கவியும்

கடவுளரை வாகனங்களில் எழுந்தருளச் செய்து உலா வருகின்ற காட்சியைப் புலவர்கள் பாடியமையைத் தனிப்பாடல்களால் அறிய முடிகின்றது. காள மேகப் புலவர் திருமாலைப் `பருந்து எடுத்துப் போகுதுபார்' என்று பாடுவது இதற்குச் சான்றாகும். இறைவன் வாகனங்களில் எழுந்தருளி வருகின்ற காட்சியைச் சிறப்பித்துப் பாடுவது, `வாகனக் கவி' எனப்படும். ஐந்து, அல்லது பத்துச் செய்யுட்கள் இச் சிறுநூலில் இருக்கும். அரியக்குடி சீனிவாசப் பெருமாள் பற்றிய வாகனக் கவி, நகரத்தார் ஒருவரால் பாடப் பெற்றிருக்கிறது. இது திருக்கோயில் திருவிழாவை ஒட்டி எழுந்த புதிய இலக்கிய வகையாகும். திருக்குற்றாலக் குறவஞ்சி போன்ற நூல்கள் சிவபெருமான் வாகனத்தில் உலாவருவதைப் பாடுகின்றன. இதுபோன்ற குறிப்புகள், திருவிழாவில் வாகனத்தில் இறைவன் வருதலைப் பற்றியனவேயாகும்.

இன்ன வாகனத்தில் இறைவன் - இறைவி வருதலைக் கண்டால் இன்ன பயன் கிட்டும் என்றும் நூல்கள் நவில்கின்றன.

| வ.எண் | நாள் | வாகனம் | இறைவன் | தரிசனப்பயன் |
|---|---|---|---|---|
| 1 | முதல் | மஞ்சம் | சுவாமி அம்மன் | லெட்சுமிகடாட்சம் உண்டாகும். |
| 2. | இரண்டாம் | யானை அன்னம் | சுவாமி அம்மன் | கஷ்டங்கள் நிவர்த்தி |
| 3. | மூன்றாம் | பூதம் | சுவாமி அம்மன் | அரசாங்க நன்மை துஷ்டதேவதை அணுகாது. |
| 4. | நான்காம் | வெள்ளிரதம் மயில் | சுவாமி அம்மை | செல்வம் பெருகும் பூர்வீகச் சொத்துக் கிட்டும். |
| 5. | ஆறாம் | ரிஷபம் | - | எல்லாச் செல்வங்களும் உண்டாகும். |
| 6. | ஏழாம் | கைலாச வாகனம் வெள்ளி ரதம் | சுவாமி அம்பாள் | முகவசீகரம் சங்கீத வண்ணம் உண்டாகும். |
| 7. | எட்டாம் | பாரிவேட்டை குதிரை வாகனம் | - | யுத்த சன்னத்தமாகக் காட்சியளித்தலை வணங்கினால் |

| | | | | |
|---|---|---|---|---|
| | | காலை | | மனோதைரியமும் வீரமும் தெய்வ அருளுமுண்டாகும். |
| | | குதிரை வாகனம் இரவு | சுவாமி அம்பாள் | மனோரதங்கள் நிறைவேறும் |
| 8. | ஒன்பதாம் | தேர் | சுவாமி | சகல நன்மைகளும் புத்திர பாக்கியமும் வீடு நிலம் வாங்கும் பாக்யமும் கிடைக்கும். |

இவ்வாறு நகரத்தார்கள் திருகோயில் கட்டுவதில் பெரும் பொருள் செலவழித்திருப்பது போல வாகனங்கள் செய்வதிலும் நிறையப் பொருளைச் செலவழித்திருக்கின்றனர்.

## வாகனம் செய்தோர்
(இப்பட்டியல் முழுமையானதன்று.)

| எண் | ஊர் | | வாகனம் | செய்தோர் |
|---|---|---|---|---|
| 1. | திருவண்ணாமலை அண்ணாமலையார் கோயில் | 1 | மகாரதம் (1913) | கானாடுகாத்தான் வெ.சா. நாகப்ப செட்டியார் |
| | | 2. | அம்மன்தேர் (29.6.1956) | நகரத்தார்-பொது |
| | | 3. | வெள்ளிரதம் | இராமச்சந்திரபுரம் தீ.நா. பொதுக்குடும்பம் |
| | | 4. | சுவாமிதேர் | கோட்டையூர் பெ.க.அ. சித. வீரப்ப செட்டியார் மற்றும் நகரத்தார்கள். |
| | | 5. | பெரிய வெள்ளி ரிஷபம் | கோட்டையூர் அக.அமெ குடும்பத்தினர். |
| | | 6. | வெள்ளி பெரிய இந்திரவிமானம் | கோட்டையூர் பெ.க.அ. சித. வீரப்ப செட்டியார். |
| | | 7. | வெள்ளி சின்ன இந்திரவிமானம் | கோட்டையூர் பெ.க.அ. சித. வீரப்ப செட்டியார். |
| | | 8. | அம்மன் தேர் | கானாடுகாத்தான் கா.ராம.மு.ராம.ராமசாமி செட்டியார் |

| | | | | |
|---|---|---|---|---|
| | | 9. | வெள்ளிக் காமதேனு-சகடை | காரைக்குடி முத்து அரு.சாமிநாதச் செட்டியார். |
| | | 10. | வெள்ளிக் கற்பக விருட்சம்-சகடை | காரைக்குடி முத்து அரு.சாமிநாதச் செட்டியார் |
| 2. | பட்டமங்கலம் | 11 | வெள்ளி வாகனங்கள் | |
| 3. | கொ.லெட்சுமிபுரம் | 12 | பெரியகோவில் சிவன் கோவில் வெள்ளிக் கைலாச வாகனம் (5.7.1924) | கொ.லட்சுமிபுரம் ந.சொ.அரு. அருணாசலம் செட்டியார். |
| 4. | சீர்காழி | 13. | வெள்ளி ரிஷபம் | அமராவதிபுதூர் வயிநாகரம் குடும்பத்தார். |
| 5. | வைத்தீசுவரன் கோயில் | 13. | அ. வெள்ளித்தேர் | கானாடுகாத்தான் கரு.தூ |
| 6. | திருநாரையூர் | 14. | பிள்ளையார் பெருச்சாளி வாகனம் | காரைக்குடி ப.ரா்ம.லெ.ராம. இலக்குமணச்செட்டியார். |
| 7. | திருச்சிக்கல் | 15. | சிங்காரவேலர் வாகனங்கள் (5.6.1933) | ஆ.தெக்கூர் கருமுத்து. அழ. அழகப்ப செட்டியார். |
| 8. | திருக்களர் | 16 | வெள்ளிக்கேடகம் | அழகாபுரி சி.சு.சுப்பிரமணியன் செட்டியார். |
| 9. | திருப்பாதிரிப்புலியூர் | 17 | வெள்ளிரதம் | கடியாபட்டி தீ,சொ.பொது |
| | | 18. | அம்மைக்குத் தங்கப் பல்லக்கு | கடியாபட்டி தீ.சொ.பொது. |
| | | 19. | தங்கத்தோளுக்கு இனியான் | கடியாபட்டி தீ.சொ.பொது. |
| 10. | குன்றக்குடி | 20 | சண்முகநாதப் பெருமான் | தங்கக்கேடகம் அன்னையார் வெள்ளச்சி ஆச்சி முயற்சியால் நகரத்தார்கள் உதவியுடன் செய்யப்பெற்றது. |
| 11. | எழுவங்கோட்டை | 21 | வாகனங்கள் | நடுவிற்கோட்டை பெருமருதூருடையார் |

செட்டிநாடு சிவன் கோயிலிலுள்ள காளை வாகனம் முன்னும் பின்னும் பார்ப்பதுபோல அமைக்கப்பட்டிருக்கிறது.

# 3. நகரத்தாரின் பசுமடத் தருமம்.

## ஆவின் சிறப்பு

மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார், மணி மேகலையில் பால்தரும் பசுவின் சிறப்பினை,

"விடுநில மருங்கில் படுபுல் லார்ந்து
நெடுநில மருங்கின் மக்கட்கு எல்லாம்
பிறந்தநாள் தொட்டும் சிறந்ததன் தீம்பால்
அறந்தரு நெஞ்சோடு அருள்சுரந்து ஊட்டும்"

என்று (காதை 13 : அடி 51-54) எடுத்துரைக்கின்றார். ஆவின் பெருமையையும் தேவையையும் உணர்ந்த தமிழர் அவற்றை வளர்ப்பதும் கண்ணுங்கருத்துமாய்க் காப்பதும் தம் கடமை எனக் கொண்டிருந்தனர். தமிழிலக்கணங்கள் வெட்சி, கரந்தை என்று பசுக்களை மையப்படுத்திப் போரை விளக்குவதும் அவற்றின் சிறப்பையே காட்டுகின்றது. வேளாளர்கள் போல வைசியர்களும் பசுக்களைப் பேணினர்; அவர்களைக் 'கோவைசியர்கள்' என்று வழங்குவது மரபு. நாட்டுக் கோட்டை நகரத்தார்களும் பசுக்களை வளர்ப்பதில் ஆர்வமுடையவர்களாய் விளங்கினார்கள். இவர்கள் தங்கள் வீடுகளிலேயே பால் மாடுகளைப் பராமரித்துப் பால், தயிர், மோர், நெய் என்று அவற்றின் பயனைத் துய்த்தனர்.

## தெய்வங்களின் திருக்கோயில்

தமிழர்கள் அனைவரும் பசுக்களைத் தெய்வமாகக் கருதிப் போற்றிக் கொண்டாடுகின்றனர். இதற்கு நகரத்தார்களும் விதிவிலக்கல்லர். திருக்கோயில் திருக்குட முழுக்கு விழா, புதுமனை புகுவிழா, அறுபதாண்டு நிறைவு விழா போன்ற பல்வேறு சிறப்பு நாள்களில் 'கோபூசை' என்னும் சிறப்பு வழிபாடு நடைபெறும். அருளுள்ளம் வாய்ந்த ஆக்கள் கடவுள் வடிவாகக் கொள்ளப்பெறும் தகையது. சிவபிரானுடைய வாகனமான நந்திதேவருக்குள்ள சிறப்பைப் போலப் பசுக்களுக்கும் முதன்மை உண்டு.

சேக்கிழார் பெருமான், `மேயவேணித் திருமுடிமேல் விரும்பி ஆடி அருளுதற்குத் தூய திருமஞ்சனம் ஐந்தும் அளிக்கும் உரிமைச் சுரபிகள் தாம்' (சண்டேசர் புராணம் : 20) என்று ஆனினம் சிவவழிபாட்டிற்குரிய பால், தயிர், நெய், கோமயம், கோசலம் என்று ஐந்து பொருள்களைத் தருதலைப் பாராட்டிப் பேசுவர். திருநீற்றுக்கு வேண்டிய சாணத்தைத் தருவதும் பசுவே; ஆதலால் அதனை `நீறு தரும் மூலம் அவதாரம் செய்யும் மூர்த்தம்' என்று திருத்தொண்டர் புராணம் போற்றுகிறது. அப்புராணம்.

``தங்கும் அகில யோனிகட்கும் மேலாம் பெருமைத் தகையன;
பொங்கு புனித தீர்த்தங்கள் எல்லாம் என்றும் பொருந்துவன;
துங்க அமரர் திருமுனிவர் கணங்கள் சூழ்ந்து பிரியாத
அங்கம் அனைத்தும் தாம்உடைய அல்லவோ ? நல்ஆன் இனங்கள்"
(சண்டேசுவரர்: 19)

என்று பசுவின் தெய்வச் சால்பை எடுத்துரைக்கிறது.

## பசுமடம் நிறுவலும் நிறுவாமையும்

சிவ வழிபாட்டில் பேர்டுபாடுடைய நகரத்தார்கள் ஆனினத்தைப் பேணி வளர்த்துத் திருக்கோயிலுக்குப் பால் வழங்கப் பசுமடங்களைப் பல ஊர்களிலும் கட்டி வைத்திருக்கின்றனர். இவ்வாறு ஏற்படுத்தப் பெற்ற பசுமடங்கள் மிகப்பல. இவை எல்லாம் சிவன் கோயில்களைச் சார்ந்தவை; நகரத்தார்கள் ஐயனார், கருப்பர் வழிபாட்டில் ஆர்வம் காட்டினாலும் அக்கோயிலுள்ள ஊர்களில் அவர்கள் பசு மடம் ஏற்படுத்தவில்லை. கீரணிப்பட்டி முத்துமாரி அம்மன் கோயிலில் மு.அள; சிவ. கரு; மு.லெ.சி; மற்றும் பலர் பசுமடம் வைத்திருக்கின்றனர்.

## பசுமடம் நிறுவும் அடிப்படைகள்

நகரத்தார்கள் சிவன் கோயிலைச் சார்ந்து பசுமடம் ஏற்படுத்திய அடிப்படையை நான்கு வகையாகப் பிரித்துக் காட்டலாம்.

1. பொது நிதியிலிருந்து உண்டாக்கப்பட்டவை.
2. தனிப்பட்ட ஒரே குடும்பத்தார் ஏற்படுத்தியவை -- தனிப்பட்டோர் ஏற்படுத்தியவை.
3. நகரப் பொதுவாக ஏற்படுத்தியவை.
   (அ) ஒரே ஊரைச் சேர்ந்தவர்கள்
   (ஆ) வெவ்வேறு ஊரைச் சேர்ந்தவர்கள்
4. ஒன்றுக்கு மேற்பட்ட குடும்பத்ினர் ஏற்படுத்தியவை.

இந்நான்கு வகைப்பகுப்பும் பசுமடத் தருமத்தை ஏற்படுத்திய முறையில் பகுக்கப்பட்டவை. பசுமடங்கள் ஏற்பட்ட ஊர்களின் அடிப்படையில் மூன்று வகையாகப் பகுக்கலாம்.

அவையாவன

1. நகரத்தார்கள் வாழுகின்ற உள்ளூரில் ஏற்படுத்தியவை.
2. செட்டிநாட்டைஒட்டிய சிறந்த பகுதிகளில் ஏற்படுத்தியவை.
3. பாடல் பெற்ற திருத்தலங்களில் ஏற்படுத்தியவை.

## ஒன்பது கோயில்—பசுமடம்

நாட்டுக்கோட்டை நகரத்தார்களுக்கு மிக அணுக்கமான தொடர்புடையன ஒன்பது நகரக் கோயில்ள். இவற்றில் இளையாத்தக்குடி, சூரைக்குடி, வேலங்குடி, நேமம் ஆகிய நான்கு ஊர்களில் நகரப் பொதுவில் ஏற்படுத்திய பசுமடம் இருந்திருக்கிறது. பிள்ளையார்பட்டிக் கோயிலில் பி. அழகாபுரி ராம.மு.சோம. சோமசுந்தரம் செட்டியார் ஒருவரே ஏற்படுத்திய பசுமடம் இன்று வரை தொடர்ந்து நடைபெற்று வருகிறது. இலுப்பைக்குடி, இரணியூர், மாத்தூர், வயிரவன் கோயில் ஆகியவற்றில் 'பசுமடம்' என ஒன்று தனியே நிறுவப்படவில்லை. ஆனால் நகர விடுதியில் பால் மாடு வைத்துக் கோயிலுக்குப் பால் வழங்கியுள்ளனர்.

## தனிப்பட்டோர் ஏற்படுத்தியவை

நகரத்தார்கள் வாழுகின்ற ஊர்கள் (பழைய கணக்குப்படி) தொண்ணூற்றாறு; அவற்றில் இருபதைந்து ஊர்களில் மட்டுமே பசுமடம் ஏற்பட்டிருக்கிறது. இவற்றில் தனிப்பட்ட குடும்பத்தினர் ஏற்படுத்தியன :

| வஎண் | ஊர் | பெயர் |
|---|---|---|
| 1. | அரண்மனை சிறுவயல் | தெ.பெரி.பெரியண்ணன் செட்டியார் |
| 2. | உ.சிறுவயல் | மெ.சு.மெ. நாராயணன். |
| 3. | உலகம்பட்டி | பழ.கரு.நா.நாகப்ப செட்டியார் |
| 4. | கண்டவராயன்பட்டி | வடு.பெரி.ந.கரு. நல்லகருப்பன் செட்டியார். |
| 5. | சிறுகூடல்பட்டி | ஆத. கு. பழ. மு. முத்தையா செட்டியார் |
| 6. | சிராவயல் | பெரி. மு. நா. |
| 7. | சோழபுரம் | அலவாக்கோட்டை சி.வெ. முத்துராமன் செட்டியார். |
| 8. | பறியாமருதுபட்டி | முரு.பழ. முத்துராமன் செட்டியார். |
| 9. | மிதிலைப்பட்டி | க.எ. பழ. |
| 10. | கொ. லெட்சுமிபுரம் | மு. சி. வி. ந. சொ. அரு. |
| 11. | வலையபட்டி | பு. கு. குமரப்ப செட்டியார். |
| 12. | வேந்தன்பட்டி | ராம. மு. முத்துராமன் செட்டியார் |

செட்டிநாட்டை ஒட்டிய சிறந்த பகுதிகளில் தனிப்பட்டவர்கள் நிறுவிய பசுமடங்கள் பலவாம். அதன் விவரம் :

| வஎண். | ஊர். | பெயர் |
|---|---|---|
| 1. | கண்டதேவி | பழ. பி.ச. பிச்சப்ப செட்டியார் |
| 2. | குன்றக்குடி | கோனாபட்டு சு. மு. சு. |
| 3. | கோயிலூர் | காரைக்குடி ராம. மு. |
| 4. | திருமெய்யம் | காரைக்குடி வெ. ராமு. |
| 5. | நயினார் கோயில் (நயினார்பட்டி) | வீர. ஆ. சொ. |
| 6. | இராயவரம் | கானாடுகாத்தான் |
| | மலைக்கொழுந்தீசர் கோயில் | சா. அ. நா. சு. சுப்பிரமணியன் செட்டியார் |
| 7. | மானாமதுரை | ஆ. சுப. சு. சுப்பிரமணியன் செட்டியார். |

மேலே சுட்டிக்காட்டிய பசுமடங்கள் அனைத்தும் தனிப்பட்ட ஒரே குடும்பத்தார் ஏற்படுத்தியன ; இவை செட்டி நாட்டுக்குள் அடக்கமான ஊர்களில் உள்ளவை.

## பொதுநிதியில் ஏற்பட்டவை

இவைபோல நகரத்தார் பொது நிதியில் செட்டிநாட்டு வட்டார ஊர்களில் பசுமடங்கள் ஏற்படுத்தப்பட்டன. அவ்வாறு பசுமடம் அமைக்கப் பெற்ற ஊர்கள் ஆவினிப்பட்டி, காரைக்குடி (நாகநாத சுவாமி கோயில்), சொக்கனேந்தல், வேகுப் பட்டி என்பனவாம்.

## பலர் ஏற்படுத்தியவை

நகரத்தார்களில் சிலர் கூடிக் கண்டனூர், கல்லல். கோனாபட்டு, சண்முகநாதபுரம், நடராசபுரம், ஆகியவூர்களில் பசுமடம் நிறுவினர். செம்பனூரில் சு. சி. ராமு. ம. இராமநாதன் செட்டியாரும் குமநா.குடும்பத்தாரும் பசுமடம் அமைத்தனர். பூலாங்குறிச்சியில் ராம. ப.வ. ராம தனதில் மூலதனம் வைத்துக் கான்சாத்துமலை முருகன் கோயிலுக்குப் பால் கொடுத்து வந்தார்கள்.

நகரத்தார்களில் ஆடவர்களைப் போலப் பெண்களும் அறங்களை நிறுவிச் செயற்படுவதில் ஆர்வமிக்கவர்கள். பூங்குடியில் கண்ணம்மை ஆச்சி பெருந் தொகையைச் செலவிட்டுப் பசுமடம் நிறுவியுள்ளார்கள். பாடல் பெற்ற தலங்களிலோ பிறவூர்களிலோ நகரத்தார் குலப் பெண்கள், பசுமடம் நிறுவவில்லை. பசுமடம் நிறுவவும் தொடர்ந்து நடத்தவும் நிறையத் தொகையும் ஆட்களும் தேவை. திருக்கோயிலில் விளக்கு அமைத்தல், கட்டிடம் கட்டல் போன்ற அறங்களில் பங்குபெற்ற ஆச்சிமார்கள் பசுமடம் நிறுவநினைத்திலர். பெண்கள் நிறுவிய பசுமடங்களில் இந்தப் பசு மடம் ஒன்றுதான் தெரிகின்றது

## பாடல்பெற்ற தலங்கள்

செட்டிநாட்டூர்களிலும் வட்டாரத்திலும். பசுமடம் அமைத்த நகரத்தார்கள், பாடல் பெற்ற திருத்தலங்களிலும் பசுமடம் அமைக்கலாயினர். நகரத்தார்கள், பாடல் பெற்ற திருத்தலங்களில்தான் முதற்கண் பசுமடங்கள் அமைத்திருக்க வேண்டும்; அதுபோலப் பசுமடம் நிறுவிய அறத்தை முதற்கண் தொடங்கிய நகரத்தார் யார்? அவர் எவ்வூரினர்? என்பன போன்ற கருத்துகள் ஆராய்தற்குரியன. கிடைத்துள்ள தரவுகளுக்கேற்ப முதற்கண் பாடல் பெற்ற தலங்களில் தாம் பசுமடம் நிறுவப்பட்டிருக்க வேண்டும் என்றும் இத்தருமத்தைத் தேவக்கோட்டை நகரத்தார்களே தொடங்கி இருக்கவேண்டும் என்றும் முதன்முதல் தொடங்கியவர் யார் என்பதை ஆராய வேண்டும் என்றும் கருத்து வெளிப்படுகிறது.

நாட்டுக்கோட்டை நகரத்தார்கள், காவிரித் தென்கரைத் தலங்கள் பதினாறில் பசுமடங்கள் நிறுவியுள்ளனர். மிகுதியான எண்ணிக்கை இப்பகுதியில் தான். அடுத்துப் பாண்டிய நாட்டுப் பதிகள் பதினொன்றிலும், தொண்டை நாட்டுத் திருத்தலங்கள் நான்கிலும் நடுநாட்டுத் திருத்தலங்கள் மூன்றிலும் கொங்கு நாட்டுத் திருத்தலங்கள் இரண்டிலும் பசுமடங்கள் நிறுவப்பெற்றன.

| வ.எண் | ஊர் | நிறுவியவர். |
|---|---|---|
| அ) | கொங்குநாடு | |
| 1. | திருக்கருவூர் | கானாடுகாத்தான் சா. ராம. மு. |
| 2. | திருப்பேரூர் | தேவகோட்டை ச. அரு. அரு. சி. கரு. சா. |
| ஆ) | நடுநாடு | |
| 3. | திருமுதுகுன்றம் | தேவகோட்டை பழ. சுப. |
| 4. | திருப்பாதிரிப்புலியூர் | கடியாபட்டி தீ. நா. முத்தையா செட்டியார். |
| 5. | திருவண்ணாமலை | 1. சா. நா. அ. நா.<br>2. இராமச்சந்திரபுரம் முரு. மு. அ. முத்தையா செட்டியார். |

இ) தொண்டைநாடு

| | | |
|---|---|---|
| 6 | திருக்கச்சி ஏகம்பம் (காஞ்சிபுரம்) | கண்டனூர் ராம. வயி. அரு. |
| 7. | குமரகோட்டம் | மேற்படி வயி. ராம. |
| 8. | திருக்கள்ளில் | தேவகோட்டை மெ. அரு. |
| 9. | திருவொற்றியூர் | தேவகோட்டை சு. ராம. சு. லெ. |

ஈ) பாண்டிநாடு

| | | |
|---|---|---|
| 10. | மதுரை | பூங்குடி சுட. க. சித. |
| 11. | திருஆப்பனூர் | அரிமளம் பெரி. முரு. ராம. முருகப்ப செட்டியார். |
| 12. | திருப்பரங்குன்றம் | புதுவயல் அ.சு. பழ. |
| 13. | திருஏடகம் | தேவகோட்டை உ. ராம. மெ. சுப. சேவு |
| 14. | திருப்புனவாயில் | தேவகோட்டை சேவு. ராமு. அரு |
| 15. | திருவாடானை | கோனாபட்டு பெ. சித. |
| 16. | திருக்கானப்பேர் | தேவகோட்டை சொ. மெ. பழ. & அழ. வீர. சித. & பழ. ப. பழ. |
| 17. | திருப்பூவணம் | உ.ராம. உ. மு. |
| 18. | திருநெல்வேலி | தேவகோட்டை வி. கரு. சித. |
| 19. | பழநி | தேவகோட்டை திருமுருகாற்றுப்படை இலக்குமணன் செட்டியார் |
| 20. | திருப்பெருந்துறை | அரிமளம் அ. அரு. |

உ) காவிரி வடகரைத் தலம்

| | | |
|---|---|---|
| 21) | திருநெல்வாயில் (சிவபுரம்) | நகரத்தார் பலர் |
| 23. | திருநல்லூர்ப் பெருமணம் | காரைக்குடி நா. கு. |
| 24. | திருவியலூர் | தேவக்கோட்டை மைசூர் இராமநாதன் செட்டியார் |
| 25. | புள்ளிருக்கும் வேளூர் | பொதுநிதி |
| 26. | திருவையாறு | தேவகோட்டை வ.அழ.வ. சோலைமலை செட்டியார். |
| 27. | திருவானைக்கா | காரைக்குடி சி.மு. அரு. நாராயணன் செட்டியார் |

ஊ)காவிரித்தென்கரைத்தலம்

| | | |
|---|---|---|
| 28. | திருப்பராய்த்துறை | ஆத்தங்குடி சு. ராம. சு. |
| 29. | திருத்தென்குடித் திட்டை | பலவான்குடி ராம. கு. ராம. இராமசாமிச்செட்டியார். |
| 30. | திருவிடைமருதூர் | தேவகோட்டை மெ. லெ. மெ. |
| 31. | திருமயிலாடுதுறை | நகரப்பொது |
| 32. | திருக்கடையூர் | கோனாபட்டு சுப. கு. சொ. |
| 33. | திருவேட்டக்குடி | நகரப் பொது |
| 34. | திருஅரிசிற் கரைப்புத்தூர் | நேமத்தான்பட்டி மெ. மு. பழ. |
| 35. | திருக்கலயநல்லூர் | காரைக்குடி முத்த. வெ. வெள்ளையன் செட்டியார் |

| | | |
|---|---|---|
| 36. | திருவிற்குடி | பள்ளத்தூர் சொ. மு. அ. மெ. அருணாசலம் செட்டியார். |
| 37. | திருச்சிக்கல் | ஆ. தெக்கூர் ஆறு. நா. ஆறுமுகம் செட்டியாரும் அவர் உடன்பிறந்தோரும் |
| 38. | திருகடுவாய்க் கரைப்பத்தூர் | தேவகோட்டை அ.ராம. அ. லெ. |
| 39. | திருஇரும்பூளை (ஆலங்குடி) | தேவகோட்டை மு.ப.ராம. அ. வெ. |
| 40. | திருப்பூவனூர் | காரைக்குடி பனை. மெ. மெ. பழனியப்ப செட்டியார் |
| 41. | திருக்களர் | காரைக்குடி ஆத. மெ. ஆத. லெ. ஆத. |
| 42. | திருக்கொள்ளம் புதூர் | நெ. இலக்குமிபுரம் லெ. ஆ. வயி வயிரவன் செட்டியார். |
| 43. | திருமறைக்காடு | 1. பள்ளத்தூர் அழ. முரு. அழ. சொ & அழ. ராம. சொ. அ.<br>2. காரைக்குடி ந.ப.பாம.க. இராமசாமி செட்டியார் |
| 44. | கிள்ளுகுடி | கொத்தமங்கலம் நகரத்தார் |
| 45. | தில்லைவிளாகம் | காரைக்குடி மு. சிவ.மெ. மெய்யப்ப செட்டியார் & யார் மகன் வினைதீர்த்தான் செட்டியார் & லெட்சுமணன் செட்டியார். |

## பசுமடப்பணி ஆர்வலர்

நகரத்தார்கள் திருவண்ணாமலையிலும் திருமறைக்காட்டிலும் மட்டுமே இரண்டு பசுமடங்களை அமைத்திருக்கின்றனர். திருத்தலத்தின் மீது நகரத்தாருக்கு உள்ள ஈடுபாடும் தொடர்பும்தாம் இவ்வாறு இரண்டு பசுமடங்கள் ஏற்படக் காரணமாகும். தேவகோட்டை நகரத்தார் பதினைவரும் காரைக்குடி நகரத்தார் எண்மரும் பள்ளத்தூர் நகரத்தார் மூவரும் கானாடுகாத்தான் நகரத்தார் இருவரும் பசுமடங்கள் நிறுவியிருக்கின்றனர்.

## பசுமடங்கள் தோன்றக் காரணங்கள்

நகரத்தார்கள் தனியாகவும் பொதுவாகவும் திருத்தலங்களில் பசுமடம் அமைத்தற்கு ஏதேனும் காரணம் இருக்க வேண்டும்; சிலர், பால் வழங்குதலின் சிறப்பை உணர்ந்து பசுமடம் அமைத்தனர். திருக்கோயில் சிவபெருமானுக்கு அபிஷேகம் செய்யத் தூய ஆவின்பாலாக இருக்க வேண்டும் என்றும் எருமைப் பாலாக இருக்கக் கூடாது என்றும் தண்ணீர் கலந்து பால் இருத்தலாகாது என்றும் கருதிநகரத்தார்கள் பசுமடம் வைத்தனர். பசுமடம் வைத்தமைக்கு நேர்த்திக் கடனும் ஒரு காரணமாகும். திருத்தலங்களில் பசுமடம் ஏற்பட்டமையைப் புலப்படுத்தக்கூடிய இரண்டு நிகழ்ச்சிகள் இங்குத் தரப்படுகின்றன.

## நோயும் நோய் நீக்கமும்

நெற்குப்பைக்கு அருகிலுள்ள சதுர் வேதிமங்கலத்தில் (மட்டியூர் ; இன்று எஸ்.வி. மங்கலம் என்பர்) உருத்திர கோடீஸ்வரர் கோயில் என்ற பாண்டியர் காலக் கோயிலுள்ளது. இங்குக் கி.பி. 1914 இல் நாச்சியாபுரம் நகரத்தார்

கண்ணப்ப செட்டியார் பசுமடம் நிறுவினார். அவர் ஏன் நிறுவினார் என்பதற்கு ஒரு வரலாறு உண்டு. நாச்சியாபுரம் கண்ணப்ப செட்டியார் தன்னூரிலிருந்து சதுர்வேதிமங்கலம் வழியாகத் தனக்கு நிலபுலமுள்ள இஞ்சிக்குடிக்கு மாட்டு வண்டியில் போயிருக்கிறார். உடல் நலத்துடன் பயணத்தைக் தொடங்கிய செட்டியாருக்குத் திடீரென்று உடல் நலமின்றிக் குளிரும் காய்ச்சலுமாகி விட்டது. செட்டியார் உடல் நிலையைக் கண்ட வண்டிக்காரன் மாடுகளை விரைவாய் ஓட்டிச் சதுர்வேதிமங்கலத்தை அடைந்தான். அங்கு யாராவது உதவக்கூடியவர்கள் உள்ளார்களா ? என்று வண்டிக்காரன் விசாரிக்கவும், ஊர் மக்கள் அவ்வூரிலுள்ள சைவவீட்டைக் காண்பித்து அங்குப் போகச் சொன்னார்கள். செட்டியார் அங்குப்போய்ச் சேர்ந்தார்.

அந்தச் சைவ வீடு நல்ல பண்பான குடும்பம்; மிதிலைப்பட்டி செவ்வூரில் வாழ்ந்த கவிராயர்களுக்கு உறவான குடும்பம். அந்த வீட்டின் தலைவி - ஆச்சி - செட்டியாரின் நோய் நிலையைக் கண்டு, தங்கள் குடும்பத்திற்கு வைத்திருந்த மருந்துகளை உட்கொள்ளுமாறு கொடுத்தார். தூதுவளை ரசம் வைத்துக் கஞ்சி உணவளித்தார். அந்த நேரத்தில், வெளியே சென்றிருந்த ஆச்சியின் கணவர் வீடு வந்தார். சைவ ஆச்சியும் எல்லாவற்றையும் தன் கணவரிடம் தெரிவித்தார். நேரம் ஓடியது. சைவ வீட்டின் மருந்தும் உணவும் ஓய்வும் செட்டியாருக்கு உடல் நலத்தையும் மன வலிமையையும் ஏற்படுத்தின. அக் குடும்பத்தாரின் கனிந்த அன்பால் நாச்சியாபுரம் செட்டியார் நலம் பெற்றார். ஒரு நாள் ஓடி விட்டது.

செட்டியாருடன் பேசிக் கொண்டிருந்த சைவச் சான்றோர், `இங்குப் புராதனமான சிவாலயம் உள்ளது; அதற்குப் பால் அபிஷேகத்துக்குப் பசுமடம் ஒன்று அமைக்க வேண்டும்; இந்த வழியாக வந்து போகும் நகரத்தார் பலரிடமும் என் வேண்டுகோளைச் சொல்லிவிட்டேன்; அதில் நீங்கள் ஆயிரமாவது மனிதர்' என்றார். செட்டியாரும் `நானே இதைச் செய்கிறேன்; மற்றவர்கள் போல் என்னைக் கருத வேண்டாம்' என்று சொல்லிவிட்டுத் தன் உடைய நிலபுலங்களைப் பார்க்கப் போய்விட்டார். ஒரு வாரத்தில் மீண்டும் சதுர்வேதிமங்கலம் வழியாக நாச்சியாபுரம் வந்து சேர்ந்தார்.

## விரைந்து தருமம் உருவாகுதல்

ஊருக்கு வந்ததும் முதல் வேலையாகச் சுழிசுத்தமான ஓர் இளங்கன்றுள்ள இளம் பசுமாட்டையும் அதை மேற்பார்க்க ஓர் ஆளையும் ஏற்பாடு செய்து மங்கலத்துக்கு அனுப்பி வைத்தார். செட்டியாருக்கு மருத்துவம் செய்து அன்ன மிட்ட வீட்டிலேயே, உடனடியாகப் பசுமடம் உருவாகிவிட்டது. பின், செட்டியார் இங்கு வந்து பசுமடத்திற்கு இடம் வாங்கினார். சைவக்குடும்பத்தினரே குறைந்த விலைக்குத் தங்கள் நிலத்தில் ஒரு பகுதியைக் கொடுத்தனர். கிபி 1914 இல் இப் பசுமடம் கட்டப்பெற்று நன்கு நடைபெற்றது வந்தது. (தகவல்: சைவக் குடும்பத்தைச் சார்ந்த ஆசிரியர் சோமசுந்தரம்பிள்ளை அவர்கள்.)

## பொதுநிதியில் தருமம்

தனிப்பட்ட ஒருவர் பசுமடம் நிறுவிய சூழ்நிலையை நாச்சியாபுரம் கண்ணப்ப செட்டியார் நிகழ்ச்சி காட்டுகின்றது. கீழச்சிவல்பட்டி -- பி. அழகாபுரி நகரத்தார்கள் தலைமையில், ஆண்டுதோறும் சித்திரைத் திங்களில் வைத்தீசுவரன் கோயிலுக்குத்

தொன்றுதொட்டு வண்டிப் பயணமாகவும் நடைப் பயணமாகவும் மக்கள் செல்லுகின்றனர். இவர்கள் வைத்தீசுவரன் கோயிலுக்குப் போய்த் தாங்கள் கொண்டு செல்லும் காணிக்கைகளை அங்குள்ள நகர மடத்தில் மகமை எழுதுவது வழக்கம். இவ்வாறு வரும் பொன்னும் வெள்ளியும் பணமும் மிகுதி. ஆண்டுதோறும் இந்த வருமானம் நகர விடுதிக்கே போயிற்று. வண்டிப் பயணத்தில் தலைமையும் முதன்மையும் உடையவர்கள், இந்த மகமையைத் தனியே எழுதித் தருமம் நடத்த வேண்டும் என்று கருதினார்கள். க. தெ. கி. தேனப்ப செட்டியார், புதிதாகப் பேரேடு வாங்கி மகமையைத் தனியே எழுதிக் கணக்கைத் தொடங்கினார்கள். அந்த ஆண்டே நிறைய வருமானம் வந்தது.

இந்த வருமானத்தில் பசுமடம் நடத்த வேண்டும் என்பது தேனப்ப செட்டியாரின் திருவுள்ளம்; வேறு சிலர் தேர் செய்ய வேண்டும் என்றனர். பின்னர் நகர மடத்தில் திருவுளச் சீட்டுப் போட்டுப் பார்த்ததில் `தேர்' என்று முடிவாயிற்று. திருவுளச் சீட்டு எழுதியவர், இரண்டு சீட்டிலும் `தேர்' என்றே எழுதி எல்லாரையும் ஏமாற்றி விட்டார்; இறைவன் அவரைச் சோதிக்கவே பின் தான் செய்த பிழையைச் சொல்லித் திருநீறு பெற்றார். இறுதியில் பசு மடம் நிறுவப் பெற்றது. வைத்தீசுவரன் கோயிலில் பசுமடம் ஏற்பட்ட வரலாறு இதுவாகும். (தையல் நாயகி மாலை 1996, பார்க்க).

## ஒன்றே ஒன்று

பசுமடம் உருவாதற்கு மேலே இரண்டு வரலாற்று நிகழ்ச்சிகள் சுட்டிக் காட்டப்பட்டன. இவைபோல இன்னும் பல இருக்கலாம். பசுமடங்களை அமைப்பதற்கு வேறு சில அடிப்படைகளும் உண்டு. தனிப்பட்டவர்கள் தாங்கள் தொழில் செய்த ஊர்கள் பாடல் பெற்ற தலங்களாக இருந்தாலும் அங்கே பசுமடம் நிறுவினார்கள். வரதையான தெய்வங்களின் திருவருளைப் பெறுதற்குப் பலர் திருத்தலங்களில் பசுமடம் அமைத்ததும் உண்டு. ஒரு தலத்தில் யாராவது நகரத்தார் பசுமடம் நிறுவியிருந்தால், அடுத்தவர் அந்த ஊரில் பசுமடம் தொடங்கச் சென்றால், முன்னர் இருப்பதால் இன்னொரு மடத்தை அங்குத் தொடங்குவது இல்லை. திருவண்ணாமலையிலும் திருமறைக்காட்டிலும் மட்டுமே நகரத்தார்கள் இரண்டு பசுமடங்களை அமைத்திருக்கின்றனர்.

## நகரவிடுதியைச் சார்ந்தமை

நகரத்தார்கள், இமயம் முதல் குமரி வரை நகரவிடுதி அமைத்து இறையுணர்வு மிக்கவர்களாய் வாழ்ந்தனர். அவர்கள் தனியாகத் தங்கித் தெய்வ தரிசனம் செய்து நற்கதி அடையப் பெரிதும் விரும்பினர். நகர விடுதியில், வழிபாட்டுக்குரிய கடவுளர்களாக `விநாயகர், தண்டாயுதபாணி, வேல், சிவகாமி உடனாய நடராசர் ஆகியோரை அமைத்தனர். இவர்களை நித்திய வழிபாடு செய்யவும் ஏற்பாடு செய்தனர். விடுதிகளில் நகரத்தார்கள் தங்கிச் சிவதெரிசனம் செய்தபோது அபிஷேக ஆராதனைக்குப் பாலின் தேவையையும் அதன் இன்றியமையாமையையும் உணர்ந்தனர். அபிஷேகப் பாலை வெளியிடங்களில் வாங்கியபோது, பால் தூய்மையற்றதாயும் எருமைப் பால் கலந்ததாயும் நீர்த்தன்மை மிக்கதாயும் இருந்ததைக் கண்டு வருந்தினர். எனவே பால் மாடுகள் வாங்கிப் பராமரித்துத் தூய பாலைச் சிவபிரானுக்குத் திருமஞ்சனம் செய்ய வேண்டும் என்று எண்ணினர்.

இதனால் நகர விடுதியுடன் ஒன்று அல்லது இரண்டு பால் மாடுகளை வைத்துப் பால் கொடுத்தனர். நகர விடுதியின் அங்கமாகப் பசுமடம் தோன்றிற்று.

## நந்தவனச் சார்பு

நகர விடுதியை ஒட்டிப் பால் மாடுகள் வளர்க்கப் பெற்றது போல நந்தவனத்தை ஒட்டியும் பசுமடம் அமைக்கப் பெற்றது. நந்தவனத்தின் ஒரு பகுதியில் பசுத் தொழுகட்டப்பட்டது. பசுமாடுகளின் கழிவு, நந்தவனத்துக்கு உரமாயிற்று; நீர்ப்பாய்ச்சும் கிணறு மாடுகளும், காளைகளும் குளிப்பாட்டவும் குடிக்கவும் நீர் தரும் மையமாயிற்று. இவ்வாறு நந்தவனத்தைச் சார்ந்து பசு மடமும் தோன்றிற்று. பி. அழகாபுரியில் க.தெ. நா. அங்கப்ப செட்டியார் நந்தவனத்தையும் பசுமடத்தையும் ஒன்றாக அமைத்துத் தெய்வத் திருப்பணி செய்தமை குறிக்கத்தக்கது. காசியில் நகர விடுதி, நந்தவனம், பசுமடம் ஆகிய மூன்றும் ஒன்றாக இணைந்து ஒரே நிறுவனமாகக் கடவுட் பணி செய்து வரும் பாங்கு, நகரத்தார்களுக்குக் கோடிக் கோடிப் புண்ணியத்தைக்கொட்டிக் கொடுத்து வருகிறது.

## தனியே வளருதல்

பசுமடம், ஒரு சார்பு, நிறுவனமாக இருந்தபோது, நிறையப் பால் மாடுகளை வைத்துத் தொடர்ந்து திருக்கோயிலுக்கு நிறையப் பால் கொடுக்க முடியவில்லை; மாடுகள் பால் வற்றுவதும் பயிராவதுமாக (கரு உண்டாதல்) இருக்கவே, திருமஞ்சனத்துக்குப் பால் வழங்க முடியாமல் முட்டுப்பாடு ஏற்பட்டது. இக்குறைகளைக் களைந்து நிறைவாகப் பால் வழங்கும் தெய்வப் பணியைத் தொடர்ந்து நடத்த நகரத்தார்கள் தனியே 'பசுமடம்' என்ற அமைப்பைக் கண்டு நிறுவினர். இதுவே 'கோசாலை' என்று போற்றப் பெற்றது. இந்த அமைப்பை முதற்கண் நிறுவிய நகரத்தார் யார் என்று தெரியவில்லை.

## பசுமடம் அமைப்பும் கட்டிடமும்

நகரத்தார்கள் பசுக்கள், அவற்றை மேற்பார்க்கும் கோனார், அதை நிருவகிக்கும் கணக்குப் பிள்ளை ஆகியவர்கள் வாழ்ந்திடத் தக்கக் கட்டிடங்கள் கட்டினர்; இக்கட்டிடங்கள் நகர விடுதியை ஒட்டியோ தேரோடும் வீதியிலோ கோயிலுக்கு அருகிலோ அமையுமாறு கட்டப்பட்டன. பசு மடக்கட்டிடங்கள் அனைத்தும் கற்கட்டிடங்கள்; நூறாண்டுகளுக்குக் குறையாமல் செம்மையாக இருக்குமாறு கட்டப்பட்டன. இவை செட்டிநாட்டுக் கட்டிடப் பாணியில் அமைந்தவை. சில இடங்களில் பழைய கட்டிடத்தை வாங்கிப் புதிதாகக் கட்டியுமுள்ளனர்.

பசுமடத்தில் பால் மாடுகள், கன்றுகள், காளை ஆகியவற்றைக் கட்டிவைக்கக் காற்றோட்டமான தாழ்வாரம் அமைக்கப்பட்டது; அத் தொழுவத்தின் அடித்தளத்தில் கற்கள் பரப்பப்பட்டன. மாடு தின்ன வைக்கோலைப் போட்டு வைக்கக் கல்லால் தடுப்பும் மாடு கட்ட இரும்பு வளையமும் அமைக்கப்பட்டன. பகல் நேரத்தில் மாடுகளைக் கட்ட வெட்டவெளி, பசுமடத்தின் பின்புறம் விடப்பட்டது. மாடுகள் தண்ணீர் குடிக்கத் தொட்டிகளும், தவிடு புண்ணாக்குகளை இருப்புவைத்துக் கொள்ள அறைகளும் இருந்தன. பால் கறக்கப் பல சட்டிகளும் அவற்றைக் கோயிலுக்குக் கொண்டுபோக மூடியுடன் கூடிய குடங்களும் மருந்து ஊற்ற மூங்கில்

கொட்டங்களும் பசுமடங்களில் இருந்தன. மாடுகளுக்குப் புடலை மணி, வெங்கல மணி, சங்கு, ஆகியன கம்பளிக் கயிற்றுடன் கட்டப்பட்டன.

## பணியாளர்

மாடுகளைப் பார்க்கத் தனியே ஆள்களும் பால் கறக்கக் கோனார்களும் இருந்தனர். மாடுகளின் எண்ணிக்கைக்குத் தக்கவாறு மெய்க்காட்டாள்கள் நியமிக்கப்பட்டனர். இவற்றைக் கண்காணிக்கவும் வரவு செலவைக் குறிக்கவும் கணக்கப் பிள்ளை நியமிக்கப்பட்டார். மாடுகள் ஈத்துக்கூடக் கூட வயது முதிர்தலைக் கருதிப் பழையனவற்றைக் கழித்து விட்டுப் புதிய பால் மாடுகள் வாங்கப்பெறும். காளைக் கன்றுகளும் விற்கப்பட்டன; கிடாரிக் கன்றுகள் மட்டும் வைத்து வளர்க்கப்பெற்றன.

## காளையும் காராம் பசுவும்

ஒவ்வொரு ஆண்டுக்கும் தேவையான வைக்கோலைப் பசுமடத்தில் வாங்கிப் போர் போட்டு வைத்திருப்பர் ; இதற்கென்று தனியிடம் ஒதுக்கப்பட்டிருந்தது. இவற்றுக் கெல்லாம் மேலாக, பசுமடத்திலுள்ள பசுமாடுகள் பயிராவதற்கு என்று தனியே ஒரு வளமான காளை மாடும் வைத்திருந்தனர். பசுமாடு, பால் வற்றியதும் உடனடியாகக் கருவுறுதற்கு என்று இந்த ஏற்பாடு செய்யப்பெற்றது. இதனால் புதிய புதிய மாடுகள் அடிக்கடி வாங்காமல், தொடர்ந்து பசுமடத்து மாடுகள் கன்று போடுதலும் பால் கொடுத்தலுமாக இருந்தன.

சில பசுமடங்களில் `காராம் பசு' என்னும் பசுவைத் தேடிப் பிடித்து வாங்கி வந்தனர்; இப்பசுவின் நாக்கும் மடியும் கருப்பாக இருக்கும். காராம் பசுவின் பால், சிவபெருமானுக்கு மிக உகந்தது. இத்தகைய பசுக்கள் கிடைப்பது அரிது.

பசுமடம் என்பது திருக்கோயிலுக்கு மடைப்பள்ளிபோல மிகமிக இன்றியமையாத நிறுவனமாகும். திருக்கோயிலில் விடிகாலை நிகழும் விசுவரூப தரிசனத்தில் பசு இடம்பெறுகின்றது. ஆனைந்து (பஞ்சகவ்வியம்) ஆகிய அபிஷேகத்துக்குரிய பொருள்கள் பசுமடத்திலிருந்தே பெறப்படுகின்றன. திருக்கோயில் கிரியையில் கோமயமும் கோசலமும் திருகோயிலை அலகிடுவதற்கும் கிரியைகளுக்கும் தேவை. திருநீறு தயாரிக்கச் சாணமும் திருநீறு தயாரிக்கும் பணியையும் பசுமடமே செய்து வந்தது. இதனை அறிந்தே சேக்கிழார்

> ``மேய வேணித் திருமுடிமேல் விரும்பி ஆடி அருளுதற்குத்
> தூய திருமஞ்சனம் ஐந்தும் அளிக்கும் உரிமைச் சுரபிகள்தாம்"
>
> (1230)

என்று போற்றிப் புகழுகின்றார்.

## தருமத்தின் நோக்கம்

சிவபிரானை வழிபடும் மக்கள் தங்கள் கருத்திற்கு ஏற்ப அபிஷேகப் பொருள்களைத் திருக்கோயிலுக்கு வழங்குவர். தானும் தன் மரபினரும் இசைவன்மை அடைய இறைவனுக்குத் தேனால் அபிஷேகம் செய்ய வேண்டும். அதுபோல் உடல் நலமும் ஆயுள் வளர்ச்சியும் வேண்டுகின்றவர்கள் சிவபெருமானுக்குப் பால் அபிஷேகம் செய்ய வேண்டும். தங்களுக்கு ஆண் மகன் பெற விரும்புவோர் தயிர் அபிஷேகமும் மோட்சத்தை நாடுவோர் நெய் அபிஷேகமும் செய்தல் வேண்டும்.

திருக்குற்றாலத் தலபுராணம் `பயமது சத்துரு நாசம் ததிக்குமகப் பெருகும்' (சிவபூசை விதித்த சருக்கம்: 44) என்று கூறுகிறது. நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் உடல் நலத்தையும் ஆயுள் வளர்ச்சியையும் கருத்தில் கொண்டே பசுமடங்களை நிறுவிப்பால் கொடுத்தனர். பசுமடங்களில் பாலன்றித் தயிரோ நெய்யோ கோயிலுக்குக் கொடுக்கப்படவில்லை.

## பாலின் தூய்மை

பால் அபிஷேகத்துக்கு மட்டுமின்றித் திருவனந்தலுக்கும் அருத்தசாமப் பூசையில் பள்ளியறை நைவேத்தியத்துக்கும் தனியே கொடுக்கப்பட்டன. பசுமடத்தில் பால், அபிஷேக நேரத்தை ஒட்டிக் கறந்து கொண்டு போய்க் கொடுக்கப் பெற்றது. எருமைப் பாலோ தண்ணீரோ கலக்கப்படவில்லை. பாலைக் கொண்டு செல்லுபவர் நீராடி நீறு பூசித் தூயராய் மூடியிட்ட குடத்தில் பாலைக் கொண்டு சென்றார்.

## காலமும் நிருவாகமும்

உள்ளூரில் பசுமடம் வைத்தவர்களுக்குப் 'பசுமடத்தார் வீடு' என்றே பட்டப் பெயரும் வழங்கியது. பசுமடம் நடைபெறத் தனியே மூலதனம் வைக்கப்பெற்றது; சிலர் நன்செய் நிலங்களை வாங்கி மூலதனமாக வைத்தனர். பெரும்பாலான பசுமடங்கள் கி.பி. 1860க்குப் பின்னரும் கி.பி. 1920 க்கு முன்னரும் தாம் ஏற்படுத்தப்பட்டன. பர்மா, செய்கோன் ஆகிய ஊர் வணிகம் மேலோங்கியிருந்த போது, நகரத்தார்களின் திருகோயில் தருமங்கள் தலைசிறந்து நின்றன. தனிப் பட்ட குடும்பங்களின் பொருளாதாரத் தாழ்வு, பொதுக் குடும்பங்களிடையே எழுந்த பிணக்குகள், போன்றவை இன்றைக்குப் பசுமடத்தை நடத்துவதில் தடையை ஏற்படுத்திவிட்டன. பசுமடம் என்பது ஒரு பால் பண்ணையை நிருவகிப்பது போன்றது. பொருள் மிக்கவர்கள் கூடப் பசுமடத்தை வைத்து நிருவகிக்க முடியாமல், பாலை விலைக்கு வாங்கிக் கோயிலுக்குக் கொடுக்கின்றனர்.

பொது நிதிகளால் அமைந்த பசுமடங்கள் கூட இன்று நடைபெறவில்லை. நகரத்தார்களில் பொதுப் பணங்களை வைத்திருப்போர், அந்தக் தருமங்களை நடத்தாமல், பொருளைச் சுய வளர்ச்சிக்குப் பயன்படுத்துகின்றனர். அற உள்ளங் கொண்ட நகரத்தார்கள் நிறுவிய தருமங்கள், என்றும் குன்றாமல் நடைபெறப் பார்வதி உடனாய பரமசிவனே அருள்புரிய வேண்டும்.1

---

*பசுமடங்களின் பட்டியல் முழுமையானதன்று. விவரம் அறிந்தவர்கள் நூலாசிரியருக்கு எழுதி உதவ வேண்டுகிறேன்.*

# 4 நகரத்தார்களின் பாடசாலைத் தருமம்

## கோயிலை ஒட்டிய தருமங்கள்

நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் திருக்கோயில் திருப்பணி செய்வதில் பேரீடுபாடு மிக்கவர்களாய்ப் பெரும் பொருளைச் செலவழித்தனர். அவர்களுடைய திருக்கோயில் பணி, திருக்கோயில்களைச் சார்ந்த பல்வேறு துறைகளிலும் பணி செய்யும் ஆர்வத்தை விளைத்தது. கோயிலை ஒட்டி வேத வித்தகர்கள், ஆகம அறிஞர்கள், தேவாரம் வல்லவர்கள், போன்ற அறிஞர்கள் நகரத்தார் ஆதரவால் வளர்ந்தனர். இதனால் கோயிலைச் சார்ந்து பல்வேறு பாடசாலைகள் ஏற்பட்டன. மனைவி மக்களையும் சொத்து சுகங்களையும் விடுத்துத் தொலை நாடுகளுக்குச் சென்ற நகரத்தார்கள் ஈட்டிய செல்வத்தைத் திருக்கோயில் பணியுடன் பாடசாலைகள் நிறுவிடவும் செலவிட்டனர்.

## பாடசாலைகளின் தோற்றம்

வேதாகம மரபு பிறழாது திருக்கோயில்களைக் கட்டிய நகரத்தார்கள், அவற்றில் வேதங்கள் முழங்க வேண்டும் என்றும் முறைப்படி பூசை நிகழ வேண்டும் என்றும் விரும்பினர். திருக்கோயில்கள் கட்டித் குடமுழுக்குத் தமிழகம் எங்கும் நடந்தபோது சிவாசாரியார்களும், பிராமணர்களும் இருந்தனர்; இவர்களோ குடும்ப வழியாகவே வேதாகம மந்திரங்களைக் கற்றிருந்தனர். அவர்கள் முழுமையாகவும் முறையாகவும் தெளிவாகவும் கற்று ஓதவல்லாராய் இருத்தல் வேண்டும் என்று சிவாசாரியார்களும் நகரத்தார்களும் கருதினர். இதன் விளைவாகவே பாடசாலைகள் தோன்றின.

திருக்கோயிலில் இறைவனை எழுந்தருளச் செய்துவிட்டால் மட்டும் அக் கோயில் தெய்வ நிலையமாகிவிடாது. அங்கு நித்தம் வேதாகம மரபு மாறாது பூசை வழிபாடு நிகழ்தல் வேண்டும். மூர்த்திகளும் சந்நிதிகளும் முறைப்படி அமைய வேண்டும். நித்திய நைமித்தகாமிய பூசைகளில் வேத மந்திரங்களைப் பிழையாது ஓதல் வேண்டும். இவற்றுக்கெல்லாம் முறையாகவும் ஆழமாகவும் படித்த சான்றோரே தேவை.

திருக்கோயில் வழிபாட்டில், பண்டு சமஸ்கிருத மொழியே இடம்பெற்றது. வேத மந்திரங்களைக் கற்று ஓதப் பயிற்சிக் களம் தேவைப்பட்டது. குருகுல முறையில் பயில்வதை விடப் பிரமச்சாரிகள் பலர் ஒருங்கு கூடி ஒன்றாக வேதம் ஓதும் பயிற்சி அவர்களுக்குப் புலமை வன்மை தரும். திருக்கோயிலுக்குச் செவ்வையான கட்டிடம் அமைவது போலத் திருக்கோயிலுக்கு வேதாகமம் வல்ல சிவாசாரியாரும் அத்தியயனப்பட்டரும் மிக மிக இன்றியமையாதவர்கள். திருக்கோயில் மூர்த்திகளுக்குப் பூசையும் வேத பாராயணமும் திருமுறை ஓதலும் அமைவது பொற்பூவுக்கு மணம் கூடியது போன்றதாகும். இவர்களின் சீரிய தொண்டால் திருக்கோயில்களின் தெய்வ ஒளி திசையெலாம் பரவி நிற்கின்றது.

## பாடசாலைகளில் வளர்ச்சி

முறையாகவும் தெளிவாகவும் வேதம் ஓதுகின்றவர்களையும் பூசை செய்பவர்களையும் திருமுறை ஓதுகின்றவர்களையும் திருக்கோயில்களில் பணி

அமர்த்த நகரத்தார்கள் திருக்கோயில்களை ஒட்டித் தேரோடும் தெருக்களில் பாடசாலைகளை நிறுவினர். இவ்வண்ணம் நகரத்தார்கள் முதற்கண் வேதபாடசாலைகளை அமைத்தனர். பின்னர் தமிழ் வேதங்களாய திருமுறைகளை ஓதும் தேவார பாடசாலைகள் தோன்றின: அதுபோல ஆகம பாடசாலைகளும் எழுந்தன.

## நகரவட்டகை – வேதபாடசாலை

நகரத்தார்கள் வாழுகின்ற அரிமளம், கடியாபட்டி, கீழச்சிவல்பட்டி, சோழபுரம், தேவகோட்டை, ராயவரம் ஆகிய ஐந்து ஊர்களில் வேதபாடசாலைகள் ஏற்பட்டு நடைபெற்றன. தேவகோட்டையில் உ.ராம.உ.மு. பாடசாலையும் பழ.செ. பங்காளிகள் நிறுவிய வேதபாராயண பாடசாலையும் என்று இரண்டு பாடசாலைகள் இருந்தன. செட்டிநாட்டில் பாடசாலை வைத்த குடும்பத்தவர்களுக்குப்'பாடசாலையார் வீடு' என்று பட்டப் பெயருண்டு; இன்றும் இப் பெயர் வழக்கத்திலுள்ளது.

## ஒவ்வொரு வேதத்துக்கும் தனித்தனிப் பாடசாலை

கண்ட தேவி, கோயிலூர் போன்ற செட்டி நாட்டைச் சார்ந்த ஊர்களிலும் பாடசாலைகள் ஏற்பட்டன. இத் திருக்கோயில்களின் சிறப்பே பாடசாலை ஏற்படக் காரணமாகும். கோயிலூர் செட்டி நாட்டுக் கல்வி மையமாய் வேத ஞானப் பண்ணையாகத் திகழ்ந்தது. இங்கு இரண்டு வேத பாட சாலைகளில் இருக்கு வேதமே பயிற்றிவிக்கப்பட்டது. எல்லா வேதங்களும் பயிற்றுவிக்கப்பட வேண்டும் என்ற நோக்கத்தில், வேத பாட சாலைகள் ஒவ்வொன்றும் வெவ்வேறு வேதங்களைச் சொல்லிக் கொடுக்கலாயின. அகலப்படிப்பு, ஏதேனும் ஒரு வேதத்தைப் பயிலுகின்ற ஆழப் படிப்பாயிற்று.

வேதாந்த ஞானம் செழித்த கோயிலூரிலும் திருக்களரிலும் வேத பாட சாலைகள் சிறப்பாக நடந்தன. கோயிலூரில் யசுர் வேத பாட சாலையைக் கோட்டையூர் மு.சி.வும் சாம வேத பாட சாலையை அரிமளம் அ.செ.சு.வும் நிறுவிச் செயல்படுத்தினர். திருக்களரில் மூன்று பாடசாலைகள்; இருக்கு வேத பாடசாலையைக் காரைக்குடி பழ. வெ. ராமவும் யசுர் வேத பாட சாலையைக் காரைக்குடி ஆத.பழ. பழநியப்ப செட்டியாரும் சாமவேத பாட சாலையை ஆத்தங்குடி சா.நா. நாச்சியப்ப செட்டியாரும் நிறுவினர். ஒருவர் ஒரு வேதத்துக்குப் பாடசாலை அமைக்க அடுத்தவர் இன்னொன்றுக்கு அமைத்தனர் ஆதல் வேண்டும். எல்லா வேதங்களின் பாராயணமும் இறைவன் முன்னர் இசைக்க வேண்டும் என்ற நோக்கத்தில் தான் மூன்று வேதங்களுக்குப் பாடசாலைகள் அமைந்தன.

மந்திரம், பிரமாணம் என்று வேதம் இருவகையாய் அமையும். மந்திரம் கடவுளையோ கடவுளுக்காகச் செய்யப்படும் வேள்விகளில் தொடர்புடைய சாதனங்களையோ துதித்து, மனிதனுடைய விருப்பங்களை வெளியிட ஏற்பட்டது. மந்திரமானது ரிக், யசுர், சாமம் என்று மூன்று மூன்று பிரிவுகளைக் கொண்டது. ரிக் வேதம், செய்யுள் நடையினது; யசுர் வேதம் வசனநடையினது; சாம வேதம் இசை ஒலிக்கு ஏற்பரிக்குக்களைப் பிரித்தும் சில ஸ்தோபங்களைச் (அசைகளைச்) சேர்த்தும் கானம் செய்ய ஏற்பட்டது. யசுர் மந்திரங்கள் வேள்விகளைச் செய்வதற்காகவே ஏற்பட்டது. சாம வேதம் வேள்விகளில் தேவதைகளைத் துதிக்கும் பாட்டுகளையுடையது. சாம வேதத்திற்கு அடிப்படையான சாகித்தியம் 'ரிக்' என்ற முதல் வேதம்; ரிக் வேதத்தில் இருக்கும் பாக்களையே பாட்டாகப் பாடுவது சாம

வேதம். எனவே ஒவ்வொரு வேதங்களையும் ஓதிடத் தனித்தனியே பாடசாலைகள், நகரத்தார்களால் நிறுவப்பட்டன.

## அறத்தை நிறுவிய குடும்பத்தினர்

வேத பாடசாலையைத் தனிப்பட்ட நகரத்தார் குடும்பங்களே உண்டாக்கி நடத்தி வந்திருக்கின்றன. தேவகோட்டை, காரைக்குடி, ஆத்தங்குடி, ஒக்கூர், கடியாபட்டி, உ. சிறுவயல், கோட்டையூர், கோனாபட்டு ஆகிய ஊர் நகரத்தார்களே வேத பாடசாலை அமைத்தனர். பட்டமங்கலம் அழ.மெ.சு.சி. குடும்பத்தினர் திருக்கோஷ்டியூரிலும் திருப்புத்தூரிலும் வேத பாடசாலைகளை ஏற்படுத்தினர். நகரத்தார்கள் அமைத்த பாடசாலைகள் நாற்பத்தேழு இங்குச் சுட்டப்பட்டிருக்கின்றன; நகரத்தார் சிலர் சேர்ந்தும் பொதுவிலும் அமைத்த பாடசாலைகளும் இவற்றிலுண்டு. (இப்பட்டியலில் விடு பட்டவற்றை ஆசிரியர்க்கு எழுதி உதவ வேண்டுகின்றேன்)

## தமிழுணர்வு

வேத பாராயணத்துக்கும் வேத கோஷ்டிகளுக்கும் திருக் கோயில்களில் மேலாண்மை வருதலைக் கண்ட நகரத்தார்கள், தமிழ் வேதமான திருமுறைகளுக்கும் கோயில்களில் முதன்மை கொடுக்க வேண்டும் என்று எண்ணினர். நகரத்தார்களின் தமிழ்ப் பற்றும் சைவவுணர்வும் தான் இதற்கு அடிப்படை. நகரத்தார்கள், திருக் கோயில் திருப்பணியில் ஈடுபடுவதற்கு அடிப்படையே, அத் திருக்கோயில்கள் பாடல் பெற்றமையே காரணமாகும். தேவாரப் பாக்களைப் பயின்ற நகரத்தார்கள் அவற்றைத் திருக் கோயில்களில் பண் முறை வழுவாமல் ஓதிட வேண்டும் என்று விரும்பினர். நித்தம் இறைவன் திரு முன்னும் பூசை வேளைகளிலும் தேவாரம் ஓதுவர். எனவே வேத பாடசாலைகளைப் போல நகரத்தார்கள் திருத் தலங்களில் தேவாரப் பாடசாலைகளையும் உருவாக்கினர்.

## தேவாரப் பாடசாலை இன்மையும் உண்மையும்

நகரத்தார்கள் வாழ்ந்த சில ஊர்களில் வேத பாட சாலைகள் உண்டாக்கப்பட்டது போல எந்தவூரிலும் தேவார பாடசாலை அமைக்கப் படவில்லை. பாடல் பெற்ற பல தலங்களில் வேத பாட சாலைகள் உண்டாக்கப்பட்டன; அவற்றின் எண்ணிக்கையை விடத் தேவார பாடசாலைகளின் எண்ணிக்கை மிகக் குறைவேயாகும். சிதம்பரம், திருவையாறு, திருவிடை மருதூர், திருப்புனவாயில், திருக்கானப்பேர், திருப்பெருந்துறை, திருப்பாதிரிப் புலியூர் ஆகிய பத்து ஊர்களில் தேவாரப் பாடசாலைகள் விளங்கின.

## தேவார பாடசாலை திருப்புகழ்ப் பாடசாலையாதல்

செட்டி நாட்டூர்களில் தேவாரப் பாடசாலை இல்லையென்றாலும், கோயில்களில் தேவாரம் ஓதத் தனியே ஓதுவார்கள் நியமிக்கப் பட்டிருந்தனர். இந்த அறப் பணியையும் தனிப்பட்ட நகரத்தார் குடும்பங்களே மேற்கொண்டன. முருகன் ஆறுபடை வீடான பழநியில், கண்டமாணிக்கம் சாத்தப்ப செட்டியார், சொக்கநாதபுரம் மெ.சு.உ. செட்டியார், ஆகியோர், தேவார பாடசாலை அமைக்காது திருப் புகழ்ப் பாடசாலை நிறுவினர். இஃது இடத்துக்குத் தக்கவாறும் இறைவனுக்குத் தக்கவாறும் மாற்றி அமைக்கப் பட்டிருக்கிறது.

தேவார, திருவாசக, திருப்புகழ்ப் பாடசாலைகளில் பன்னிரு திருமுறைகளும் சிற்றிலக்கியங்களும் பண் முறை நெறி பிறழாமல் பாடச் சொல்லிக் கொடுக்கப் பட்டன. இவற்றில் ஓதுவார் மரபினரே தலைமை பெற்றுப் பாடம் பயிற்றுவித்தனர். அம் மரபினரே அங்குப் பயின்றனர்.

### சிவாகமப் பாடசாலைகளின் வளர்ச்சி

வேத பாடசாலை, தேவாரபாட சாலை என்பன போலத் தனியே தோன்றிய இன்னொரு பாடசாலை, ஆகம பாடசாலையாகும். ஆகம பாட சாலை ஆகமங்களையும் வேத மந்திரங்களையும் கற்பிக்கும் களமாகத்திகழ்ந்தது. இங்குச் சிவாச்சாரியார்களின் மரபினரே இடம் பெற்றனர். திருநல்லூர்ப் பெருமணத்தில் சிப. குடும்பத்தினரும் திருமயிலாடு துறையில் தேவகோட்டை ராம. அரு.அரு.ராம. வும் திருக்கச்சி ஏகம்பம், குமர கோட்டம் ஆகியவற்றில் தேவகோட்டை ராம.மெ.லெ.வும் திருப்பாதிரிப் புலியூரில் கடியாபட்டி தீ.நா. முத்தையா செட்டியாரும் சிவாகம பாடசாலையை நிறுவிப் போயினர். தேவகோட்டை சிவாகமக் கழகம், குறிப்பிடத் தக்க பணியாற்றுவது போற்றத் தக்கது. இக்கழகம் சிவாகமங்களையும் வழிபாட்டு மரபு நூல்களையும் தமிழில் வெளியிட்டிருப்பது மகிழ்ச்சி தருவது. இன்று இக் கழகம் செயற்படாமல் ஒடுங்கிக் கிடப்பது வருத்தம் தருவதாகும்.

### பாடசாலைகளின் பொதுஅமைப்பு

திருக் கோயிலுக்கு வேண்டிய சிவாச்சாரியார், வேதப் பிராமணர், ஓதுவார், ஆகியோரை அணியமாக்கும் நிலையங்கள், கோயிலைக் கட்டிய நகரத்தார்களால் ஏற்படுத்தப்பட்டன. சிவாச்சாரியார்களும் பிராமணர்களும் வேதம் வல்லாராய் விளங்கிட அவர்களுக்கு உண்டி உறையுள் ஆகியன வழங்கி நகரத்தார்கள் பாடசாலை நிறுவினர். பாடசாலைகளில் சிறந்த வித்துவான்கள் ஒருவரோ இருவரோ மாணாக்கர் எண்ணிக்கைக்குத் தக்கவாறு ஆசிரியராகப் பணியாற்றினர். ஒவ்வொரு பாடசாலைக்கும் பாடசாலைக்கு ஏற்பத்தக்கார் ஆசிரியராய்த் திகழ்ந்தனர்.

### உணவும் வாழ்வும்

மாணாக்கர், ஆசிரியர் எண்ணிக்கைக்கு ஏற்பப் பரிசாரகர் நியமிக்கப் பட்டார்; மூன்று நான்கு மாணாக்கரே இருப்பின் ஆசிரியர் தன் குடும்பத்துடன் பாடசாலையில் தங்கி மாணாக்கர்க்கு உணவும் கல்வியும் அளித்தார். ஆசாரமான முறையில் மாணாக்கர்களுக்கு உணவாக்கப் பெற்று வழங்கப்பெற்றது.

வேத பாடசாலை, தேவார பாடசாலை, ஆகம பாடசாலை ஆகியவற்றில் ஆசிரியர்களாக இருந்தவர்கள், தங்கள் அநுபவக் கல்வி மூலம் கற்ற முறையிலேயே பாடத்திட்டங்களை வகுத்துக்கொண்டு பாடம் பயிற்றினர். எனினும் அனைத்துப் பாடசாலைகளிலும் ஓர் ஒருமைப்பாடு காணப்பட்டது. திருக்கோயில் மரபு, லௌகீகமரபு, வேதமரபு ஆகியவற்றைப் பாடசாலைகளில் பயின்றோர் அறிந்திருந்தனர். இதனால் இம்மைக்கு வேண்டியவற்றையும் பெறும் வாய்ப்பும் அவர்களுக்குக் கிட்டியிருந்தது. திருக்கோயில் பணியில்லை என்றாலும் இவர்கள் லௌகீகக்காரியங்களில் ஈடுபட்டுத் தங்கள் குடும்பத் தேவையை ஓரளவுக்கு நிறைவேற்றிக் கொண்டனர்.

### உறைவிட உயர்வு

தனிப்பட்ட நகரத்தார்கள், வேத பாடசாலையை நடத்தத் தொடங்கிய போது,

பாடசாலைக்கு என்று நேர்த்தியான கட்டிடம் ஒன்று கட்டினர். இவை கோயிலைச் சார்ந்த வீதிகளை ஒட்டி அமைந்தன. நல்ல தண்ணீர் வசதியுடன் செட்டி நாட்டுக் கட்டிட அமைப்பில் இவை இருந்தமை குறிப்பிடத் தக்கது; மழையாலும் வெயிலாலும் புயலாலும் எவ்வகையான இடையூறும் ஏற்படாமல் காற்றோட்டமாகக் கட்டிடம் கலையழகு பொலியக் கட்டப்பட்டிருந்தது. அங்கு வழிபடுமிடமும் தெய்வத் திருமேனிகளும் இருந்தன.

## பொருள் வசதி

வேத பாடசாலை, தேவாரப்பாடசாலை போன்ற பாடசாலைகளை நடத்த, நகரத்தார்கள் வைப்பு நிதியாகப் பொருளை வங்கியில் வைப்பதைக் காட்டிலும் நில புலன்களாக வாங்கி வைத்ததே மிகுதி. பாடசாலைகள் இருந்த இடத்துக்கு அருகிலுள்ள ஊரில் அவற்றுக்குச் சொந்தமான நிலங்கள் இருந்தன. இதன் மூலம் பாடசாலைக்கு வேண்டிய நெல், விறகு, காய்கள், பால் போன்ற பொருள்கள் கிடைத்தன. தேவைக்கு, மிகுதியான நெல், விலைக்குக் கொடுக்கப்பட்டு வேண்டிய செலவுகளுக்கு ஆயிற்று. வேதபாட சாலை ஆசிரியர்களுக்கு ஆண்டுக்கு இவ்வளவு நெல் என்றும் தொகை இவ்வளவு என்றும் வழங்கப்பட்டது. ஆசிரியர் பலரானால், ஒருவர் பாடசாலையில் தங்கப் பிறர் குடும்பத்துடன் வாழ்வர்; அவர்க்கு இங்ஙனம் ஊதியம் கொடுக்கப்பட்டது.

## மாணாக்கர் நலனும் பெருமையும்

மாணாக்கர்க்கு எண்ணெய் தேய்த்து முழுக எண்ணெய், அரப்பு முதலியன பாடசாலையில் தரப்பட்டன. மாணாக்கரின் உடல் நலத்திலும் கல்வி நலத்திலும் பாடசாலைகள் தனி அக்கறை செலுத்தின. வேதபாட சாலைகளில் பயின்றோர் வேதம் வல்லாராய்ச் சாத்திரம் அறிந்தவராய்த் திகழ்ந்து வேத நெறி தழைத்தோங்க மிகு சைவத்துறை விளங்க வாழ்ந்தனர். திருவானைக்காவில் காரைக்குடி அ.மு.க. குடும்பத்தினர் நிறுவி நடத்தி வரும் வேத பாடசாலையில் பயின்றவரே ஸ்ரீ ஜயந்திர சரஸ்வதி ஸ்ரீ சங்கராசார்ய சுவாமிகள் அவர்கள் என்பது நகரத்தார்களின் வேத பாடசாலைத் தருமத்துக்குப் பெருமை தருவதாகும்.

நகரத்தார் மக்கள் எல்லாரும் நலம் பெற்று வாழ்ந்த நாளில், அவர்கள் தொலை நாடுகளுக்குக் கொண்டு விற்கச் சென்ற போது தமிழகத்தில் பல்வேறு பாடசாலைகள் ஏற்படுத்தப் பட்டன. அக்காலக் கல்வி வளர்ச்சியில் இது நகரத்தார்களின் சிறந்த பங்கு. இந்த அறப்பணிகள் தொடர்ந்து நடை பெற நகரத்தார்கள் தக்க ஏற்பாடு செய்திருந்தனர். ஆனால் இன்று நன்முறையில் மிகச் சில வேத பாடசாலைகளே நடைபெறுகின்றன.

## பாடசாலைகளின் தேய்வு

சிவாச்சாரியார்களும் பிராமணர்களும் வேதக் கல்வியில் ஆர்வமற்றவராய்ப் பிற இனத்தாரைப் போலப் பொருளீட்டும் கல்வியில் கருத்துச் செலுத்தலாயினர். பல்வேறு வசதிகளும் வாழ்க்கைத் தேவைகளும் பெருகிய இக்காலத்தில், இந்தப் போக்குத் தவிர்க்க முடியாதது. இதனால் வேதம் பயில வருவார் எண்ணிக்கை பாடசாலைகளில் குறைந்து விட்டது. வேத பாடசாலை நடாத்தும் நகரத்தார், தான் நடத்த விரும்பியும் மாணாக்கரின்மையால் வேதபாடசாலையைத் தொடர்ந்து நடத்த முடியவில்லை. தேவார பாடசாலையோ, வேத பாடசாலைகளுக்கு முன்னரே

மூடுவிழாக் கொண்டாடிவிட்டன. இங்குப்பயிலும் ஓதுவார் மரபின் மக்கள் தொகை மிகக்குறைவு. அவர்களுக்குத் தேவாரம் பாடுதலிலும் பிற பணிகளை மேற்கொள்வதனால் பொருள் வருவாய் மிகுதி. இருபதாம் நூற்றாண்டுக் கல்வி வளர்ச்சியும் வாழ்க்கைச் சூழ்நிலையும் [illegible]லைகளின் செயற்பாட்டைத் தடுத்துவிட்டன.



## வாழ்க்கைச் சிக்கலும் மறைவும்

பாடசாலைகள் நிறுவிய குடும்பத்தினரின் பொருள் முட்டுப்பாடும், பாடசாலைகளின் மறைவுக்கும் அழிவுக்கும் காரணமாகும். தருமத்தை நிறுவியோர்க்குத் தொடர்ந்து தொழிலில் இழப்பு ஏற்படுதல், தொலைவில் நடத்திய கடைகள் வீழ்ச்சியடைதல், போன்றவற்றால் வருமானம் வருவதில்லை. அந்தக் குடும்பத்துப் பெண் மக்களின் திருமணம், மருத்துவச் செலவு, நித்தியப் படிக்குடும்பச் செலவு போன்ற தவிர்க்க முடியாத செலவினங்கள் ஏற்பட்ட போது, பாடசாலைகள் நிறுத்தப்பட்டன; அங்கு வந்த நெல் வருவாய் தனது செலவுகளுக்குப் பயன் பட்டது. நடைபெறாமல் இருந்த பாடசாலைக் கட்டிடங்கள், அப்படியே விற்றுக்காசு ஆக்கப்பட்டன; சில இடங்களில் மேல் கோப்பு மட்டும் பிரித்து விற்கப்பட்டன. இவையெல்லாம் போக, பெருஞ் செல்வக் குடும்பத்தினர் நிறுவிய பாடசாலைகள் சிலவேனும் இன்றுவரை நன்கு நடை பெற்று வருகின்றன.

## மடங்களும் தேவஸ்தானமும்

மன்னர்கள் நடத்திய பாடசாலைப் பணியை நகரத்தார்கள் நடத்துவதற்கு முன்னரே மடங்களும் திருக்கோயில் தேவஸ்தானங்களும் தொன்றுதொட்டு நடத்தி வருகின்றன. அவற்றுள் நகரத்தார்களின் பிரிவுக் கோயிலான பிள்ளையார் பட்டிக் கோயில் தேவஸ்தானம் ஒன்று; பிற கோயிலார் நடத்தவில்லை. காஞ்சி ஸ்ரீ சங்கரமடத்தின் சார்பில், இளையாத்தக்குடியில் பாடசாலை ஒன்றும் நடைபெற்று வருகிறது. இவை நன்முறையில் நடைபெறுகின்றன.

## பெருமைக்குரிய சிவாகமச் செல்வர்

பிள்ளையார் பட்டியில் சிவாகமச் செல்வர் டாக்டர் பிச்சைக் குருக்கள் அவர்கள், சிவநெறிக்கழகம் என்ற பெயரில் முந்நூற்றுக்கு மேற்பட்ட மாணாக்கர்களுக்குக் கல்லூரியைப் போலப் பாடசாலை அமைத்து வேதம், ஆகமம் ஆகியவற்றை அறிவுறுத்தி வருகிறார்கள். இவற்றுடன் தேவாரப் பயிற்சியும் சோதிடப் பயிற்சியும் (திருவிழாவுக்கு நாள் பார்த்தல், நேரம் பார்த்தல் போன்றவற்றுக்காக) அளிக்கப் பெறுகிறது. இப்பள்ளியில் பல்வேறு இன மாணாக்கர்களும் கலந்து பயில்வது குறிப்பிடத்தக்கது. பிள்ளையார் பட்டிக் கற்பக விநாயகரைப் போல இந்தச் சிவாகம பாடசாலையும் சிவாகமச் செல்வர் பிச்சைக் குருக்களும் செட்டிநாட்டுக்கு மிகப் பெருமை சேர்க்கின்றனர். தொடர்ந்து நகரத்தார்களின் பாடசாலைப் பணி வளர்வதாக.

செட்டிநாட்டூர்கள்

| ஊர் | பாடசாலை | நிறுவியோர் |
|---|---|---|
| 1. அரிமளம் | வேதபாடசாலை | - |
| 2. கடியாபட்டி | பாடசாலை | - |
| 3. கீழச்சிவல்பட்டி | வேதபாடசாலை | தனிப்பட்ட குடும்பத்தார் |
| 4. சோழபுரம் | - | கூ.அ.கு.க. |
| 5. தேவகோட்டை | பாடசாலை | உ.ராம.மு. |
| | வேதபாராயணபாடசாலை | பழ.செ.பங்காளிகள் |
| 6. ராயவரம் | வேதபாடசாலை | சா.த.க.அ. அழகப்ப செட்டியார். |

செட்டி நாட்டைச் சுற்றி அமைந்த ஊர்கள்

| ஊர் | பாடசாலை | நிறுவியோர் |
|---|---|---|
| 1. கண்டதேவி | வேதபாடசாலை | செ.ராம.மெ.சித. |
| 2. குன்றக்குடி | " | கண்டனூர் மு.நா.சி.நா. |
| 3. கோயிலூர் | யசுர்வேத பாடசாலை | கோட்டையூர் மு.சி. |
| | சாமவேத பாடசாலை | அரிமளம் அ.செ.சு. |

பாடல் பெற்ற தலங்கள்

| ஊர் | பாடசாலை | நிறுவியோர் |
|---|---|---|
| சிதம்பரம் | வேதபாடசாலை | காரைக்குடி மெ.செ.மெ. பொது |
| | இன்னொரு பாட சாலை | காரைக்குடி சு.ராம.சு.அ.சு.நா. |
| புலீச்சரம் | (இளமையாக்கினார் கோயில்) | |
| - | | வேத பாடசாலை நகரத்தார் |
| 2. சீர்காழி | வேதபாடசாலை | நகரத்தார் |
| 3. திருப்புள்ளிருக்கு வேளூர் | " | |
| 4. திருவையாறு | " | கடியாபட்டி பி.கு.நா.வகை |
| 5. திரு.அன்பிலாந்துறை | " | உ.சிறுவயல் ராம.ப.செ. கோனாபட்டு ராம.சு.லெ.சுப்பிரமணியன் செட்டியார். |
| 6. திருவானைக்கா | " | (1) காரைக்குடி அ.மு.க. |
| | " | (2) கண்டனூர் வயி.அ. |
| 7. திருப்பரங்குன்றம் | பாடசாலை | பள்ளத்தூர் வீ.முரு.குடும்பத்தார் |
| 8. திருவிடை மருதூர் | 1.வேதபாட சாலை | தேவகோட்டை |

| | | |
|---|---|---|
| | | ராம.மெ.வகையினர் |
| | 2. பாடசாலை | மெ.வகை |
| 9. திருமயிலாடுதுறை | வேதபாடசாலை | நகரத்தாருட் சிலர் |
| 10. திருக்களர் | இருக்குவேத பாடசாலை | காரைக்குடி பழ.வெ.ராம. |
| | யசுர்வேத பாடசாலை | காரைக்குடி<br>ஆத.பழ.பழநியப்ப செட்டியார். |
| திருக்களர் | சாமவேத பாடசாலை | ஆத்தங்குடி சா.நா.<br>நாச்சியப்பசெட்டியார். |
| 11. மதுரை | வேதபாடசாலை | கானாடுகாத்தான் க.வெ. |
| 11. மதுரை-இம்மையே<br>தருவார்கோயில் | " | ஒக்கூர்<br>வீர.ராம.அ.ராம.<br>இராமநாதன் செட்டியார். |
| 12. திருப்புத்தூர் | வேதபாடசாலை | பட்டமங்கலம் அழ.மெ.சு.சி |
| 13. திருவாடானை | " | கும.கரு, கும.லெ.கும.சு.<br>ராம. |
| 14. திருக்கானப்பேர் | வேதாகமபாட சாலை | 1. கொ.அழகாபுரி<br>2. தெ.ராம.மெ.சோம. |
| | " | 2.சோழபுரம்<br>சுப.க.க.சித.ராம.சொ. |
| | " | 3. அழகாபுரி உ.நா.ராம.<br>க.மெ.கரு.கண. |
| 15. திருப்பூவணம் | வேதபாட சாலை | பூங்குடி<br>கூ.கண.கண்ணப்ப செட்டியார். |
| 16. திருச்செந்தூர் | வேதசாத்திரப் பாடசாலை | பூலாங்குறிச்சி ராம.ப.வ.<br>பொதுக்குடும்பம் |
| 17. திருக்கோட்டியூர் | பாடசாலை | பட்டமங்கலம் அழ.மெ.அ. |
| | சாத்திரபாட சாலை | பூங்குடி கூ.கரு.நா.சித. |
| 18. திருக்கருவூர் | வேதபாடசாலை | கானாடுகாத்தான்<br>சா.ராம.மு. |
| 19. திருப்பாதிரிப்புலியூர் | " | கடியாபட்டி பி.கு.பி.சு. |
| 20. திருவண்ணாமலை | வேதசாத்திர பாடசாலை | காரைக்குடி.முத்து.அரு.<br>உற்சவகால<br>வேதபாராயணம்<br>காரைக்குடி சா.நா. |
| 21. திருக்கச்சியேகம்பம் | வேதபாடசாலை | கண்டனூர் வயி.ராம. |
| 22. குமரகோட்டம் | " | கண்டனூர்<br>வயி.ராம. |
| 23. திருவாலங்காடு | " | கொத்தமங்கலம்<br>ராம.அ.பொது |

| | | |
|---|---|---|
| 24. திருக்காளத்தி | " | தேவகோட்டை உ.மு.பொது<br>காரைக்குடி மு.ராம.பொது. |

ஆகம பாடசாலை

| ஊர் | பாடசாலை | நிறுவியோர் |
|---|---|---|
| 1. திருநல்லூர்ப் பெருமணம் | ஆகமபாடசாலை | தேவகோட்டை ராம.அரு.அரு.ராம. |
| 2. திருமயிலாடுதுறை | சிவாகமபாடசாலை | தேவகோட்டை ராம.அரு.அரு.ராம. |
| 3. திருப்பாதிரிப்புலியூர் | ஆகமபாடசாலை | கடியாபட்டி தீ.நா.முத்தையா செட்டியார் |
| 4. திருக்கச்சியேகம்பம் | " | தேவகோட்டை ராம.மெ.லெ. |
| 5. குமரகோட்டம் | " | " |

தேவார பாடசாலை

| ஊர் | பாடசாலை | நிறுவியோர் |
|---|---|---|
| 1. சிதம்பரம் | தேவாரபாடசாலை | கானாடுகாத்தான் வெ.சா.பொது. |
| 2. திருவையாறு | " | தேவகோட்டை யாழ்ப்பாணம் இராமன் செட்டியார் மனைவி |
| 3. திருவிடைமருதூர் | " | கண.க.லெ. |
| 4. திருக்களர் | " | காரைக்குடி முத்து அரு.க.அருணாசலம் செட்டியார் பாகனேரி பெரி.அழ.மு.முத்துக் கருப்பன் செட்டியார் |
| 5. திருமறைக்காடு | தேவாரபாடசாலை | ஒக்கூர் சி.கரு.சித.சிந்தாமணி செட்டியார். |
| 6. மதுரை | " | ஒக்கூர் சி.கரு.சி.லெ. |
| 7. திருப்புனவாயில் | " | தேவகோட்டை அழ.சுப.பழ |
| 8. திருக்கானப்பேர் (காளையார் கோயில்) | " | கானாடுகாத்தான் க.வெ. |
| 9. பழநி | திருப்புகழ்ப்பாடசாலை | கண்டமாணிக்கம் |

| | | |
|---|---|---|
| 10. திருப்பெருந்துறை<br>11. திருப்பாதிரிப்புலியூர் | தேவாரபாட சாலை<br>" | சாத்தப்பசெட்டியார்<br>சொக்கநாதபுரம்<br>மெ.சு.உ.சுப்பிரமணியன்<br>செட்டியார்<br>அரிமளம் அ.அரு.<br>கடியாபட்டி தீ.சொ. |

# 5. நகரத்தார்களின் சாலை அறப்பணி

நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் திருக்கோயில் திருப்பணி செய்து பெரும்புகழ் பெற்றவர்கள். கோயில் பணி, சமயப்பணிகளில் ஆர்வங்காட்டிய நகரத்தார்கள், மக்கள் நலவாழ்வுக்குரிய பணிகள் பலவற்றையும் செய்தனர். அவர்கள் கல்வி நிலையங்கள் (பல்கலைக் கழகம், கல்லூரி, மேல்நிலைப் பள்ளி, உயர் நிலைப்பள்ளி, நடுநிலைப் பள்ளி, துவக்கப்பள்ளி) அமைத்தும் மருத்துவ நிலையங்கள் நிறுவியும் அறம் செய்துள்ளனர். இவை நிறுவியவர்களின் குடும்பத்தினரால், இடைவிடாது தொடர்ந்து இன்றும் நடத்தப் பெற்று வருகின்றன. அவர்கள் அந்த இடங்களில் தக்க கல்வெட்டுகளையும், நிறுவியுள்ளனர். மேலும் இன்றுவரை அவற்றுடன் தொடர்பு கொண்டுள்ளனர். இவற்றைப் போல நகரத்தார்கள், பல்வேறு ஊர்களை இணைக்கும் கற்சாலையையும் போட்டிருக்கின்றனர். இந்த அறப்பணியை நகரத்தார்கள் தனி ஒருவராகவோ ஒரு குடும்பத்தினராகவோ செய்துள்ளனர்.

கி.பி.1953இல் வித்துவான் வயிநாகரம் அ. இராமநாதன் செட்டியார் 'நாட்டுக் கோட்டை நகரத்தார் வரலாறு' எழுதினார். அவர் அந்நூலில் நகரத்தார்களின் பல்வேறு அறங்களை முயன்று திரட்டி எழுதியிருக்கிறார். அப் பெரியார், நகரத்தார்கள் எட்டு இடங்களில் சாலை அமைத்துப் போக்குவரவுக்கு உதவியமையையும் அதற்குச் செலவான தொகையையும் குறித்திருக்கிறார். அவர்கள் குறிக்காது விடுபட்டுப் போன சாலை அறங்களும் சில உள்ளன.

### சுற்றுப்புறமும் சாலை வசதியும்

நகரத்தார்களின் திருக்கோயில் திருப்பணியை உலகம் அறிந்து போற்றுகின்றது; ஆனால் அவர்கள் சாலை அமைத்த அறப்பணி உலகம் அறியாதது. இன்று அரசு பொதுப் பணித்துறை, நெடுஞ்சாலைத் துறை என்று பல்வேறு பிரிவுகளை நிறுவி ஓர் ஊருக்கும் மற்றோர் ஊருக்குமிடையே சாலை அமைத்துத் தொடர்ந்து காத்து வருகிறது. ஆனால், தங்கள் சுற்றுப்புறங்களில் உள்ள ஊருக்கு நல்ல கற். சாலை அமைத்தனர் நகரத்தார்கள்.

### மணத்தொடர்பு

ஒரு குடும்பத்தினர் அயலூரில் தங்கள் பெண் மக்களைக் கட்டிக் கொடுத்தும் பல பெண்களை அங்கிருந்து தங்கள் மகன்களுக்குத் திருமணம் செய்து கொண்டுமிருந்தால், அந்த இரண்டு ஊர்களுக்குமிடையே அக்குடும்பத்தினர் தங்கள் செலவில் சாலை போட்டனர். உறவினர் வீடுகளுக்கு அடிக்கடி போய் வருவதற்காக இந்தச் சாலைகள் போடப்பட்டன. கீழச்சிவல்பட்டியிலிருந்து குருவிக்கொண்டான்பட்டி வரையுள்ள சாலையைக் க.தெ. குடும்பத்தினர் தங்கள் பொதுச் செலவில் அமைத்தனர். வண்டிப்பாதையை மண் பாதையாக்கி இவர்கள் கற்சாலையாக்கினர். உறவு காரணமாகக் கற்சாலை அறப்பணியில் நகரத்தார் ஈடுபட்டமைக்கு இது நல்ல சான்று.

### குல தெய்வத் தொடர்பு

குல தெய்வக்கோயிலுக்கு எளிதாகவும் விரைவாகவும் நகரத்தார்கள் போய் வழிபாடு செய்ய நகரத்தார்கள் சாலை அமைத்தனர். திருப்புத்தூர் தேவகோட்டைப்

பெரிய சாலையிலிருந்து இலங்குடி அய்யனார் கோயிலுக்கு ரூபாய் பத்தாயிரம் செலவில் கற்சாலை போட்டனர். கீழச்சிவல்பட்டியிலிருந்து குன்றக்குடி வரை, கீழச்சிவல்பட்டி சூரைக்குடி கோயிலார் கற்சாலை அமைத்தனர். அச் சாலையின் தொடக்கத்தில் கீழச்சிவல்பட்டியிலும், அச்சாலையின் முடிவில் குன்றக்குடியிலும் இரண்டு வளைவுகள் கட்டப்பட்டன. கீழச்சிவல்பட்டி-விறாமதியிலுள்ள அழகிய வளைவு (முருகப்பா ஆர்ச்) இவ்வாறு கட்டப்பட்டது. குன்றக்குடியிலுள்ள வளைவு புயலில் விழுந்து விட்டது.

## நன்றி மறவாமை

மகிபாலன்பட்டியிலிருந்து கண்டவிராயன்பட்டி வரை தேவகோட்டை அ.கண.வீரப்ப செட்டியாரால் சாலை அமைக்கப்பட்டது. வீரப்ப செட்டியார், மகிபாலன் பட்டியில் பிறந்து தேவகோட்டைக்கு வளரச் சென்றவர்கள். அன்னார் பிறந்த மண்ணை மறவாமல் சிறந்த சாலையை இருபதினாயிரம் ரூபாய் செலவில் அமைத்துக் கொடுத்திருக்கிறார்கள். பிறந்த இடத்துத் தொடர்பு, சாலை அறப்பணியில் ஈடு பாட்டை ஏற்படுத்தி மக்கள் நலம்பெறச் செய்யப்பட்டிருக்கிறது. தன்னலம் கருதாப் பண்பு போற்றப்பட்டது.

இவ்வாறு பல்வேறு காரணங்களால், நகரத்தார்கள் அமைத்த சாலைகள் காலந்தோறும் புதுப்பிக்கப் பெற்றுவிட்டன. முதன் முதல், இச் சாலைகளைப் போட்டவர்கள் யார் என்பதே இன்று மக்களுக்குத் தெரியவில்லை; மறந்தும் போய்விட் டது. சிலர், சாலையின் தொடக்கத்தில் தங்கள் விலாசத்தை வெட்டிக் கல் நாட் டினர். திருப்புத்தூர்-கண்டவிராயன்பட்டி விலக்கிலுள்ள கல்லில் 1922-இல் தெ.சி.நா.என்று குறிப்புள்ளது. இச்சாலை தெ.சி.நா.சொக்கலிங்கம் செட்டியாரின் அறப் பணியாம். இங்கனம் குறிப்பது எல்லா இடங்களிலும் இல்லை. இது போன்ற குறிப்பு காலங் காலமாக அறஞ்செய்தவரின் பெருமையைச் சுட்டிக்காட்டும்.

## சாலையும் பாலமும்

நகரத்தார்கள் சாலை அமைக்கும் போது, பாலங்கட்ட வேண்டிய தேவை ஏற்பட்டால் பாலங்களும் கட்டிச் சாலை அமைத்தனர். இராமச்சந்திரபுரத்துக்கும் இராயவரத்துக்கும் நடுவே உள்ள உமையாள் புரம் சாலை, இராமச்சந்திரபுரம் தீ.நா. முத்தையா செட்டியாரால் போடப்பட்டது. அச்சாலையில் வரும் பெரிய பாலமும் அவர்கள் கட்டியது.

## பேரூர்த் தொடர்பு

தங்கள் ஊர் அருகிலிருக்கும் பெரிய ஊருடன் தொடர்பு கொள்ள வேண்டும், என்று கருதி நகரத்தார்களால் அமைக்கப்பட்ட சாலைகளுமுண்டு. சிறுகூடல்பட்டி, கவியரசு கண்ணதாசன் பிறந்த ஊர். இவ்வூர் திருப்புத்தூர் -- புதுக்கோட்டைச் சாலையிலிருந்து கிழக்கே இருக்கின்றது. இச்சாலையைச் சிறு கூடல்பட்டி கரு. சி. பழ. பழனியப்ப செட்டியார் அமைத்தார். பட்டமங்கலம் வீர.அ. அடைக்கப்ப செட்டியார், பட்டமங்கலத்திலிருந்து கண்டரமாணிக்கும், திருகோட்டியூர் வரை சாலை அமைத்துள்ளார். இதனை இராமநாதபுரம் முத்து விஜயரகுநாத சேதுபதி 29.10.22. இல் திறந்து வைத்தார்கள். சண்முகநாதபுரம் நகரத்தார்கள் இங்கிருந்து மேற்கே அமராவதி புதூர் வரையிலும் கிழக்கே கண்டதேவிச்சாலை வரையிலும் ஐந்து கல் அளவு சாலை போட்டனர். இச்சாலை 10.4.1922 திறக்கப்பெற்றது.

## பக்கத்தூர்த் தொடர்பு

இவ்வாறன்றித் தங்கள் ஊருக்கும் பக்கத்தூருக்கும் தொடர்பிருக்க வேண்டும் என்று கருதியும் சாலைகள் போடப்பட்டன. பூங்குடி கூராண்டான் செட்டியார் வகையினரால் ஒக்கூருக்கும் பூங்குடிக்கும் மூன்று கல் தொலைவு சாலை போடப்பட்டது. வ.பழ. சா. குடும்பத்தார் வேந்தன் பட்டியிருந்து மேலைச் சிவபுரி வழியாகப் பொன்னமராவதி வரை மூன்று கல் அளவு கற்சாலை அமைத்திருக்கின்றனர். வேகுப்பட்டி மே. கு. ராம. தங்களூரிலிருந்து கொப்பனாபட்டி முடியக் கற்சாலை போட்டிருக்கின்றார்கள். தாழம்பட்டிக் குடியிருப்பிலிருந்து பேரையூர் வரை நற்சாந்துபட்டி பெ. இராம. இராமன் செட்டியார் கற்சாலை நிறுவியுள்ளார்கள்.

## பழைமைப்பணி

கண்டவிராயன் பட்டிக்கும் தெக்கூருக்கும் இடையே உள்ளே சாலையைக் கருமுத்து குடும்பத்தார் கி.பி. 1898-இல் அமைத்தனர். சாலை அமைக்கும் அறத்தில் இதுவே காலத்தால் முற்பட்டதாகும்.

இவையன்றி இன்னும் பல்வேறு ஊர்களுக்கு நகரத்தார்கள் சாலை அமைத்திருக்கிறார்கள். இவர்கள் தாங்கள் அமைத்த சாலைகளைத் தொடர்ந்து பேணிக்காத்திட வைப்பு நிதி ஒதுக்கி வைத்தவர்களுமுண்டு. ஆனால் இன்று சாலைகளும் பல்வேறு மாற்றங்கள் அடைந்துவிட்டன; சாலை நிறுவிய அறவோர்களும் மறக்கப்பட்டு விட்டனர். அறம் செய்த குடும்பத்தினருக்கே, 'இந்தச் சாலை நம் குடும்பத்தினரால் முதற்கண் போடப்பட்டது' என்ற உண்மை தெரியவில்லை.

## பெயர் சுட்டா நாகரிகம்

திருக் கோயிற்பணி, குருபூசை மடம், வேதபாடசாலை, தேவார பாடசாலை போன்ற அறங்கள் செய்யப் பெற்றமையையும் செய்தவர்களையும் அறிய வாய்ப்புள்ளது. இந்த அறங்கள் இன்று வருமானம் தரக் கூடியவையாக விளங்குகின்றன. சாலை ஓரத்தில், சாலை அறம் செய்தோர் பெயர் பொறித்துக்கல் நட்டிருப்பின் உண்மை மறையாது. கற்சாலை போட்டு அறம் செய்தவர்களும் அவர்கள் குடும்பத்தினரும் சாலைகளில் தங்கள் பெயரை எழுதி வைத்து வெளிப்படுத்தவில்லை. அக்காலத்தில் சாலை அறம், தெய்வத் திருப்பணி போலப் புனிதமானதாகக் கருதப்படவில்லை. சமயம், கல்வி, மருத்துவம், தண்ணீர்ப்பந்தல் போன்ற அறங்களைச் செய்வதே பேரறமாகக் கருதப் பெற்றது. அக்காலத்திய நகரத்தார்கள் தங்கள் பெயரைத் தெருவில் எழுதி வைத்திருப்பது பண்பாட்டுக் குறைவு என்றும் இழிசொல்லுக்கு இடனாகும் என்றும் மாமன் மைத்துனன் கேலிக்கு ஆளாக வேண்டும் என்று கருதினர். எனவே தான் சாலை அறம் செய்த சான்றோர்கள் தங்கள் பெயரைச் சாலைகளில் பொறித்து வைத்திலர்.

## சுமை தாங்கி

சாலை நிறுவுவதோடு அமையாது, சாலையில் போய் வருவோர்க்கும் உதவும் அறப் பணிகளிலும் நகரத்தார்கள் ஈடுபட்டனர். அத்தகைய அறச் செயல்களில் ஒன்று 'சுமைதாங்கிக் கல் நிறுவுதல்'. முப்பது ஆண்டுகளுக்கு முன் வரை இப்பணி, மிகத் தேவையான பணியாகக் கருதப் பெற்றது. நதரத்தார்களன்றிப் பிற

சாதியினரும் சாலைகளில் ஆங்காங்கே தலைச் சுமையை இறக்கி வைத்து ஓய்வெடுத்த பின் மீண்டும் தூக்கி வைத்துக் கொண்டு வருவதற்குத் தோதாகச் சுமை தாங்கிக் கற்களை நட்டிருந்தனர். யார் உதவியும் இன்றித் தானே இறக்கித் தானே ஏற்றிக் கொள்ளச் சுமை தாங்கிக் கற்கள் இன்றியமையாதவை.

சுமை தாங்கிக் கற்கள் ஒரே அளவான மூன்று கற்களால் அமைந்தவை. இந்த அறத்தைச் செய்யப் பெரும் பொருட் செலவும் ஏற்படாது. குறைவான செலவில், மிக அழகாகச் சுமை தாங்கிக் கற்களை நிறுவி விடுவர். பலரும் மிகுதியாகப் போய் வரும் ஒற்றையடிப் பாதைகள், முச்சந்திகள், நாற்சந்திகள் ஆகிய பகுதிகளில், சுமை தாங்கிகள் ஒன்றுக்கு மேல் காணப்படுவதுண்டு. சுமை தாங்கிக் கற்களில் நிறுவியவர்கள் பெயர்கள் காணப்படும்.

## குறியீடு

கருவுற்று நிறை மாதமாக இருந்து பிள்ளை பெற முடியாமல் இறந்து போன பெண்களின் நினைவாகச் சுமைதாங்கிக் கற்கள் (பிள்ளையாகிய சுமையைத் தாங்கியபடி இறந்தவர்கள்) அமைக்கப் பட்டிருக்கும். மிதிவண்டிகள், இருசக்கர வண்டிகள் பெருகிய இந்நாளில், சுமைகளைச் சிற்றூர்களிலிருந்து கொண்டு வருவது எளிமையான செயலாகும். போக்குவரவு வசதிகள் மிகக் குறைவாக இருந்த அந்தக் காலத்தில் காய்கறிகள், தானியங்கள், புளி, விறகு போன்றவற்றைத் தலைச் சுமையாகவே ஐந்து கல் தொலைவு கொண்டு வர வேண்டுமானால் குறைந்தது மூன்றிடங்களிலேனும் சுமையை இறக்கி வைத்துக் தூக்க வேண்டும். அதற்குச் சுமை தாங்கிக் கற்கள் பயன்பட்டன. எனவே சுமை தாங்கி என்பது அக்காலத்து மக்கள் சுமையைத் தூக்கிக் கொண்டு வருதலை எளிமையாக்கிக் கொள்ளக் கண்டு பிடித்ததாகும்.

மக்கள் பயன்படுத்திய சுமைதாங்கிக் கற்கள், மழையாலும் காற்றாலும் இன்று வீழ்ந்து விட்டன. பல உடைக்கப்பட்டு விட்டன. நகரத்தார்களால், சுமைதாங்கிக் கற்கள் பல நிறுவப்பட்டிருக்கின்றன. நகரத்தார் மரபைச் சார்ந்த பெண்கள் தங்கள் செலவிலேயே சுமைதாங்கிக் கற்கள் பலவற்றை நிறுவியுள்ளனர்.

## தண்ணீர் பந்தல்

போவதற்கும் வருவதற்கும் சாலைகள் அமைக்கப்பட்டன; சாலையில் வரும் போது சுமையின் வலியை ஆற்றி ஓய்வு பெறச் சுமைதாங்கி நிறுவினர். வழிநடைக் களைப்பையும் பாரம் தாங்கிய சோர்வையும் போக்கச் சாலைகளில் தண்ணீர்ப் பந்தல்கள் வைத்தனர். இது சாலைப் போக்குவரவில் நிலையான அறமாகும். தண்ணீர்ப் பந்தல் வைத்தவர்கள், தண்ணீர் பந்தலார் வீடு என்று பட்டப் பெயரும் பெற்றனர்.

தண்ணீர் பந்தல், அறம் தொன்று தொட்டு நடைபெற்று வருவதாகும். அளவில் மக்கள் செலவு ஒழியா வழிக் கரையிலும், மூன்று, நான்கு சாலைகள் ஒருங்கு கூடுமிடங்களிலும், ஊரின் எல்லைகளிலும் தண்ணீர்ப் பந்தலை நகரத்தார்கள் நிறுவினர். வழி நடையாளர்கள் தங்கிடவும் குடிக்க நீர் மோரும் நன்னீரும் இங்குக் கிடைத்தன. இவ்வாறு ஆண்டு முழுமையும் இந்தத் தண்ணீர்ப் பந்தல்கள் செயற்பட்டன. இதற்கெனத் தண்ணீர்ப் பந்தரை ஒட்டி ஊருணிகளும் வெட்டினர். ஆனால் இன்றையப் போக்கில் இந்த அறம் மறைந்து விட்டது.

திருவிழாக் காலங்களில் மட்டும் நடத்தும் தண்ணீர்ப் பந்தல்களும் உண்டு. இவை விழாக்காலத்தில் மட்டும் நடக்கும். ஆண்டு முழுமையும் இயங்கும் தண்ணீர்ப் பந்தல்கள் கற்கட்டிடங்களில் செயல்பட்டன. இங்குப் பணியாளர்களுக்குத் தங்கவும் வசதி இருந்தது. செட்டியார்களைப் போல ஆச்சிமார்களும் தங்கள் சிறுவாட்டுப் பணத்திலும் சீதனப் பணத்திலும் தண்ணீர்ப் பந்தல்கள் நிறுவிப் புண்ணியம் தேடினர். கோயில் திருப்பணி போலத் தண்ணீர் பந்தலறமும் பேரளவுக்குச் செய்யப்பட்டது. இன்று பல தண்ணீர்ப் பந்தல் கட்டிடங்கள் குடியிருப்புகளாக மாறி வருமானம் தருகின்றன.

நகரத்தார்களின் தண்ணீர்ப்பந்தல் அறம் தனி ஆய்வுக்குரியது ; பலகோடி ரூபாய்க்குச் செய்யப்பட்டுள்ளது. செட்டிநாட்டில் ஊரைவிட்டுத் தள்ளிச் சாலைகளிடையே காணப்படும் கட்டிடங்களில் பல, நகரத்தார்களின் தண்ணீர்ப் பந்தல்களாகவே இருக்கும். (திருப்புத்தூர்-வயிரவன்பட்டிச் சாலையில் வயிரவன் பட்டி முச்சந்தியிலும் திருப்புத்தூர், சிவல்பட்டிச் சாலையில் அரிவரம் இறக்கத்திலும், விறாமதி பந்தய எல்லையிலும் நகரத்தார்களின் தண்ணீர்ப் பந்தல்கள் உள்ளன. இவையன்றி வேறு பலவுமுள) இந்தத் தண்ணீர்ப் பந்தல்கள், வழிநடை மக்களின் நீர்வேட்கையை நீக்கின.

## அறத்தின் செலவு மதிப்பு

நகரத்தார்கள் நிறுவிய சுமை தாங்கிக் கற்கள் மிகுதி; அவற்றுக்குச் செலவான தொகைகள் குறைவு. ஆனால் அவற்றைக் காட்டிலும் தண்ணீர்ப்பந்தல் அறத்துக்குச் செலவிடப்பட்ட தொகையும் மிகுதி; நிறுவப்பட்ட தண்ணீர்ப் பந்தல்களும் மிகுதி. நகரத்தார்கள் போட்ட சாலைகள் ஏனைய இரண்டையும் நோக்கக் குறைவு தான் ; எனினும் அவை தன்னலத்தோடு பொது நலமும் பயந்தவை.

நகரத்தார்கள் சாலை அமைக்கும் அறம், இந்தியவிடுதலைக்கு முன்னரே செய்யப் பெற்றது. கி. பி. 1956- இல் நகரத்தார்கள் செய்த சாலை அறத்தின் மதிப்பீடு ஏறத்தாழ இரண்டு லட்சமாகும். நகரத்தார்களின் திருக்கோயில் திருப்பணியே இன்று நினைக்கப்படுகின்றது. சாலை அறப்பணி ஏனைய அரிய பணிகளைக் காட்டிலும் அரியபணி; தேவையான பணி; அதனைக் கட்டாயம் நகரத்தார்களுக்குப் பத்திரிக்கையாளர்கள் நினைப்பூட்டுதல் வேண்டும். மக்கள் தங்களுடைய தேவையைத் தாங்களே நிறைவேற்றிக் கொண்டு வளர்ந்தமையையும் வாழ்ந்தமையையும் சாலை அறப்பணி உணர்த்துகின்றது.

# 1. நகரத்தார் வரலாறும் நகரக் கோயில் புராணங்களும்

## மூன்று புராணங்கள்

நாட்டுக் கோட்டை நகரத்தார்க்குரிய ஒன்பது கோயில்களில், நான்கு கோயில்களுக்குப் புராணங்கள் பாடப் பட்டுள்ளன. நேமம் தல புராணம் இருபதாம் நூற்றாண்டினது. ஏனைய மூன்றும் பத்தொன்பதாம் நூற்றாண்டில் பாடப்பட்டவை. இலுப்பைக்குடிப்புராணம், தஞ்சாவூர் சதாவதானம் சுப்பிரமணிய ஐயர் பாடியது; இளைசைப்புராணம் (இளையாத்தக்குடிப்புராணம்) கணேச பண்டிதர் இயற்றியது. வயிரவன் கோயிற்புராணம், சேந்தன் குடி வி. நடராச கவிராயர் ஆக்கியது. இம்மூன்று புராணங்களும் ஏறத்தாழ இருபதாண்டு இடை வெளியில் - சம காலத்தில்- எழுதப்பட்டவை. இம்மூன்று புராணம் பாடியவர்களொடு தேவகோட் டை வீர. லெ. சிந்நயச் செட்டியார் அவர்களுக்குத் தொடர்புண்டு. இப்பெரியார் நகரத்தார் வரலாற்றை உருவாக்கியவர். ஆதலின் மேற் சுட்டிய மூன்று புராணங்களிலும் நகரத்தார் வரலாறு பற்றிய செய்திகள் இடம் பெற்றிருக்கின்றன.

## கிரிகரன் படலம்

வயிரவன் கோயிற் புராணத்தின் இறுதிப் படலம், கிரிகரப் படலம். இப்படலம் நாட்டுக் கோட்டை நகரத்தார் வரலாற்றைக் கூறுகிறது. பூம்புகாரில் வாழும் கிரிகரன், திருத்தலப் பயணமாக வரும் போது வயிரவன் பட்டிக்கு வந்தான். அவன் அங்குள்ள மடத்தில் இருந்த சிதானந்தன் என்ற முனிவனைக் கண்டான். அவன் 'நீ யாவன்?' என்றான். கிரிகரன் 'பொன்னி நாட்டுப் பூம்புகாரில் தனைவசியர் மரபில் வந்தவன்; என் பெயர் கிரிகரன்; சிவப்பதி எல்லாம் சென்று வணங்கிடவந்தேன்' என்று தன்னைப் பற்றிச் சொல்லிக் கொண்டு வணங்கினான். சிதானந்தன், கிரிகரன் பிறவி வரலாற்றைச் சொல்லிச் சிவனடி பணிந்து நற்கதி அடைய வாழ்த்தினான்.

## சிதானந்தன் எதிர்காலநோக்கு

சிதானந்தனுடைய மூன்று காலமும் உணரும் தன்மையைக் கண்ட கிரிகரன், "மூன்று காலத்து நிகழ்ச்சியையும் முழுதுணர்வாய்! என்ற தொண்டனேன் நிற்பதோர் போழ்தத்தில் அன்னவர் துன்னும், ஆன்ற செய்தியும் விதந்து அருளுதி" என்று வேண்டினான். அவ்வேண்டு கோளை ஏற்று முனிவனும் பிற்காலத்து நடக்கப் போகும் வரலாற்றைச் சொன்னான்.

## முனிவன் கூறியவழி

சோழமன்னன் அரசாளும் திருநகரம் பூம்புகார்; பலரும் வாழும் இந்நகரில், மன்னர் பின்னோரான நகரத்தார் சைவநெறி பிறழாமல் வாழ்வர். சிவனடி மறவாதும் அஞ்செழுத்துச் சொல்லியும் திருநீறுபூசியும் சிவ சின்னங்கள் பூண்டும் திகழ்வர். சிவ பத்தியுடைய நகரத்தார்கள், மேரு மலை போன்ற செல்வத்தாலும் இடரின் எய்தியார்க்கு ஈந்திடும் இருங்கொடையாலும் குபேர செல்வம் பெற்றிருப்பர்.

இந்நிலையில், பண்டை வல்வினை வயத்தால் இளங்கோக்கள் (நகரத்தார்கள்) துயரில் வீழ்வர்; அவர்கள் இன்னது செய்வது என்று அறியாது அலமந்து திகைத்துப் பூம்புகார் நகரத்தை விடுத்துப் போவர்; அவர்கள் காவிரிக் கரையின் மேல் கரை வழியாக மூன்று திங்கள் நடந்து சென்று 'தெய்வதத் தனிச்சைய மாமலை' யைச் சேர்வர். இவர்கள் இம்மலையை அடைந்ததும் நல்ல குறிகள் ஏற்படும்; மனத்தில் மகிழ்ச்சி பிறக்கும். உடனே நாயகர் அனைவரும் ஒருங்கு கூடி 'இச் செயல் ஊழின் இயல்போ? மலையின் மாண்போ? இந்நன்மைகள் வந்தடைய என்ன காரணமோ?' என்று ஆராய்ந்து கொண்டிருக்கும் போது சிவனைப் போன்ற கலிங்கமாதவன் அங்கு வருவான்.

## கலிங்கமாதவன் காட்டிய வழி

அம்முனிவன் வருகையாலேயே இத்தகைய நல்ல குறிகள் உண்டாயின என்றுணர்ந்து, நகரத்தார் அனைவரும் தம் துயர் கூறிச் சரணடைவர். கலிங்கமாதவன் அவர் தம் உறு குறைகளை எல்லாம் கேட்டு, "மறுமை, இம்மை, வீடு என்னும் இவற்றால் மிகும் ஐசுவரியம் முடிவற்ற ஈசுவரசம்பந்தத்தால் அன்றோ தொடர்புடையது" என்றும். "உறுதி ஒன்றிய உயர் சிவ பத்தியின் ஒழிவால் / வறுமை வாள் அரா வாய்ப்பட்டீர் மதிவிதி வழித்தே" (49) என்றும் கூறி வழிசொல்லி நெறிப்படுத்துவன்.

கலிங்கமாதவ முனிவன், நகரத்தார்களைக் காவிரியின் இருமருங்கு முள்ள சிவத் தலங்களைப் போற்றி வணங்கிடவும் சிதம்பரத்தில் இருந்து வழிபடவும் அங்கு வாழும் அகோர சிவாச்சாரியனை அடைந்து சிவ தீக்கை பெறுமாறும் கூறுவான். இப்பகுதியில் அகோர சிவாசாரியன் வரலாற்றை ஆசிரியர் விரித்துரைக்கின்றார். கலிங்க மாதவன் சொன்னவாறே நகரத்தார்கள் அகோரசிவாச்சாரியனைப் போற்றி'மச்செல்லாம் பொறுத் திட்டு எம்மை வழி வழி அடிமை கோடி' என்பர். பின்னர் நகரத்தார்கள் புகார் நகர் சென்று (79) முன்னை விட வணிகம் செய்து பெரும் பொரு ளீட்டிப் பண்டு போல வளமுடன் வாழ்வர்.

## இடைப்பிறவரல் பட்டினத்தார் வரலாறு

இவ்வாறு நகரத்தார் வரலாற்றைக் கூறி வந்த வயிரவன் கோயிற் புராணம், இடையில் பட்டினத்தார் வரலாற்றையும் விவரிக்கிறது. பட்டினத்தார், திருவொற்றியூரில் முத்தி அடைந்தமையும் அங்கு அவர் சிவலிங்கமானமையும் சுட்டப்படுகின்றன. இங்குப் பட்டினத்தார் பாடிய நூல்களைப் பற்றிய குறிப்பேதும் இல்லை.

## சோழநாட்டினின்று பாண்டிநாடுவருதல்

பூம்புகாரில் நகரத்தார்கள் பலநலனும் பெற்று வாழ்வர். அப்போது சோழ மன்னன் நடுங்கத் தக்க பலகுறைகளை நகரத்தார்க்கு இழைப்பான். அதனைப் பொறுக்க முடியாத அவர்கள் தங்கள் துயரத்தை அகோர சிவாச்சாரியனிடம் கூற அவன் அவர்களுக்கு ஆறுதல் சொல்லி ஆதரிப்பான். அந்நிலையில், பாண்டியன் தங்களுக்கு நல்ல குடி வேண்டும் என்று தன் நாட்டு ஈசான தேசிகரைக் கொண்டு அகோர சிவாசாரியாருக்குத் திருமுகம் எழுதச்செய்வான். திருமுகம் பெற்ற

ஆச்சாரியன், வணிகர்களை எல்லாம் தில்லையில் கூட்டிச் சோழன் இசைவு பெற்று அவர்களைப் பாண்டிய நாடு அனுப்பி வைப்பான்.

அவ்வண்ணமே நகரத்தார்களும் தென்னாடு வருவர். வந்தவர் தொகை மிகமல்கி யோங்கும். அவர்களுக்குப் பாண்டியன் ஒன்பது கோயிலும் ஒன்பது நகரமும் கொடுப்பான். இதனை"ஒன்பது கோயில் வாய்ந்த உயர்தலன் இளசை மாற்றூர் பொன்பயில் வடுக நாத புரம் இருப் பைக்குடிப் பேர்க் கொன்புரி நேமம் சூரைக் குடிவேலன் குடி கணேச நன்பதி இரணி யூர்இந் நகர்கட்கு முன்னர்ச் சொன்னார்"/ என்ற பாட்டு உணர்த்துகின்றது. இதில் ஆசிரியர் (97) ஒன்பது கோயில் களையும் சுட்டுகின்றார். நகரத்தார் பாண்டிய நாட்டுக்கு வந்ததைக் கூறத் தொடங்கிய புராணம், பாண்டிய நாட்டாசான் ஈசான சிவாச்சாரியன் வரலாற்றை விரித்துரைக்கிறது. ஈசான சிவாச்சாரியன் காசிக்குச் சென்றதும் அவர் திரும்ப வாராமையும் புதிய குருவாக இல்லஞ்சேரி சுவாமிகளை ஏற்றுக் கொள்ளுதலும் ஆகியன இங்குக் கூறப்படுகின்றன. இங்ஙனம் பாண்டிய நாட்டில் நகரத்தார்கள் இந்திரன் பொறாமை கொள்ளுமாறு வளநனி நுகர்ந்து வாழ்வர்.

## வயிரவன்கோயில் வரலாறு

இந்நாளில்,. வயிரவன் கோயில் சேர்க்கையில் நின்வழியில் தோன்றப் போகும்'தெய்வநாயகன்' என்பான் தோன்றி வளரொளிக்குத் திருப்பணி பல செய்வான். தெய்வ நாயகன் என்பது தெயினான் என்று மருவி வழங்கும். (தெய்வ நாயகனெனும் பேர் தெயினான் என்று இவண் மரூஉவாம்' 110:1) இவன் மரபினர்க்கு இக்கோயிலில் முதல் மரியாதை உண்டு (பெய் வளைத் தோளி பாகன் பிரசாத முன்னிற்குமே). இவ்வாறு நகரத்தார் வரலாற்றைச் சிதானந்த முனிவன் செப்பினான் (111).

நடந்து முடிந்த செய்திகளை இனிமேல் நடக்கப் போகும் செய்திகளாக முனிவன் சொல்வதாகப் புராண ஆசிரியர்பாடுகின்றார். இவர் சமய உணர்வு மிக்கவராய் இருத்தலின் அகோரசிவாச்சாரியார், ஈசானச் சிவச்சாரியார், இல்லஞ்சேரிச் சுவாமிகள் ஆகியோரைக் கூறுகின்றார்.

இலுப்பைக் குடித்தல புராணத்தில், இப்புராணம் போல விரிவான நகரத்தார் வரலாறு கூறப்படவில்லை. இலுப்பைக் குடிப்புராணத்திலுள்ள சூடாமணிப் படலம், நகரத்தார் சோழ நாட்டிலிருந்து பாண்டிய நாடு வந்த வரலாற்றை மட்டுமே சுட்டுகிறது. வேறு செய்திகள் கூறப்பட்டில. இளைசைப் புராணம், வயிரவன் கோயிற் புராணம் போலச் சற்று விரித்தே நகரத்தார் பற்றிக் கூறுகிறது. வயிரவன் கோயிற் புராணத்தில் ஒரு படலத்தில் கூறப்பட்ட செய்திகள், பூம்புகார்ப் படலம், அகோர சிவாசாரியப் படலம், ஈசானாசிவாசாரியப் படலம் என்று மூன்று படலங்களாகப் பிரித்து விரித்துரைக்கப் பட்டன. வயிரவன் கோயிற் புராணத்தில் கூறப்பட்டனவே சிறு மாறு பாடுகளுடன் இளைசைப் புராணத்திலும் சொல்லப் பட்டுள்ளன.

## நகரத்தார் வரலாறு

வயிரவன் கோயிற் புராணத்தினால் நாட்டுக் கோட்டை நகரத்தார் தொடர்பான பின்வரும் கருத்துகள் கிடைக்கின்றன. 1. நகரத்தார்களிடையே 'கிரிகரன்' என்ற பெயர் வழக்கில்லை. 'அண்ணாமலை', 'மலையப்பன்'என்பன

போன்ற பெயர்களை மனத்தில் கொண்டு ஆசிரியர் இப் பெயரைக் கூறுகிறார். 2. நாட்டுக் கோட்டை நகரத்தார்களைத் 'தனவைசியர்' (கிரிகப்படலம் 28:2) என்று நூல் சுட்டுகிறது. 3. பூம்புகாரில் இம்மரபினர் சைவசமயிகளாக வாழ்ந்தனர். 4. விதி வசத்தால், இவர்கள் வறிய ராய்ப்பூம் புகார் நகர் விடுத்துச் சையமாமலை வந்து கலிங்க மாமுனிவனைக் கண்டனர். 5. அவன் நகரத்தார் சிவனடி மறந்தமையாலேயே வறியராயினர் என்று கூறிச் சிவப்பதிகள் தோறும் சென்று பணிந்து சிதம்பரம் செல்லுமாறு கூறினான். அங்கு அகோர சிவாச்சாரியனை ஆசாரியனாய்ப் பெற்று அவனிடம் பொருள் பெற்று வளம் பெருக்கி மீண்டும் பூம்புகார் வந்தனர். 6. பூம்புகாரில் நகரத்தார் வளமுற வாழ்ந்த போது, சோழ மன்னனால் அவர்களுக்குத் தொல்லை ஏற்பட்டது. எனவே நகரத்தார்கள், சிதம்பரத்திலிருந்த அகோர சிவாசாரியரைச் சார்ந்து அங்குத் தங்கினர். 7. இந்நிலையில், பாண்டிய வேந்தன் ஈசான தேசிகர் மூலம் அகோரசிவா சாரியரிடம் நல்ல குடி மக்களைப் பாண்டிய நாட்டுக்கு அனுப்புமாறு கேட்டிருந்தான். அகோரசிவாசாரியன், சோழமன்னன் உடன் பாட்டுடன் நகரத்தார்களைப் பாண்டிய நாட்டுக்கு அனுப்பி வைத்தான். அவர்கள் பாண்டிய நாடு வந்து வளமுற வாழ்ந்தனர்.

புராண ஆசிரியர், அகோர சிவாசாரியார், ஈசானசிவாச்சாரியார், பட்டினத்தடிகள் ஆகியோர் வரலாறுகளை இங்குப் பாடுகிறார்.

## வரலாற்று முடிவுகள்

வயிரவன் கோயிற்புராணம், நகரத்தார் வரலாறு பற்றிக் கூறுவன வற்றுள் பின் வருவன குறிக்கத்தக்கன (1) நகரத்தார் பூம்புகாரில் வாழ்ந்தமையும் அங்கிருந்த பாண்டிய நாடு வந்தமையும். (2) அகோர சிவாசாரியார், ஈசான சிவாச்சாரியார் தொடர்பு. (3) இல்லஞ் சேரிச் சுவாமிகளைக் (பாதரக்குடி சுவாமிகள்) குருவாக ஏற்றல். (4) தெய்வ நாயகன் திருப்பணி செய்தமை ஆகியனவாம். இவ்வரலாற்றில் ஆண்கள் பற்றிய பேச்சே இடம் பெறுகின்றது. பெண்களைப் பற்றிப் புராணம் யாதும் கூறவில்லை.

## நகரத்தார் வரலாறு எழுதும் முயற்சி

தேவகோட்டை வீர. லெ. சிந்நயச் செட்டியார், நகரத்தார் வரலாற்றைப் பற்றி ஆராய்ந்து வைத்திருந்த கருத்துகளை அடிப் படையாகக் கொண்டே வயிரவன் கோயிற்புராணம் நகரத்தார் வரலாற்றைக் கூறுகின்றது. வேறு சில பாடுவார் முத்தப்ப செட்டியாரின் கருத்துகளை அடியொற்றியன. பத்தொன்பதாம் நூற்றாண்டின் துவக்கத்தில், நகரத்தார் வரலாறு எழுதப்படும் முயற்சி தோன்றி வளர்ந்ததை இந்தப் புராணக்குறிப்புகள் உணர்த்துகின்றன.

## இளைசைப் புராணம்

பூம்புகாரில் வணிகர் மரபினரே மிகுதியாக வாழ்ந்தனர். 'தீதறு குணத்தின் மிக்க தேசிகர் மரபா மன்றே' (11:4) என்று புராணம் உரைக்கின்றது. நகரத்தார்கள் பூம்புகார் நகரத்தில் வாழ்ந்த போது அறநெறியை விடுத்துத்தங்கள் உடல் நலம் பேணினர். அவர்கள் அறந்துறந்தனர் என்பதைச் சொல்லிய இளைசைப் புராணம், எவ்வகையான அறத்தைத் துறந்தனர் என்பதைச் சொல்ல வில்லை. பின்

நகரத்தார்கள் அகோர சிவாசாரியரைச் சந்தித்தலைப் பற்றிக் கூறும் போது'பட் டினம் நாம் வைகியதும் பரமன் பத்திவிட்டதுவும் / கட்ட மதனால் வந்ததுவுங் கருது மிவையே' (45:1-2) என்று சிவபத்தித் திறத்தை நகரத்தார்கள் புறக்கணித்ததைக் கூறும்.

சிவபத்தித் திறத்தை நாட்டுக் கோட்டை நகரத்தார்கள் மறந்த மையால், அவர்கள் வறுமையுற்றனர். வறுமைக்குக் காரணமே சிவ வழிபாடு பிழைத்தமையே என்று இப்புராணம் சுட்டுகிறது. வறுமைப் பட்டு நகரத்தார் தலயாத்திரை செய்து சிதம்பரத்தில் அகோர சிவாசாரியரைக் கண்டு வறுமை சொல்லி வணங்கினர். அவரும் இவருக்கு உணவு வழங்கி வாழ்த்தினார். இவ்வாறு வாழ்த்திய போது, வணிகருக்கு அகோர சிவாசாரியார் பொருள் வழங்கினர். 'நவையில் தனமே முதல சில நல்கியவருக்கு அதன் பின்னர் /உவமை அகலும் சூக்குமாம் உயர்ந்த சைவ தருமமவை / சிவமென் பொருளே பெருக்வுளம் தெருள அருளி னோடருளி' (47:2.4) என்பது இளைசைப் புராணம். அகோரசிவாசாரியார் அருள் பெற்றும் பொருள் பெற்றும் நாட்டுக் கோட்டை நகரத்தார்கள் எல்லாச் செல்வமும் பெருக வளர்ந்தனர். இந்த வளம் எல்லாம் பூம் புகாரிலேயே பெற்றனர். அகோர சிவாசாரியார் வாழ்த்துப் பெற்று நகரத்தார்கள் திரும்பவும் பூம்புகாரே சென்றடைந்தனர். இதனை 'முன்பு போல நுங்களது முதுமா நகரமெய்தி' (48:1) என்ற அடி உணர்த்தும்.

இந்தப் படலத்தால், நகரத்தார்கள் பூம்புகார் நகரில் வறுமை யடைந்தமையும், அகோர சிவாசாரியன் ஆதரித்துப் பொருள் கொடுக்கவும் மீண்டும் செல்வம் திரட்டியமையும் அறிய முடிகின்றது. ஆசான் ஈந்த பொருளாலே அமையும் பலவாம் வாணிகங்கள் கூசாது இயற்றினர் (49). அவர்கள் செய்த வணிகம் யாது என்று தெரியவில்லை. குரு வருளால் பெறுதற்கரிய பலபேறுகளும் நகரத்தார்கள் அடைந்தனர். 'மன்னோர் குருவினருள் சிறிது வாய்க்கின் யாதோ மற்றரிதே' (58:4).

'அகோரசிவாசாரியப்படலம்' என்ற படலத்தின் முதல் ஐம்பத்து நான்கு பாடல்கள் அகோர சிவாசாரியர் வரலாற்றைப் பேசுகின்றன. பின் ஆசிரியர் தொடர்ந்து நகரத்தார் வரலாற்றைச் சுட்டுகின்றார். இப்பகுதியில் நகரத்தார் பூம்புகாரை விடுத்து இளையாத்தக் குடிக்கு வந்தமை விளக்கப் பெறுகின்றது.

'செறிவாய செல்வமிகு தேசிகர்கள்
சேர்வுற்ற சிரம நீங்கி
மறைவாழு மிளைசை தன்னின்
மன்னிய தோர் செய்தியினி
வகுக்க லுற்றாம்' (55:3.4)

என்று இயம்புகிறது. இவ்வண்ணம் தொடர்ந்து இப்புராணம் நகரத்தார் வரலாற்றுக் குறிப்புகளைத் தருகிறது.

# 2. நகரத்தார் பற்றிய இலக்கியக் குறிப்புகள்

ஏரெழுபது, காணியாளர் அகவல், செங்குந்தர் பிரபந்தத்திரட்டு என்பன தனிப்பட்ட இனத்தார் வரலாற்றையும் பெருமையையும் எடுத்து இயம்புகின்றன. இவற்றை இனச் சார்பு இலக்கியங்கள் என்று தனிவகையாக ஆராய்தல் கூடும். செந்தமிழ்ப் புலவர்களை ஆதரித்த நாட்டுக் கோட்டை நகரத்தார்களைப் பற்றிப் பாடுவார் முத்தப்ப செட்டியார் திருமுக விலாசம், நகரவாழ்த்து என்ற நூல்களைப் பாடியிருக்கிறார். செட்டி நாடு தொடர்பான இலக்கியங்களில் நாட்டுக் கோட்டை நகரத்தார் பற்றிய குறிப்புகள் இங்கு விளக்கப் பெறுகின்றன. இவை நகரத்தார் வரலாற்றை எழுதுதற்குத்துணையாவன. டாக்டர் தே. சொக்கலிங்கம் எழுதிய'பாடுவார் முத்தப்பர்' என்ற நூல் அவர்தம் நூல்களிலிருந்த செய்திகளைத் திரட்டி ஆராய்ந்துள்ளது. இது போலப் பல சிற்றிலக்கியங்களில் நகரத்தார் பற்றி வரும் குறிப்புகள் இங்குத் தரப் பெறுகின்றன.

**1. கண்ணுடையம்மன்பள் உணர்த்தும் உண்மைகள்**

செட்டி நாட்டில் சிறந்தோங்கி வளர்ந்த தமிழ்ப் புலவர்களில் முத்துக்குட்டிப் புலவர் ஒருவர் ; இவர் தான் பாடிய நாட்டரசன் கோட்டை கண்ணுடையம்மன் பள்ளில் தன்னை,

*"சினத்தை வென்றவர் தமக்கோரடிமை*
*செகத்துளோர்க் கொருபொதுப்பிள்ளை*
*செந்தமிழ் முத்து நாயகம் .........."*

(பா எண் 94: 1-2)

என்று அறிமுகப்படுத்திக் கொள்ளுகிறார். பள்ளிலக்கியம் பாடிய இவரே, முதற்கண் உரைநடை நாவலான - 'வசன சம்பிரதாயக் கதை'யை எழுதியவர். இப்புலவர் சிவகங்கை மன்னர் முத்துவடுகநாதேந்திரன் காலத்தில் வாழ்ந்தவர். இவர் பாடுவார் முத்தப்பர் காலத்தில் வாழ்ந்த மூத்த தலைமுறைப் புலவர். முத்துக் குட்டிப் புலவர் பாடிய கண்ணுடையம்மன், நாட்டுக் கோட்டை நகரத்தார்கள் போற்றும் தெய்வமாகும்; இவ்வம்மை நாட்டுக் கோட்டை நகரத்தார்கள் வாழுகின்ற நாட்டரசன் கோட்டையில் நல்லாட்சி புரிகின்ற நாயகியாவாள்.

நகரத்தார் வாழ்ந்து போற்றும் நாயகியைப் பாடும் இலக்கியத்தில், முத்துக் குட்டிப் புலவர் நகரத்தார்கள் பற்றிய குறிப்புகளைப் பெய்து பாடியிருக்கிறார். நாட்டுவளம் பற்றிய பகுதியில் நகரத்தார்கள் பற்றி ஒன்றுமே இவர் கூறவில்லை. நாட்டரசன் என்பவன் கோட்டையை உண்டாக்கி ஆண்டான் என்று இவர் உரைத்துள்ளார். நாட்டுக் கோட்டை நகரத்தார் வரலாறு (கி. பி. 1894) எழுதியவர்கள்,

"ஏழுவழி நகரத்தார் சாலிவாகன சகாப்தம் 1465 கலியுக வருடம் 4644-ல் நாட்டரசன் கோட்டையில் குடியிருக்கையில் கொள்ளை கலகம் நடந்ததில் சில பெண்கள் கற்பு அழிந்து போனதினால் நகரத்தார் கூடி குருஸ்தானங்களிடம் போய் ...... " (பக் 18-19) என்ற குறிப்புக் காணப்படுகிறது. நகரத்தார் வரலாற்றில்

யார் ஆண்டார்கள் என்ற குறிப்புக் கிடையாது. பள்ளுநூலில் கலகம் நடந்தது பற்றிய குறிப்புக் கிடையாது.

நாட்டு வளத்தில், கண்ணுடையம்மன் பள்ளு பின்வருமாறு பேசுகிறது:

*"எந்த நாட்டிலும் ஏத்தமிந்நா டென்று*
*யேழுர்ப் பத்துக்கும் லெக்காயிருந் தோன்*
*அந்த நாட்டர சன்றன்னரசு நா*
*டாளும் நாளிலதி காரம் கொண்டு*
*சொந்த நாட்டினிற் கோவிற் குளங்கொடி*
*சூழுங்கோட்டை தன் பேரிட்டுண்டாக்கி*
*வந்த நாட்டரசன் கோட்டையுள்ள*
*வடகலை வேள்வி நாடெங்கள் நாடே"* (பா : எண் : 18)

'நாட்டரசன்' என்பவன் தன் பெயரால் கோட்டை உண்டாக்கி ஆண்டான், இப்பெயர் இவனுடைய இயற்பெயரா? நாட்டுக்குத் தலைமையை உணர்த்தும் பெயரா? என்பது தெரியவில்லை. கோட்டையிருந்தால் அதற்கான அடையாளங்கள் இன்று உள்ளனவா? இவற்றுக்கு உடன்பாடான மொழிகள் இல்லை.

எருது கட்டு நிகழ்ச்சியைப் பேசவந்த ஆசிரியர் அதன் தொடக்கத்தைக் கூறும் போது நாட்டரசனும் நாலு காரணக்காரரும் தீர்த்தம் திருநீறு வாங்கினார் என்பர். இதே நூலில், நாட்டரசன் கோட்டை சிவகங்கை ஆட்சியாளருக்குக் கட்டுப்பட்டது என்று கூறப்பட்டிருக்கிறது.

*"மலர்மாது கண்ணுடையாளுலகீன்ற வட்கு முத்து*
*வடுகநா தேந்திர துரை நெடுநாளைக்கும்"*
(பா: எண் : 10: 1 - 2)

என்றும்.

*"வயனிருவர் பரவு முத்து வடுகனாதேந்திர துரை*
*மார்க்கண்டன் போலிருக்கக் கூவாய் குயிலே"*
(பா: எண் : 40: 1 - 2)

என்றும்

*"மனுவரத சேரு முத்து வடுகனா தேந்திர துரை*
*அனுதினமும் புவி புரக்க அரசுபெற்று வாழியவே"*
(கண்ண : 65)

என்றும்

*"மகராசன் முத்துவடுக னாதேந்திரன்*
*வளர் சமஸ்தானந் தழைக்கவே"*
(93: 1 - 2)

என்றும்

*"வாழி வாழி கண்ணுடையாள் பாதம் வாழி - முத்து*
*வடுகனாதேந்திர மகராஜன் வாழி"* (126)

என்றும் வருவன நாட்டரசன் கோட்டை தனியார் ஆட்சிக் குட்பட்டதன்று என்பதை உணர்த்துகின்றன. முத்துவடுக நாதேந்திரன் ஆட்சியில் சிவகங்கை சமஸ்தானத்தில் நாட்டரசன் கோட்டை இருந்தது என்பதை இந்தக் குறிப்புகள் எடுத்துரைக்கின்றன.

'கண்ணுடையம்மன்பள்' இயற்றப்பட்ட காலத்தில் உயிருடன் வாழ்ந்தவன்'நாட்டரசன்'; இவன் நாடாளுகின்ற மன்னவன் இல்லை ; நாடு என்ற பிரிவுக்குத் தலைமையுடையவனாக விளங்கியவனே 'நாட்டரசன்' என்றுரைக்கப் பட்டிருக்கின்றான். இது போலக் கானாடு, கல்வாச நாடுகளில் தலைமையுடையவன் 'ஐயா' என்று அழைக்கப் பெறுவான் ; நாட்டுக் கணக்குப் பார்ப்பவன், 'நாட்டுக் கணக்கு' எனப்படுவான்; இவனே பொருளாளன். இவ்வாறு விளங்கிய ஒருவனையே பள். 'நாட்டரசன்' என்று குறிக்கின்றது. எனவே, நாட்டரசங் கோட்டையில் தனி மன்னர் ஆட்சி இருந்தது என்று கொள்ளுவதற்குத் தக்க சான்றுகள் இல்லை.

'நாட்டரசன்' என்று பிறனை நூலுள் சுட்டும் ஆசிரியர், நகரத்தார்களை 'நாட்டுக் கோட்டை நகரத்தார்' என்றோ நாட்டரசன் கோட்டை நகரத்தார் என்றோ குறிக்கவில்லை : நகரத்தார் வரலாறு சொல்லும் பகுதியில் 'ஐஞ்ஞூற்று வாழ் மாநகர்' என்றும் 'ஐஞ்ஞூற்றுவர்' என்றும் கூறப்பட்டிருக்கிறது.

கண்ணுடையம்மன்பள், நாட்டுவளத்தை விரித்துப் பாடவில்லை ; அதனைவிட நகர வளம் பாடும் பகுதி விரிவாகவும் பாடல் எண்ணிக்கை கூடுதலாகவும் அமைந்திருக்கிறது. நாட்டுவளம், நகர வளம் பாடும் புலவர்கள் நாட்டு வளத்தை மிகுதியாக விரித்தும் நகரவளத்தை அதனைவிடக் குறைத்துமே பாடுவர். இந்த இலக்கிய மரபுக்கு மாறாக முத்துக்குட்டிப் புலவர் நகரவளத்தைப் பற்றி மிகுதியாகப் பாடியிருக்கிறார். இவர்'நகரவளம்' என்பதை நகரத்தார் வளமென்று பொருள் கொண்டு, நகரத்தார்கள் பற்றிய செய்திகளை ஆசிரியர் நூலுள் பேசுகின்றார். இன்றும் செட்டி நாட்டு மக்கள் வழக்கில் - 'நகரம்' - என்பது ஊரில் வாழும் நாட்டுக் கோட்டை நகரத்தார்களைச் சுட்டும் பெயராகும்.

நகரவ ... பேசும் முதல் பாட்டில் 'எல்லவர்க்கு முகந்த நகரம் இளசை வாழ்வு மிகுந்த நகரம் ' (பா :எண் : 25 :அடி 3) என்று முத்துக்குட்டிப் புலவர் நகரத்தார்களை உயர்த்துவர். அவர்களின் அநுசரித்துப் போகும் தன்மையைச் சுட்டியும் பாடியுள்ளார். நகரத்தார்கள் எல்லாருடனும் நன்கு பழகி உதவியாக வாழ்ந்தமையால், முத்துக்குட்டிப் புலவர் அவர்களைத் தனிச் சிறப்புடன் போற்றுகின்றார். நகரவளம் பாடும் எட்டுப் பாடல்களில் ஐந்து பாடல்கள் நகரத்தார்களைப் பாடுகின்றன.

அந்தணர், தாய், தந்தை, குரு, தெய்வம் என்போரையே வணங்கி மன்னரை வணங்காத மாட்சிமையுடையோர் ; இதனை,

*"செம்பொன் வேதியர் மாதா பிதாக் குரு*
*தெய்வந் தன்னை வணங்குவதல்லால்*
*இன்ப மாமுடி வேந்தரையும் புவி*
*மீதினில் வணங்காத நகரம்"*

(பா : எண் : 21 : 1 - 2 )

என்ற அடிகள் எடுத்துரைக்கின்றன. இதனை அடுத்து நகரத்தார் வரலாறு நூலில் சுருக்கமாகவும் தெளிவாகவும் கூறப்பெறுகிறது.

*"சென்று நற்குடி மாறனழைக்கச்*
*சிறந்த காவேரிப் பூம்பட்டணத்தில்*
*அன்றிருந்து பொற் றேரறி வந்தோர்*
*அருவியூர் சுந்தரம் தன்னிளசை*
*என்னு மூன்றிலிளசையைஞ் ஞூற்று வாழ்*
*ஏழுமா நகரர் வாழும் வணிகர்*
*நன்றிசேர் கண்ணுடையாளைப் போற்றும்*
*நகர மெங்கள் நகரங் காணாண்டே"*

(பா : 22)

பாண்டிய நாட்டிலிருந்து பாண்டிய மன்னன் சோழ நாடு சென்று நற்குடிகள் என்று நகரத்தார்களைப் பொற்றேரில் ஏற்றி வந்தான்: அவர்கள் அருவியூர், சுந்தரம், இளசை என்று மூன்று ஊர்களில் குடியேறினர். அம்மூன்றில் இளசை (இளையாத்தங்குடி)யில் ஐஞ்ஞூற்றுவர்களாகிய ஏழூர் நகரத்தார்கள் வந்து குடியேறினர். நகரத்தார்கள் சோழநாடு விட்டுப் பாண்டிய நாடு வந்த வரலாற்றை ஆசிரியர் உரைக்கின்றார்.

இளசை நகரில் குடியேறியதைச் சொல்லிய முத்துக்குட்டிப் புலவர், அம்மரபினர் நாட்டரசன் கோட்டைக்குப் பரவியது எவ்வாறு என்பதை நூலில் சொல்லவில்லை.

நாட்டுக்கோட்டை நகரத்தார்கள், காவிரிப் பூம்பட்டினத்திலிருந்து பாண்டிய நாட்டில் வாழ்ந்தார்கள். அவர்கள் நாட்டரசன் கோட்டையில் குடியிருந்தபோது, கலகம் ஏற்பட்டுப் பெண்கள் சிலருக்குக் கற்புப் பழுதுவந்துவிட்டது என்றும் (வீர. லெ. சிந்நயச் செட்டியார் : ப - 19) நகரத்தார் வரலாறு எழுதியவர்கள் குறிப்பர். இந்நிகழ்ச்சி நடைபெற்ற காலம் சாலிவாகன 1465: கலி 4644 : (கி. பி. 1543) ஏறத்தாழ இந்த நிகழ்ச்சிக்கும் பள்ளு பேசும் காலத்துக்குமிடையே இருநூற்றைம்பது ஆண்டுகள் கழிந்து விட்டன.

நகரத்தார்கள் தாங்கள் வாழுமிடத்தில் ஏதேனும் விரும்பத்தகாதன நடைபெற்றால், அந்த இடத்தைவிட்டு அவர்கள் விலகிப் போய்விடுவர். அங்கேயே குடியிருக்கமாட்டார்கள்; வேறு இடத்திற்குப் போய் விடுவர். குடி பெயர்ந்த இடத்திற்கு மீண்டும் குடிவரமாட்டார்கள். நகரத்தார் சரித்திரம் சொல்லும் கலகம் நடந்திருந்தால், நகரத்தார்கள் நாட்டரசன் கோட்டையை விட்டு வேறு ஊருக்குக் குடி போயிருப்பர் ; தொடர்ந்து அங்கு நகரத்தார் குடியிருந்து வருவதால் நாட்டரசன் கோட்டையில் எவ்வகையான அசம்பாவிதமும் நடக்கவில்லை என்பது தெளிவாகும். அதனால் தான், கண்ணுடையம்மன்பள், நாட்டரசன் கோட்டைக் கலகம் பற்றிக் குறிக்கவில்லை.

'நகரவளம்' பகுதியில் நகரத்தார்கள் பற்றிய பிற செய்திகளும் இடம் பெறுகின்றன.

*"கண்ணினால் மதயானை நிறுத்தும்*
*கடலில் விட்ட கனகம் அழைத்தும்*

*பண்ணுகந்தவை பாடலுகந்து நற்*
*பந்தக் காற்குப் பவளம் நிறைத்து*
*விண்ணுயர்ந்த பொன் மேரு வுரைத்துமுன்*
*மீனவன் முடி சூட்டியு மொய்ப் பாய்*
*நண்ணுகீர்த்தி படைத்த வணிகர்*
*நகரம் எங்கள் நகரம்......"*

(23)

*"கற்றவர் புகழ் மூன்றாங் குலம் வாழ்கக்*
*கம்பனாற் கோவில் செம்பொன்னால் வேய்ந்தோர்*
*உற்ற சீரகத்தார் புனைமார்பர்*
*உயர்ந்த சிங்கக் கொடி விருதுள்ளோர்*
*சுற்றமா மறையே முகற் புள்ளவர்*
*துங்க மா மலைத் தேனா றுடையோர்"*

(24:1 - 3)

யானையைக் கண்ணால் கண்டு அதன் எடையை மதிப்பிடும் தன்மையர் ; கடலில் இட்டகனகத்தைத் திரும்ப அழைத்தவர்கள் ; பண் உகந்தவை பாடலுகந்தவர்கள் : (ஔவை தண்தமிழுக்குப் பொற்பாகம் கொடுத்தவர்கள்) திருமணப்பந்தல் காலுக்குப் பவளக்கால் நாட்டினவர்கள். பொன்னாய் விளங்கும் மேருமலையை உரைத்து மாத்துக் கண்டவர்கள் ; பாண்டியனுக்கு முடிசூட்டுமுரிமையுடைவர்கள், கற்றவர்கள் எல்லாம் போற்றுகின்ற மூன்றாவது குலமான வைசியகுலத்தைச் சேர்ந்தவர்கள் ; கம்பன் கோயிலுக்குச் செம்பொன் வேய்ந்தோர்; சீரகத்தார் அணிந்தோர் சிங்கக் கொடியையுடையவர்கள். சுற்றம் முதலாகிய ஏழு கற்புள்ளவர்கள். (ஏழு வகையான கோயிற் பிரிவுள்ளவர்கள்) (பா. 23:24)

இரண்டு பாடல்களில் நகரத்தார் வரலாறு பேசிய பள், நூலின் வேறு பகுதிகளிலும் நகரத்தார் தொடர்பான செய்திகளைக் கூறுகின்றது. "நகரத்தார்கள் நல்லறிவுக்கும் புகழ் மேன்மைக்கும் திறமானவர்கள் ; மிஞ்சினால் அடையாத காவிரியாற்றைப் பஞ்சினால் அடைத்தவர்கள்; செலவுகளைச் செட்டாகச் செய்வோர்; முழுமாணிக்கத்தைப் பிச்சையாக இட்டவர்கள்; வாழுகின்ற ஊரில் மன்னர்கள் போல வாழ்கின்றவர்கள்; கண்ணுடையம்மன் பள்ளில், கண்ணத்தாள் கோயில் காரணக்காரர்களைச் சொல்ல வந்த ஆசிரியர்,'கனக மேவிய ராஜகரத்துடன் கற்பகாலம் வளர் நகரத்தார்' (பாடல் 35 : அடி 1) என்பர். நகரத்தார்கள் எப்போதும் பொன் கொழிக்கவேண்டும் என்பதைக் 'கனக மேவிய ராஜகரத்துடன்' என்றும் அவர்கள் நெடுங்காலம் வாழவேண்டும் என்பார்'கற்பகாலம் வளர் நகரத்தார்' என்றும் அருள்வாக்குக் கொடுக்கின்றார். இது போல நகரத்தார் எல்லாநலமும் பெற்றிருக்க வேண்டும் என்பது இப்புலவரின் விருப்பம். இதனால் "நீடு மெய்ப்புள்ள வணிகர் நன்ன கரங்கள் எல்லாம் வந்து பொன்னகரம் போலிருக்க" (பா : 57 : 3 - 4) என்பர், ஆசிரியர். நகரத்தார்கள் நிறையப் பொருள் தேடும் திறமுடையவர் என்பதைத் 'தேட்டிலுயர் வணிகர்' என்று (முளைப்பாட்டு : 14) இயம்புவர்.

நகரத்தார்கள் நலம் பல பெற்று வாழ வேண்டும் என்பதைச் சொல்லவந்த ஆசிரியர்'செகராசர் மகிழ் வணிகர் தெரு வீதி' (56) என்பர். ஆட்சியாளர்

மகிழ்கின்ற வணிகர் என்று மன்னர்களுடன் நகரத்தாருக்கு இருந்த நல்லுறவை ஆசிரியர் உணர்த்துகிறார். நூலில் 'வாழிமிக நாடு நகர் வாழி வணிகர் கிளை வாழி' (பா. 67) என்று வணிகர்களின் சுற்றத்தையும் ஆசிரியர் வாழ்த்துகிறார்.

நாட்டரசன் கோட்டை கண்ணுடையம்மனைப் பாடுகின்ற பள் நூல் ஆதலின் அங்கு நகரத்தார்கள் செய்த அறங்களையும் அவர் நூலில் நவிலுகிறார். நகரத்தார்கள் கண்ணுடையம்மன் கோயில் முகப்புமண்டபத்தையும் புதுத்தேர் செய்தமையையும் பள் உரைக்கின்றது. இதனை

*"புனிதமுறு சந்நிதிமுன் முகப்புமண்டப முடித்த*
*புகழ்நகரத்தார் விளங்கக் கூவாய் குயிலே*
*தனது யீஸ்வர வருஷம் புதுத்தேர் வைத்திடுநகரம்*
*தழைக்குமூரவர் வாழ்கக் கூவாய் குயிலே"*

(45 : 2 - 3)

என்று முத்துக்குட்டிப் புலவர் பாடுகின்றார். கண்ணுடையம்மனுக்கு நகரத்தார்கள் பல்வேறு அணிகலன்கள் செய்து கொடுத்திருக்கின்றனர்.

*"கண்ணுடைய நாயகிக்குக் கண்குளிரப் பார்த்திருக்கும்*
*எண்ணரிய நவநிதியும் இசைந்துவைத்த பொக்கிஷமாம்*
*பொக்கிஷஞ் சேராபரணம் புது வயிரத் தேர்திருநாள்*
*மிக்க பொருளுள்ள தெல்லா மிகத் தேடி வைத்தவர்கள்"*

(பா 59 : கண்ண : 16 -17)

கண்ணுடையநாயகிக்கு வேண்டுவனவற்றையெல்லாம் வழங்கி மகிழும் நகரத்தார்களைக் கண்ணுடைய நாயகி கண்ணும் கருத்துமாக வளர்க்கிறாள்". (பா. எண் 103:1) கண்ணுடைய நாயகி நகரத்தார்களைக் காத்துப் பேணி வளர்க்கின்றாள் என்பதை ஆசிரியர் உவமை மூலம் உணர்த்துகின்றார். நகரத்தார்கள் வரலாற்றையும் சிறப்பையும் முத்துக் குட்டிப்புலவர் இப்பள்ளில் பதிந்துவைத்திருக்கின்றார்.

### நகரத்தாரும் தமிழும்

பெரும் பொருளைத் தேடிய நகரத்தார்கள், முத்துக்குட்டிப் புலவரைப் பெரிதும் ஆதரிக்கின்றனர். அதனால் நூல் முழுமையும் ஆசிரியர் அவர்களை உயர்த்தும் அவர்களின் நெறியான வாழ்க்கையைப் போற்றியும் பாடியிருக்கிறார். முளைப் பாட்டுப் பகுதியில் "முத்தமிழை வளர்த்தவர்கள் மரபுடையோர் / எத்திசையுங் கொண்டாடும் ஏழு நகர் வாழ் வணிகர்" (18 கண்ணி) என்பர். நகரத்தார்கள் முத்தமிழை வளர்த்தவர்கள் என்றும் எல்லாத் திசையும் போற்றிக் கொண்டாடும் எழு நகரத்தார் என்றும் ஆசிரியர் சிறப்பிக்கின்றார்.

### முருகப்பதேவர்பிள்ளைத் தமிழும் நகரத்தார் வரலாறும்

முருகப்பதேவர் பிள்ளைத் தமிழின் நூலாசிரியர், 'பழமை பெறு மல்லைக்குழந்தை நாவாணன்' (587 :2) என்று இந்நூலில் வருகின்ற குறிப்பாலேயே அறிய முடிகின்றது. இவர் மிதிலைப்பட்டிக் கவிராயர் மரபைச் சார்ந்தவர். இந்நூலின் பாட்டுடைத் தலைவர் முருகப்பதேவர். இவர்கள் குடும்பத்தினர் நியமத்தில் ஆட்சி

புரிகின்றவர்கள் என்றும் பழநியப்பன் என்ற வாச்ச மாகாளியின் மகன் முருகப்பன் என்றும் இந்நூல் இயம்புகிறது.

*"சீர்பெற்ற நியமைநகர் தன்னிலர சாட்சி செறி*
*தேவரென வருவசீரன்*
*மாமேவு துரைப் பழனிப் பதிநிதி யாம் வச்ச*
*மாகாளி பூவன் மைந்தன்*
*மார்கண்ட னான முரு கப்பமகி பாலசெய*
*மன்னனைக் காக்க வென்றே"*

(பா. எண். 1: 3 - 4)

இம்மரபினர் இளையாத்தக்குடியில் இருந்து இப்பகுதியை ஆண்டனர். இன்றும் இளையாத்தக்குடி சமீன் மரபினர் இருக்கின்றனர். இளையாத்தக்குடியே நகரத்தார்கள் ஆதி முதலில் வாழ்ந்த இடமாகும். இப்பிள்ளைத் தமிழ் இளையாத்தக்குடியை 'இளசை' என்று சுட்டுகின்றது. நகரத்தார்களின் ஒன்பது கோயிலில் முதற் கோயிலான இளையாத்தக்குடி, கல்வாச நாட்டுச் சமீன்தார்களுக்குக் கட்டுப் பட்டது. இளையாத்தக்குடிச் சிவன் கோயில் அவர்கள் கட்டியது. கல்வாச நாட்டுச் சமீன், இளையாத்தக்குடி சமீனிலிருந்து வேறானது.

இப்பிள்ளைத்தமிழ், இளையாத்தக் குடியில் வாழ்ந்த தலைவனைப் பாடுவதால்,'இளையாத்தக்குடிச் சிவ பெருமானும் அம்மையும் பாட்டுடைத் தலைவனைக் காக்க' என்றுரைக்கின்றது.

"நிதிகொண்ட மலையரயனருள்கின்ற மகமாயி நித்தியகலியாணி வாமி

*நிமலிதிரி புரைகெவுரி புவனவுயிர் தழைக்கவருள்*
*நியமிக்கு முமையாகராம்*
*கதிகொண்ட சரணர்சபை நடனேசர் மதிகொன்றை*
*கங்கையணி சடிலராதி*
*கயிலாச நாதர்பர மேசர்சரு வேசரிரு*
*கமலப் பதம்பணிகுவாம்"*

என்று நித்திய கலியாணி சமேத கயிலாசநாதரைக் குறிக்கின்றார், குழந்தைக் கவிராயர். இப்பாட்டில் 'இங்கிலீசுத் / திட்டப்படிக் கர்நாடகஞ் செய்தீரா' (585:4) என்று பகுதி நோக்கத்தக்கது.

நாட்டுக் கோட்டை நகரத்தார்கள் கொண்டாடும் கீரணிப் பட்டி முத்துமாரியம்மன் இளையாத்தக்குடிக் கோயிலுக்குள் கட்டுப்பட்டது. இளையாத்தக் குடிச் சிவன் கோயிலுக்கு வடக்கே அமைந்து பரிவார தேவதையாகக் கீரணியம்மன் திகழுகின்றாள். இவ்வூர்த் தேரோட்டத்தில், இளையாத்தக்குடி அய்யா தலைமையில் கல்வாசல் நாட்டார் வந்தே தேர் வடம் பிடிப்பர். ஆதலின் இந்தப் பிள்ளைத் தமிழில் கீரணிப் பட்டி முத்து மாரியம்மனைப் பற்றி நிறையக்குறிப்பிருக்கிறது.

*"விமலிஅங் காளி கீரணிமுத்து மாரியுமை*
*விண்ணவரெலாம் காக்கவே"*

(பாட்டு 563 : 2)

இன்னொரு பாட்டில், "கீரணி யாள் மகமாயியை நாடழகேச மனோ நேயா" (பாட்டு 568 : 2) என்றும்

*"பெண் சேர்ந்து மெய்யில் பிறங்குகயி லாசாரம்*
*பெம்மான் தருங்கிருபையால்*
*பிறை நுதல் செல்விகீ ரணி முத்து மாரியருள்*
*பெற்றுவளர் கின்ற பரிசால்"*

(568:2; 589:4)

என்றும் கீரணிப் பட்டி முத்து மாரியம்மனைப் புலவர் பாடி மகிழ்கின்றார்.

நியம நகர்

வாச்சமாகாளி ஆட்சிபுரியுமிடம் 'நியமை நகர்' (561:3) ஆகும். இதுவும் ஒன்பது நகரக் கோயில் உள்ள ஊரில் ஒன்றாகும். இப்புலவர்

*"நதி கொண்ட கலைவாச நாடி காசை (னா)*
*நாடுவிளை*
*நடுநியமை நாடாளு மால்"*

(562:4)

என்று காப்புப் பருவத்திலும்,

*"நல னோங்கு கோனாடு கானாடு கல்வாச*
*நாடு பூங் குன்றை நாடு*
*நானாடு காவல் கொண்டிளசையம் பதியிலே*
*ரவிமதியமுள்ள மட்டும்*
*வெலனோங்கு வெகு கோடி நலமுறை விளங்கவே*
*பெருமை யரசாட்சி புரியும்*
*பேராளி சீராளி போராளி சேனைப்*
*பெருக்காளி......."*

(576: 1 - 2)

என்று முத்தப் பருவத்திலும் உரைக்கின்றார்.

காப்புப் பருவத்தில், முதற் கண் இளையாத்தக்குடி 'நித்திய கலியாணி - கயிலாச நாதரைக் காக்க' என்று பாடியவர், அதற்கடுத்த பாட்டுக்கு அடுத்த பாட்டில் நேமநகர் சவுந்தரநாயகி சமேத செய கொண்ட சோழீரைப் பாடுகின்றார்.

*"விரையார் பிரசநதி பாய*
*விளையுங் கழனி சூழ் நியமம்*
*விளங்கும் கனகா லயத்திலுறை*
*விமலர் செயங்கொண் டீசர்பங்கின்*
*உரையார் துணைவி யென வளரும்*
*உமையா கிய பெண் சவுந்தர மான்*
*உம்பர் பரவ வரிதன*
*உபய சரண மலர் காப்பாகும்.*

(564: 1 - 2)

புரிகின்றவர்கள் என்றும் பழநியப்பன் என்ற வாச்ச மாகாளியின் மகன் முருகப்பன் என்றும் இந்நூல் இயம்புகிறது.

*"சீர்பெற்ற நியமைநகர் தன்னிலர சாட்சி செறி*
*தேவரென வருவசீரன்*
*மாமேவு துரைப் பழனிப் பதிநிதி யாம் வச்ச*
*மாகாளி பூவன் மைந்தன்*
*மார்கண்ட னான முரு கப்பமகி பாலசெய*
*மன்னனைக் காக்க வென்றே"*

(பா. எண். 1: 3 - 4)

இம்மரபினர் இளையாத்தக்குடியில் இருந்து இப்பகுதியை ஆண்டனர். இன்றும் இளையாத்தக்குடி சமீன் மரபினர் இருக்கின்றனர். இளையாத்தக்குடியே நகரத்தார்கள் ஆதி முதலில் வாழ்ந்த இடமாகும். இப்பிள்ளைத் தமிழ் இளையாத்தக்குடியை 'இளசை' என்று சுட்டுகின்றது. நகரத்தார்களின் ஒன்பது கோயிலில் முதற் கோயிலான இளையாத்தக்குடி, கல்வாச நாட்டுச் சமீன்தார்களுக்குக் கட்டுப் பட்டது. இளையாத்தக்குடிச் சிவன் கோயில் அவர்கள் கட்டியது. கல்வாச நாட்டுச் சமீன், இளையாத்தக்குடி சமீனிலிருந்து வேறானது.

இப்பிள்ளைத்தமிழ், இளையாத்தக் குடியில் வாழ்ந்த தலைவனைப் பாடுவதால்,'இளையாத்தக்குடிச் சிவ பெருமானும் அம்மையும் பாட்டுடைத் தலைவனைக் காக்க' என்றுரைக்கின்றது.

"நிதிகொண்ட மலையரயனருள்கின்ற மகமாயி நித்தியகலியாணி வாமி
*நிமலிதிரி புரைகெவுரி புவனவுயிர் தழைக்கவருள்*
*நியமிக்கு முமையாகராம்*
*கதிகொண்ட சரணர்சபை நடனேசர் மதிகொன்றை*
*கங்கையணி சடிலராதி*
*கயிலாச நாதர்பர மேசர்சரு வேசரிரு*
*கமலப் பதம்பணிகுவாம்"*

என்று நித்திய கலியாணி சமேத கயிலாசநாதரைக் குறிக்கின்றார், குழந்தைக் கவிராயர். இப்பாட்டில் 'இங்கிலீசுத் / திட்டப்படிக் கர்நாடகஞ் செய்தீரா' (585:4) என்று பகுதி நோக்கத்தக்கது.

நாட்டுக் கோட்டை நகரத்தார்கள் கொண்டாடும் கீரணிப் பட்டி முத்துமாரியம்மன் இளையாத்தக்குடிக் கோயிலுக்குள் கட்டுப்பட்டது. இளையாத்தக் குடிச் சிவன் கோயிலுக்கு வடக்கே அமைந்து பரிவார தேவதையாகக் கீரணியம்மன் திகழுகின்றாள். இவ்வூர்த் தேரோட்டத்தில், இளையாத்தக்குடி அய்யா தலைமையில் கல்வாசல் நாட்டார் வந்தே தேர் வடம் பிடிப்பர். ஆதலின் இந்தப் பிள்ளைத் தமிழில் கீரணிப் பட்டி முத்து மாரியம்மனைப் பற்றி நிறையக்குறிப்பிருக்கிறது.

*"விமலிஅங் காளி கிரணிமுத்து மாரியுமை*
*விண்ணவரெலாம் காக்கவே"*

(பாட்டு 563 : 2)

இன்னொரு பாட்டில், "கீரணி யாள் மகமாயியை நாடமுகேச மனோ நேயா" (பாட்டு 568 : 2) என்றும்

*"பெண் சேர்ந்து மெய்யில் பிறங்குகயி லாசாரம்*
*பெம்மான் தருங்கிருபையால்*
*பிறை நுதல் செல்விகீ ரணி முத்து மாரியருள்*
*பெற்றுவளர் கின்ற பரிசால்"*

(568:2; 589:4)

என்றும் கீரணிப் பட்டி முத்து மாரியம்மனைப் புலவர் பாடி மகிழ்கின்றார்.

நியம நகர்

வாச்சமாகாளி ஆட்சிபுரியுமிடம் 'நியமை நகர்' (561:3) ஆகும். இதுவும் ஒன்பது நகரக் கோயில் உள்ள ஊரில் ஒன்றாகும். இப்புலவர்

*"நதி கொண்ட கலைவாச நாடி காசை (னா)*
*நாடுவிளை*
*நடுநியமை நாடாளு மால்"*

(562:4)

என்று காப்புப் பருவத்திலும்,

*"நல னோங்கு கோனாடு கானாடு கல்வாச*
*நாடு பூங் குன்றை நாடு*
*நானாடு காவல் கொண்டிளசையம் பதியிலே*
*ரவிமதியமுள்ள மட்டும்*
*வெலனோங்கு வெகு கோடி நலமுறை விளங்கவே*
*பெருமை யரசாட்சி புரியும்*
*பேராளி சீராளி போராளி சேனைப்*
*பெருக்காளி......."*

(576: 1 - 2)

என்று முத்தப் பருவத்திலும் உரைக்கின்றார்.

காப்புப் பருவத்தில், முதற் கண் இளையாத்தக்குடி 'நித்திய கலியாணி - கயிலாச நாதரைக் காக்க' என்று பாடியவர், அதற்கடுத்த பாட்டுக்கு அடுத்த பாட்டில் நேமநகர் சவுந்தரநாயகி சமேத செய கொண்ட சோழீரைப் பாடுகின்றார்.

*"விரையார் பிரசநதி பாய*
*விளையுங் கழனி சூழ் நியமம்*
*விளங்கும் னகர் லயத்திலுறை*
*விமலர் செயங்கொண் டீசர்பங்கின்*
*உரையார் துணைவி யென வளரும்*
*உமையா கிய பெண் சவுந்தர மான்*
*உம்பர் பரவ வரிதன*
*உபைய சரண மலர் காப்பாகும்.*

(564: 1 - 2)

நகரத்தார்கள் தொடர்புடைய ஒன்பது கோயில்களில் ஆதியான இளையாத்தக் குடியையும் இளையாத்தக் குடிக் கடவுளரையும் நேமம் கோயில் இறைவன் இறைவியரையும் இந்த நூல் குறிக்கின்றது.

### நகரத்தார் வரலாற்றுக்குறிப்பு

*இப்பிள்ளைத்தமிழின் சிறு தேர்ப்பருவத்தில்*
*"கும்புற்ற காவிரிப் பூம்பட்டி னத்தில் நல்*
*குடியென்று மாற னந்நாள்*
*கூட்டவுந் திருவன்நிக ருந்தனம றியாதங்*
*குறித்து நூல் தனிலு கந்தே*
*தெம்புற்ற தருமவானன் றுதவி னார் அதில்*
*சிறுதேர் நடத்தியருளே"*

(590 : 3 - 4)

என்ற குறிப்புப் பயிலுகின்றது. நகரத்தார்களைக் காவிரிப் பூம்பட்டினத்திலிருந்து நல்ல குடி என்று பாண்டிய மன்னன் பண்டு அழைத்துவந்தான். அவரோ செல்வத்தில் குபேரனை (திருவன்) ஒத்தவர்கள். (சில தொடர்களுக்குப் பொருள் புலப்பட வில்லை) அவர்களோ வளமான கொடைஞர்கள்; அவர்கள் பாட்டுடைத் தலைவனுக்குக் கொடையாகத் தேரை அன்பளித்துள்ளனர். அதில் அவனை ஏறிவருமாறு ஆசிரியர் பாடுகின்றார்.

### பாண்டிநாட்டாசான்

நகரத்தார்களைக் காத்து வளர்க்கின்ற நல்லோர் 'பாண்டிய நாட்டாசான்' எனப் பெறுவர். இவர்களுக்குரிய தலைமையிடம் 'கொடுங்குன்றம்'. பாண்டிய நாட்டாசான் பற்றிய குறிப்பு இப்பிள்ளைத் தமிழில் காணப்படுகின்றது.

*"கொள்ளரிய தேவரைப் பாண்டிநா டோங்கும்*
*குருக்களைத் தாய் தந்தையைக்*
*குணவன்னியானந்தரைப் பணிவை யார்முனும்*
*குவியாத மகுடவேந்தே"*

(589:1)

என்ற பகுதி இப்பிள்ளைத்தமிழ் நகரத்தார் வரலாற்றுக்குதவும் சிறு குறிப்புகளைத் தன்னகத்தே கொண்டுள்ளது.

## 3. வேலங்குடி கறுப்பண்ணசாமி சதகம் (கி. பி. 1842)

சுண்டைக்காடு வேலங்குடி என்று சொல்லப்பெறும் வேலங்குடி நகரத்தார்கள் வாழ்ந்த ஊர்களில் ஒன்று என்பர். இந்த வேலங்குடியிலுள்ள சிவன் கோயில், வரலாற்றுச் சிறப்பு மிக்கது. வேலங்குடியில், நகரத்தார்கள் யாரும் இப்போது குடியிருக்கவில்லை. இவ்வூரிலுள்ள கருப்பர், நகரத்தார்களின் குலதெய்வமாகத் திகழ்கின்றார். மாத்தூர்க் கண்ணூருடையார் கோயில் பிரிவில் ஒரு பகுதியினர் வயிரவன் பட்டி மக்கமடை அய்யனாரைக் குலதெய்வமாகக் கொண்டாடுவதுடன் வேலங்குடிக் கருப்பரையும் கொண்டாடுகின்றனர். வேலங்குடிக் கருப்பண்ண சுவாமியைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு அமைந்த நூலே, வேலாபுரி கறுப்பண்ணசாமி சதகம்.

## நூலாசிரியர்

இந்நூலைப் பாடியவர், மிதிலைப்பட்டிக் கவிராயர் மரபினரைச் சார்ந்த வாலகவி இராமசாமிக் கவிராயர். 'மற்புயா சலன் ராமசாமி சொல் செந்தமிழின் மாலை' (36:4) என்றும் 'வரும் வால கவிராமசாமி சதகத் தமிழின் மாலை புனை புயசயிலனே' (73:4) என்றும் 'வசைநிதி மல்லைவரு கவிராசனமிர்தகவி மாலையணி புயாசலனே' (98:4) என்றும் இவர் தன்னைப் பற்றிப் பேசுகின்றார்.

## நகரத்தார்பற்றிய குறிப்பு

செட்டிநாட்டுப் பகுதியில் வாழ்ந்து செட்டி நாட்டுத் தெய்வமான வேலங்குடிக் கருப்பண்ண சாமியைப் பாடிய ஆசிரியர், செட்டியார்களைப் பற்றிச் சில குறிப்புகளை இச்சதகத்தில் அமைத்திருக்கிறார்.

நூலின் தொடக்கத்தில் நால்வகைச் சாதியாரின் இயல்பை நான்கு பாடல்களில் ஆசிரியர் பேசுகிறார். அந்த வரிசையில் மூன்றாவது பாடல், வணிகரியல்பை உரைக்கின்றது. வணிகர்கள் எல்லா இடங்களிலும் விளைகின்ற பொருள்களைக் கட்டிவைத்து வருமானம் வருகின்ற வேளையில் அவற்றை விற்பர்; உடலிலுள்ள உயிரைப் போலப் பொருளைக் காப்பர். மெய்யே பேசுவோர்க்கு வேண்டியவற்றையெல்லாம் அளவில்லாமல் கொடுப்பர்; மிக்க செல்வத்துடன் கள்ளப்புரட்டருடன் கொடுக்கல் வாங்கல் செய்ய மாட்டார்கள்; நாள்தோறும் தொழிலை வளர்க்கின்ற இனிய நிருவாகத் திறமுடையவர்களுக்கு வேண்டிய தொகையைக் கொடுப்பார்கள்; ஆதாயத்துக்கு மிகுதியாகச் செலவு செய்யமாட்டார்கள்; சிறிய தொகையைக் கூடக் கணக்கில் விடமாட்டார்கள். இவையெல்லாம் மடலிலகு வாணிபம் செய்திடும் தனவசியர்க் (தனைவசியர்) குரிய பண்புகளாம். இக்கருத்தை விளக்கும் பாட்டு:

*"கடல் நாடு நகரின் மலை காட்டிலுறு திரவியங்*
*காலமது கண்டு கொள்வார்*
*கட்டிவைத் ததிலாபம் வருகின்ற வேளையிற்*
*கண்டுளை மகிழ்ந்து விற்பார்*

*உடலுயி ரெனப் பொருளையுங் காப்பர்; வாய்மையுடை*
*யோர்களுக் களவிலாமல்*
*உதவுவார்; வேணநிதி கள்ளப் புரட்டர்தம்*
*ஊர்வழி தனிற் சென்றிடார்;*
*அடல்சுகிர்த பரிபாலனத்தினிற் காணிமுத*
*லாய்க் கோடி தான் கொடுப்பார்;*
*ஆதாய மதைமிஞ்சு செலவுஞ் செயார்; தொகையில்*
*அணுவளவு பிசகவும் விடார்;*
*மடலிலகு வாணிபம் செய்திடுந் தனை*
*வசியர் மரபுக் கடுத்த தன்றோ;*
*மணிமொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்*
*வளர்கருப்ப ணசாமியே".*

(வே. க. ச. 5)

இந்த ஒரு பாடலில் நகரத்தார்களின் நல்லியல்புகளை இராமசாமிப்புலவர் எடுத்துரைக்கின்றனார்.

### 4. காளையார் கோயில் உருத்திரதீர்த்த மான்மியக் கும்மி

காளையார் கோயில் என்று இன்று அழைக்கப் பெறும் காளையார் கோயில், தேவாரம் பெற்ற திருத்தலமாகும். இங்குள்ள உருத்திரத்தீர்த்தம் சிறப்புடைய தீர்த்தம். இத்தீர்த்தச் சிறப்பை விளக்கிப் பாடும் சிறு நூல், 'உருத்திரதீர்த்த மான்மியக் கும்மி'. இந்நூலை இயற்றியவர் வீர. சிவ. வெ. நமச்சிவாயத்தேவன். இவர் சிவகங்கைச் சமஸ்தானம் காளையார் கோயிலைச் சேர்ந்த மேலப் பொன்னாலாங் கோட்டையில் வாழ்ந்தவர். இந்நூலாசிரியரின் தந்தையார் வெள்ளச்சாமி. இதனை நூலாசிரியரே

*"பூலோகத் தாரெல்லாம் போற்று கின்றகூடல்*
*புண்ணிய க்ஷேத்திர மதைச் சேர்ந்த*
*மேலப் பொன்னாலங் கோட்டையூராமதில்*
*விளம்புகின்ற செம்பிநாட்டுடையான்*
*மறவர் வீரணன் மைந்தன் சிவஞான*
*மைந்தன் வெள்ளைச்சாமி சந்ததியாய்*
*சிறியன் நமசிவாய னென்போன் தமிழ்*
*செப்பி னான். கும்மி யிருநூறே"*

(20 -21)

என்று தன்னைப் பற்றிய வரலாறுகளை எடுத்துரைக்கின்றார்.

இந்நூல் வெளிவருதற்குப் பொருளுதவியவர் தேவகோட்டை கும. அரு. சுப்பிரமணியன் செட்டியார் மகன் வினைதீர்த்தான் செட்டியார். இந்நூல் கொழும்பிலேயே பாடப்பட்டுக் கொழும்பு ஜோ. பா. ப. தேவராயபிள்ளையின் வித்தியாங்கூற சாலையில் பதிப்பிக்கப் பட்டது. பதிப்பான ஆண்டு விகாரி வருஷம், சித்திரை மாதம். நூல் வெளிவந்த ஆண்டைக்கும்மி,

*" நாலாயுகத்தினி லையாயிறமாண்டில்*
*நாலிரண்டிரண்டு திங்கள் பூசம்*
*சீலமுளகும் பலக்கினத்திலிதை*
*செப்பினே னீதோர் கதையாக" (22)*

என்று இயம்புகின்றார். இந்நூல் கொழும்பில் பாடப்பட்டுக் கொழும்பிலேயே அச்சிடப்பட்டிருப்பதால், நூலாசிரியர் கொழும்பில் வாழ்ந்தவர் போலும். இவர் நூலின் முதற்கண்

*"சீருள மாதம்பை மாநகரில் வளர்*
*செல்வ விநாயகர் காப்பாமே" (2)*

என்று மாதம்பைச் செல்வ விநாயகருக்கு வணக்கம் கூறி நூலைத் தொடங்குகிறார்.

உருத்ததீர்த்த மான்மியம் வடமொழியில் இருந்ததாகவும் அதைத் தமிழ்ப் படுத்த தனவைசியர் துணை நின்ற தாகவும் ஆசிரியர் பேசுகின்றார் (கும்மி 11) தன்னுடைய நூலை வெளியிடத்துணை நின்ற புரவலரை ஆசிரியர்,

*"கார்கள் தவழ்ந்திடும் ஊருடையானென்*
*கலியை யகற்றிடும் பேருடையான்*
*பாருளோருக் கெலாம் குணமுடையான் - வெகு*
*பாக்கியம் பெற்ற பவுசுடையான்*
*சுந்தரமே புனை தேவி கோட்டை வளர்*
*சோமருணாசல மாதவத்தால்*
*வந்த ராம சாமி நாமன் வளர்ந்திட்ட (13-14)*
*மரபு ............. "*

என்று பாராட்டுகின்றார். நூலை ஆக்குவித்தோன் சிறப்பையும் அவன் ஊர்ப்பெருமையையும் நூலாசிரியர் பாடுகின்றார். மழை தவறாது பெய்யும் ஊருடையான் என்றும் வறுமையைப் போக்கி வளம் தருபவன் என்றும் உலகத்திலுற்ற அனைவோர்க்கும் பொருந்திய குணமுடையவன் என்றும் எல்லா விதமான செல்வமும் பெற்ற பவிசுடையவன் என்றும் அவனுடைய சிறப்பையெல்லாம் எடுத்தியம்புகின்றான். நகரத்தார்கள் பல்வேறு நூல் வெளியிடுதற்கு நிதி உதவி செய்திருக்கிறார்கள். அதுபோல உருத்திர தீர்த்தச் சருக் கத்தைத் தமிழி லாக்கிய தன்மையை அவர் சிறப்பாகப் பாடுகிறார்.

*"காதல் கொண்டிக் காலத்தில் சரித்திரமாகச் செய்த*
*காருண்ய வைசிய குலத் தோர்க்கும் ... (மங்)*

என்று மங்களம் சொல்லி நகரத்தாரைக் காருண்ய வைசியர் என்று போற்றுகிறார்.

## நகரத்தார் வரலாறு

தொடர்ந்து ஆசிரியர் நகரத்தார்களின் ஒன்பது கோயில்களையும் சுட்டி ஒன்பது கோயில் நகரத்தாரும் ஒருங்கு கூடியதையும் உரைக்கின்றார்.

*"வாசஸ்தானமாம் இளையாற்றங்குடி*
*வைரவன் கோவில் மாத்தூரிரணி*
*நேசமிகுந்திட்ட பிள்ளையார் பட்டியார்*
*நேமமிலுப்பைக் குடியூரார்*
*சூரக்குடியுடன் வேலங்குடியிதில்*
*சொல்லிய ஒன்பது கோவிலாரும்*
*நீறணிசச்சி சதானந்த மூர்த்தியாம்*
*நிற்மலனெனும் முனீஸ்பரனை*
*நிதமும் நெஞ்சில் மறவாமலொரு*
*நேரந்தவறாமலே பணி வோர்க்*
*கதியழித்து பதவு கொடுத்திடுங்*
*காரணியம்மாள் வடிவழகி*
*சன்னதி தன்னிலே வைசியர் கூடிடும்*
*சங்கம் பொருந்துஞ் சமூகத்தின் முன்*
*சொன்ன கவிதனை யானரங்கேற்றதில்"*

(15-18)

என்று விரித்துப் பேசுகின்றார். இப்பகுதியால் நகரத்தார்களிடையே ஒன்பது

கோவில் பிரிவு இருந்தமை, நகரத்தார்களின் ஆதி வாசஸ்தானம் இளையாற்றங் குடியாக இருந்தமை ஆகிய உண்மைகள் வெளிப்படுகின்றன.

நகரத்தார்கள் சிவ மதத்தைச் சேர்ந்தவர்களானாலும் அவர்கள் சிறு தெய்வ வழிபாட்டில் மிகுந்த ஆர்வமுள்ளவர்கள். இக்கும்மியில் அவர்களுடைய முனிவரன் வழிபாட்டை ஆசிரியர் சுட்டிக் காட்டுகிறார். வைசியர் (நகரத்தார்) கள் கூடிய அம்மன் கோயில் அவையில், இக்கும்மி அரங்கேறியது.

கும்மியின் பாடு பொருள், உருத்திர தீர்த்தமே யாயினும் ஆசிரியர் இடையிடையே நகரத்தார்கள் பற்றிய சிறப்புகளையும் பெருமைகளையும் எடுத்துரைக்கின்றார். கும்மியில் "தீதிலா வைசியர் வாணிபமும்" (40:3) என்று அவர்கள் பண்பைக் காட்டும் வண்ணம் அடைபெய்திருக்கின்றார்.

காளையார் கோயிலில் மருது பாண்டியர்கள் நிலையாகப் பல்வேறு அறங்களைச் செய்திருக்கிறார்கள். அதனைச் சொல்ல வந்த இந்நூல் நகரத்தார் தருமத்தை, உவமை கூறுகின்றது.

*"நன்நாட்டுக் கோட்டை நகரத்தார் செய்திடும்*
*நல்லதருமம் நிலைப்பது போல்*
*முன்னாளில் மருதுபாண்டியனால் கட்டி*
*முடித்த கோபுரந்தானிதுவே"*

(46)

நாட்டுக் கோட்டை நகரத்தாருக்கு 'நல்'என்று அடைமொழி கொடுத்து அவர்கள் செய்யும் அறம் நிலையானது என்று காட்டி உணரவைக்கிறார்.

நகரத்தார்கள் பல தருமங்கள் செய்தலையும் இவர் கும்மியுள் கூறுகின்றார்.

*"மங்காத தான தருமங்களாகவே*
*வளர்த்திய அற்புதம் பாரடியே"*

(196: 3 - 4)

*"சொந்த மடங்களும் நந்த வனங்களும்*
*சோபன பாடக சாலைகளும்*
*சுந்தரந் தோன்றி விளங்கும் மகிமையால்*
*சொல்லுவோம் வாருங்கள் வாழ்த்துதி"*

(197)

என்று நகரத்தார்களின் பல்வேறு அறங்களைப் பேசுகிறார், ஆசிரியர்,

நூலாசிரியர், நகரத்தார்களுடன் நன்கு கலந்து பழகியவர் என்று தெரிகின்றது. நகரத்தார்கள் கடற்சங்கை வாங்கி அதனை வெள்ளியால் கவசமிட்டு வனப் பூட்டியிருப்பர்; எல்லா விசேட நிகழ்ச்சியிலும் இந்தச் சங்கையே ஊதிமுழக்குவர். இதனைக் கண்ட ஆசிரியர்

*"சங்கையும் சிங்காரமாகவே செய்திடும்*
*சத்திய வாக்கிய வைசியரால்"*

(196 : 1 - 2)

என்று பாடுவார்; சங்கழகைச் சொன்ன ஆசிரியர் நகரத்தார்களின் நாணயத்தையும் சேர்த்துச் சொன்னார்.

இக்கும்மி, நேரடியாக நகரத்தார் வரலாற்றைப் பாடவில்லை என்றாலும் நகரத்தார்கள் வரலாறும் பண்பாடும் பற்றிச் சில செய்திகளைச் செப்புகிறது. அவையாவன:

1. தேவகோட்டையைத் தேவி கோட்டை என்ற வழக்கு

2. நகரத்தார் களுக்குப் பல்வேறு அடைகள் கொடுத்தல்

'காருண்ய வைசிய குலம்'
'தீதிலா வைசியர்குலம்'

3. நகரத்தார்களிடையேயுள்ள ஒன்பது கோயில் பிரிவு.

4. இளையாற்றக்குடி-வாசஸ்தலம்.

5. ஒன்பது கோயிலாரும் முனீசுவரனை வணங்குதல்.

6. நகரத்தார்கள் நிலையாகச் செய்யும் தருமத்தை மருது பாண்டியர் செய்த தருமத்துக்கு உவமை கூறியமை.

## வயிரவன் கோயில் வடிவுடையம்மை பிள்ளைத்தமிழ்

தருமபுராதீனத்து மகா வித்துவான் சேந்தங்குடி வி. நடராச கவிராயர் பாடியது வயிரவன் கோயில் வடிவுடையம்மை பிள்ளைத்தமிழ். இந்நூல் வெளியான ஆண்டு கி. பி. 1894.

இன்று 'வயிரவன் பட்டி' என்று வழங்கும் ஊரை, நடராச கவிராயர் 'வடுகபுரி' 'வடுகநாதபுரம், 'வயிரவன் கோயில்' என்று நூலில் நவிலுகின்றார். நகரத்தார்களுக் குரிய ஒன்பது நகரக் கோயிலில், இந்த வயிரவன் கோயிலும் ஒன்றாகும். வயிரவன் கோயில் வடிவுடையம்மை பிள்ளைத்தமிழில், தாலப்பருவத்தில் தான் முதன் முதல் ஆசிரியர் நகரத்தார்களைத் தொடர்புபடுத்திப் பாடுகிறார். அந்த ஒரடி, தாலப்பருவத்தின் பின்னைந்து பாடல்களின் ஈற்றடியாய்-மகுடமாய்க்-காணப்படுகிறது.

*"தனிகர்கள் பரவிய வயிரவ பதியினள்*
*தாலோ தாலே லோ" (6:4)*

என்பது தான் அந்த அடி. சப்பாணிப் பருவத்தின் நான்காவது பாட்டில் ஆசிரியர்,"......... பட்டினத்தடிகளி

*னிவப்புறு குலத் தொர்வணி கன்பொதி யெருத்திற்*
*குநிலனட்ட பட்ட முளையை*
*நிலைபெயர்ப் பரிதாத் தளிர்ப்பித்த வளரொளியு*
*னீங்காது நிலவு மொளியே"* (4: 2 - 3)

என்று பாடுகிறார். நகரத்தார்கள் மரபில் பிறந்தவர் பட்டினத்தடிகள்: வணிகன் பொதி எருத்திற்கு நிலன் நட்டபட்ட முளையைத் தளிர்க்கச் செய்தவர் வளரொளியீசர் என்று சிவபெருமான் பெருமையைப் பேசுகி;றது.

முத்தப்பருவத்தில் 'வடுகபுரத்தாய்; தேசிக தெய்வமே' (8:4) என்பர், ஆசிரியர். வணிகர்களை 'நானாதேசி' என்பர்; அதனையே இவர் தேசிக தெய்வமே என்றார்;தேசிகர் என்ற சொல்லுக்கு வணிகர் என்று பொருள்; வணிகர்களாகிய நகரத்தார்கள் கொண்டாடுவதால், வடிவுடையம்மையைத் 'தேசிக தெய்வமே' என்றார்.

வருகைப்பருவத்தின் முதல் பாடலில் வடிவுடைய அம்மையைப் பலரும் பணிகின்றனர். அதனைச் சொல்லும் ஆசிரியர்,

*"அற்புதப் பாமாலை யேழகத் திருவணிக*
*ரன்பின ரணிந்து பரவ*
*வரமகளிர் சசிவாணி கமலையா தியரவ்*
*வவர்க்குரிப் பணிகள் புரிய*
*வற்புறு கருங்கற் பெருங்கோயில் வடுகபுர*
*மருவுசிற் பரைவ ருகவே"* (1: 3 - 4)

என்பர். வயிரவன் கோயில் நகரத்தார்களின் மெய்ப்பெயர்-தொன்மைப் பெயர்-'ஏழகப் பெருந்தெரு' என்பதாகும். இது ஏழகப் பெருந்திரு என்று மாற்றம் பெற்றது. வடிவுடையம்மை வயிரவன் கோயில் நகரத்தார் எல்லாம் பணிகின்றனர் என்று ஆசிரியர் பேசுகின்றார்.

வருகைப்பருவத்தின் ஐந்தாம்பாடலில், நகரத்தார் திருமண இசைவு பிடிமானத்தில் எழுதுமாறு தொடர்களை ஆசிரியர் அமைத்துப்பாடியிருக்கிறார்.

*"வென்றியுன்ன பூங்குழற் செல்வியே புகழ்குலாம்*
*வீரபாண்டி யபுரத்தின்*
*மேதகப் பொலியே ழகப்பெருந் திருவணிகர்*
*வேண்டுபணி முழுது ஞற்றி*
*மன்றவனு தினமும் பராய் நிற்ப வடுகபுர*
*மருவு சிற் பரைவ ருகவே"* (5 : 3 - 4)

என்று பாடுகின்றார். மேற்காட்டிய இரண்டு பாடல் குறிப்பிலும் திருக் கோயிலைக் கல் திருப்பணியாகச் செய்த குறிப்புக் காணப்படுகிறது.

வயிரவன் கோயில் வடிவுடையம்மை பிள்ளைத் தமிழ் இயற்றிய காலத்தில் கோயில் நன்கு கற்கோயிலாகத் திருப்பணி செய்யப்பட்டுவிட்டது. வயிரவன்பட்டி, வடுகபுரி, ஏழகப்பெருந் திரு(தெரு) என்று இவ்வூர் பெயர் பெற்றது. இது வீரபாண்டியபுரத்தைச் சார்ந்தது. பட்டினத்தடிகளார், வணிகர் குலத்தைச் சார்ந்தவர். இப்பிள்ளைத் தமிழில் நாட்டுக்கோட்டை நகரத்தார், தன வணிகர், ஐந்நூற்றுவர், இளையாத்தக்குடி நகரத்தார் என்பன போன்ற சொல்லாட்சிகள் இல்லை. 'தனிகர்' (6:4) என்றே இவர் நகரத்தார்களைப் புனைகின்றார்.

வணிகனுடைய பொதி சுமந்த எருதிற்காக நிலத்தில் பட்ட முளையை வளரொளியீசர் தளிர்க்கும் படி செய்தார். (சப்பாணி 4: 2 - 3) இவ்வரலாறு எங்கு எப்போது நடைபெற்றது என்பது தெரியவில்லை.

இவ்விலக்கியக்குறிப்புகளால் நகரத்தார் பற்றிய குறிப்புகளாகக்கிட்டுவன:-

1. காவிரிப்பூம்பட்டினத்தில் இருந்து இவர்கள் பாண்டியன் அழைக்கப்பாண்டி நாடு வந்தமை.

2. இளையாத்தக்குடி, அருவியூர், சுந்தரம் ஆகிய இடங்களில் குடியேறியமை

3. 'ஐஞ்நூற்று வாழ் ஏழுமாநகரார்'

4. சீரகப் பூந்தார், சிங்கக் கொடியுடைமை.

5. இளசை, நேமம் இறைவன் இறைவி பெயர்கள்.

6. பாண்டிநாட்டாசான் பாதம் பணிவோர்.

7. நகரத்தார் ஒன்பது கோயில் பிரிவு.

# 3. பழநி அறப்பட்டயங்களால் அறியப் பெறும் நகரத்தார் கோயில் பிரிவுகள்

'நகரத்தார் அறப்பட்டயங்கள்' என்ற தொகுப்புப் பட்டயங்கள் எழுதப்பட்ட காலம் கி.பி. 1627-1805. இவற்றில் நகரக் கோயில்கள் 'ஏழு' என்றே கூறப்பட்டுள்ளது. இப்பட்டயங்களில் இரணிக்கோயில் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. ஆனால் பிள்ளையார்பட்டிக் கோயில் என்ற பிரிவு சுட்டப்பட்டிலது. ஏழு கோயில்களுள் ஒன்றான வேலங்குடிக் கோயில் பற்றியும் குறிப்பின்மை நோக்கத்தக்கது. இப்பட்டயங்களின் காலத்தில் (1627-1805) இளையாத்தக்குடியிலிருந்து இரணியூர் தனிப்பிரிவாகி விட்டதை உணரமுடிகின்றது; பிள்ளையார்பட்டி தனியே பிரிந்திலது.

இன்றுநகரத்தார்களிடையே ஒன்பது கோயில் பிரிவுகளும் அவற்றில் இருபத்து மூன்று உட்பிரிவுகளும் விளங்குகின்றன. இளையாத்தக்குடி-7; மாத்தூர் -7; வயிரவன் கோயில் -3; இரணியூர் -1; பிள்ளையார்பட்டி -1; நேமம் -1; இலுப்பைக்குடி -1; சூரைக்குடி -1; வேலங்குடி -1; ஆக 23. பிரிவுகள் உள்ளன. இந்தப் பிரிவுகள் திருமணம், பிள்ளை கூட்டுதல் போன்ற சமுதாய உறவுக்கு இன்றியமையாதாய் அமைகின்றன. எனவே இவற்றைப் பார்ப்பனர்கள் வழங்குமாறு 'கோத்திரங்கள்' என்று கூறுகின்றனர். இந்தக் கோத்திரங்கள் இன்று இருபத்து மூன்றாகும்.

நகரத்தார் அறப்பட்டயங்களில் காலத்தால் (கி.பி. 1627) முற்பட்ட நிரம்பவழகிய தேசிகர் பட்டயம், நகரத்தார் கோத்திரங்கள் இருபத்திரண்டு (ப.109) என்று இயம்புகிறது. இவற்றில் வேலங்குடிக் கோயில், அதன் தொடர்புடைய தேசிகநாராயணபுரம், கழனி நல்லூர் ஆகியன சொல்லப்பட்டில. ஆனால் பட்டயத்தின் இறுதியில் வேலங்குடி இறைவன் கண்டீசுவரரும் இறைவி காமாட்சி அம்மையும் குறிக்கப்பட்டிருக்கின்றனர். இவை பட்டயமுடிவான வாழ்த்துப் பாடலுக்குப் பின் காணப்படுகின்றன. (வாழிப் பாடலுக்குப் பின் இருப்பதால் இது பிற்சேர்க்கையோ என்ற ஐயம் எழுகின்றது) எனவே பழநி அறப்பட்டயங்களில், வேலங்குடிக்கோயில் குறிக்கப்படவில்லை. (ப.32, 50, 68, 109). இப்பட்டயங்களில் இளையாத்தக்குடிக் கோயிலுக்குரிய ஒக்கூர், பெருமருதூர், கிங்கிணிக்கூர், பட்டணசாமியார் (அரும்பாற்கிளையார்), பேரசெந்தூர் ஆகிய ஐந்து பெயருடன் உள்ள பிரிவுகளே காணப்படுகின்றன. 'சிறு சேத்தூர்' என்ற பிரிவு உட்பிரிவுகளோடு எண்ணப்படாமல், 'இளையாத்தக்குடி சீரசேற்றூரில் சிறந்தருள் கல்வாசல் நாடு (ப.31, 50, 68, 109) என்று நாடுகளைக் குறிக்குமிடத்துக் கூறப்படுகிறது. இதையும் எண்ணினால்தான் இருபத்திரண்டு கோத்திரங்கள் வரும். எனவே அன்று சிறுசேத்தூர், இளையாத்தக்குடிக் கோயிலின் உட்பிரிவாகவே இருந்திருக்க வேண்டும்.

இளையாத்தக்குடிக் கோயிலின் இன்னொரு பிரிவான 'கழனிவாசற் குடியார்' என்ற பிரிவு பட்டயங்களில் சொல்லப்படவில்லை. இப்பிரிவுக்கு ஈடாகத்'திருவேட்பூருடையார்' என்ற பிரிவு ஏழாவது பிரிவாக இருந்திருக்க வேண்டும். இரணியூர் தனித்துப் போகப் பிள்ளையார்பட்டி மட்டும் 'திருவேட்பூருடையார்' என்ற பெயருடன்

இளையாத்தக்குடியில் இருந்திருக்கிறது. அதனால்தான்'கழனிவாசற்குடியார்' என்ற இளையாத்தக்குடிப் பிரிவு சொல்லப்படவில்லை. இரணிக்கோயிலும் பிள்ளையார்பட்டிக் கோயிலும் திருவேட்பூருடையார் என்று பிரிந்து போன பின்னர் 'கழனி வாசற் குடியார்' என்ற பிரிவு புதிதாக அமைக்கப்பட்டிருக்க வேண்டும்.

மாத்தூர்க் கோயிலிலுள்ள மண்ணூருடையான், உறையூருடையான், மணலூருடையான், குளத்தூருடையான், கண்ணூருடையான், அரும்பாக்கூருடையான், கருப்பூருடையான் என்ற ஏழு பிரிவுகளும் இந்தப் பட்டயங்களில் குறிக்கப்பட்டிருக்கின்றன. (ப 31, 50, 68, 109). உட்பிரிவுகளில் மாற்றமோ சேர்க்கையோ விடுதலோ இல்லை.

வயிரவன் கோயிலில் மூன்று உட்பிரிவுகள் உள்ளன. அவையாவன சிறுகுளத்தூருடையார், கழனிவாசலுடையார், மருதேந்திரபுரமுடையார் என்பன. இம்மூன்றில் கழனிவாசலுடையார், சிறுகுளத்தூருடையார் என்ற இரண்டும் உட்பிரிவுகளை எண்ணும் போது எண்ணப்படுகின்றன. 'யேழகப் பெருந்தெருவான சிறுகுளத்தூருடையான் என்றும் யேழகப் பெருந்தெருவான குளத்தூருடையான்' (ப.32) என்றும் எழுதப்பட்டிருக்கின்றன. குளத்தூர் என்ற பிரிவு மாத்தூரில் காணப்படுவதால், 'ஏழகப் பெருந்தெரு' என்ற அடையொடு குளத்தூர் வேறுபடுத்திக் காட்டப்பட்டிருக்கிறது.

வயிரவன் கோயில் பிரிவில் 'பிள்ளையார் வகுப்பு' என்று ஒன்று உள்ளது. கி.பி. 1805-இல் உள்ள அறப்பட்டயத்தில் 'பிள்ளையார் கோயில் வகுப்பு' (ப.96) சுட்டப்பட்டிருக்கிறது. சிறுகுளத்தூருடையார் வகுப்பில் ஓர் உட்பிரிவாகும்.

இலுப்பைக்குடிக் கோயிலின் உட்பிரிவைக் 'கேரளசிங்க வளநாடாகிய பிரம்பூர் நாட்டில் இலுப்பைக்குடியான புகலிடங்கொடுத்த பட்டணத்தில் சூடாமணிபுரமுடையார்' என்று எழுதுகின்றனர். இப்பிரிவைப் பட்டயங்கள் சுட்டுகின்றன. ஆனால் இன்று வழக்கிலுள்ள மரபுக்கும் பட்டயத்திலுள்ள மரபுக்கும் வேறுபாடு உளது. பட்டயங்களில் இலுப்பைக்குடிக் கோயில் உட்பிரிவினர் புகழிடங் கொடுத்த பட்டணமுடையார்' (ப. 39. 50, 68, 109) என்று கூறப்படுகின்றனர். பட்டயம் எழுதியோர் உட்பிரிவின் பெயராகச் சொன்ன பெயர் இன்று இல்லை. எனவே இடைக்காலத்தில் இவ்வாறு எழுதும் மரபு மாறியிருக்க வேண்டும்.

பழைய மரபு

'சூடாமணிபுரத்தில் புகழிடங் கொடுத்த பட்டணமுடையார்' இதுவே பட்டயங்களால் பெறப்படுவது. 'பிரம்பூர் நாட்டில் சூடாமணிபுரம்' (92) என்று வருவதும் மேலே கூறிய கருத்தை வலியுறுத்தும். இன்றோ 'புகழிடங் கொடுத்த பட்டணத்தில் சூடாமணிபுரமுடையார்' என்று முன்பின் மாற்றி எழுதுகின்றனர்.

இளையாத்தக்குடி, (இரணியூர், பிள்ளையார்பட்டி, நேமம்)- 'குலசேகரபுரம்' என்றும் எழுதுவர். அதை எழுதியபின்னர் உட்பிரிவை எழுதுவர். மாத்தூர், வயிரவன் கோயில் நகரத்தார்கள், வீரபாண்டியபுரம் என்று எழுதிப் பிரிவுப் பெயரை வரைவர். எல்லாக் கோயில்களிலும் 'புரம்' என்பது முன்வரப் (குலசேகரபுரம், வீரபாண்டியபுரம், தேசிகநாராயணபுரம்) பிரிவைக் கூறுவர். இன்று இலுப்பைக்குடியில் மட்டும் இந்த முறை மாறுபட்டிருக்கிறது. எனவே இலுப்பைக்குடிக் கோயிலிலும் இம்முறையே இருந்திருக்க வேண்டும். பின்னாளில் (1805) மாறியிருத்தல் கூடும்.

இந்த மாற்றத்துக்குக் காரணம் என்ன? இலுப்பைக்குடிப் பிரிவில் புகலிடம் கொடுத்த பட்டணம், சூடாமணிபுரம் என்ற இரண்டு தொடர்கள் இருக்கின்றன. பட்டணம், புரம் இரண்டில் பட்டணம் பெரிய ஊர்; புரம், சிற்றூர். எனவே புரம் என்பது பட்டணத்தில் ஒரு கூறாதல் வேண்டுமேயன்றிப் புரத்தில் 'பட்டணம்' ஒரு பகுதியாக முடியாது. எனவே தான் இலுப்பைக்குடி நகரத்தார் முறையை மாற்றி விட்டனர். இது கி.பி. 1805-க்குப்பின் ஏற்பட்ட மாற்றமாகும்.

இரணிக் கோயிலைப்பட்டயம் கோயில்களை எண்ணும்போது எண்ணவில்லை. ஏனெனில் 'திருவேட்பூருடையார்' என்ற பிரிவே இரணிக் கோயிலையும் பிள்ளையார் பட்டியையும் சுட்டும் பொதுப் பிரிவாகும். திருவேட்பூருடையார் என்பதைத்'திருவேட் பூருடையான்' (ப.32), 'திருவேள்ப்பூருடையார், திருவேட்பூருடையார்' என்று வெவ்வேறாக எழுதியிருக்கின்றனர். எனினும் இவை 'திருவேட்பூருடையார்' என்பதையே குறிக்கும். இரண்டு கோயில்களிலும் ஒரே உட்பிரிவு. எனவே வெவ்வேறு பெயர்களால் சுட்ட முடியவில்லை. பிள்ளையார் பட்டிக் கோயிலுக்குரிய இராசநாராயணப் பெருந்தெரு என்ற பெயர் இப்பட்டயங்களில் எழுதப்படவில்லை. பிள்ளையார்பட்டி என்ற கோயில் பிரிவும் இங்குச் சொல்லப்படவில்லை. பட் டயத்தில் 'இரணிக் கோயில் பெ. குட்டயனுக்கு (த்) தீர்த்தம்'(ப.59.70) என்ற சொற்றொடர் வருகின்றது. இத்தகைய குறிப்புகளான் இக்காலத்தில் இரணிக்கோயில் தனிப்பிரிவாக இருந்தமை அறியப்படும்.

நேமங்கோயிலில் ஒரேபிரிவுதான். அந்த உட்பிரிவுக்கு 'இளநலமுடையார்' என்று பெயர். இப்பெயரை 'இன்னலமுடையான்' (ப32) என்றும் 'இளநலமுடையான்' (ப.59) என்றும் பட்டயங்கள் பேசுகின்றன. பழநிக் கோயிலுக்குச் சென்று வரும் மரபைத் தொடங்கியவர்கள் 'இளையாத்த(க்) குடி ஏழு நகரத்தார்களில் நேமங் கோவில் சோளசிங்க வளநாட்டான் குலசேகரபுரத்தில் தேனாறு பாயும் இளநலமுடையான் குப்ப பிச்சஞ் செட்டி குமாரன் குமரப்பன் (ப.1) என்பவர் ஆவார். இதனால் இன்று திருமண முறிகளில் எழுதுமாறே பட்டயங்களில் எழுதப்பட் டிருத்தலைக் காண முடியும். 'கேரள என்பதே 'சோள என்று பதிப்பிக்கப் பட் டிருக்கிறது. க>ச வாகவும் ர>கா (துணை எழுத்தாகவும்) மாறியுள்ளன.

சூரைக்குடிக் கோயிலும் ஏழு நகரக் கோயில்களில் ஒன்றாகும். இதனைச்'சூரைக்குடியான தேசிக நாராயணபுரத்தில் புகழ் வேண்டிய பாக்கமுடையார்' என்று நகரத்தார்கள் எழுதுவர். தேசிக நாராயண புரம், புகழ் வேண்டியபாக்கம் என்ற இரண்டு தொடர்களும் அறப்பட்டயங்களில் காணப்பட்டில. ஆனால் 'சூரக்குடிக் கோவில் குமரப்ப செட்டி (ப.3: 1670)' என்று வருகின்றது. இதனை நோக்கச் சூரக்குடிக் கோயிலும் அக்காலத்தில் இருந்தமை அறியப்படும்.

நகரக் கோயில்கள் எழு பிரிவுகளில் ஒன்றான வேலங்குடிக் கோயிலையோ தேசிக நாராயணபுரத்தையோ கழனி நல்லூரையோ பட்டயம் குறிக்கவில்லை.

நகரக் கோயிலின் உட்பிரிவுகளைச் சொல்லி வரும்போது அறப்பட்டயம், இன்று நகரத்தார்களிடையே வழங்காத வேறு சில பெயர்களை - பிரிவுகளைச் - சொல்லுகின்றது. அவற்றுளொன்று 'பெரு குளத்தூருடையான்' (ப.32) என்பதாம். நகரத்தார் உட்பிரிவுகளில் மாத்தூர்ப் பிரிவில் 'குளத்தூருடையார்' என்றும் வயிரவன் கோயில் பிரிவில் 'சிறுகுளத்தூருடையார்' என்றும் குளத்தூர் என்ற

பெயர்த்தொடர்புடன் இரண்டு பெயர்கள் இருக்கின்றன. இவையன்றி வேறு 'குளத்தூர்' என்று முடியும் பெயரில்லை.

பட்டயங்களில் 'பெரு(ங்) குளத்தூருடையான்' என்ற பெயரில் ஒரு பிரிவுள்ளது. இச்சாசனத்தின் காலம் கி.பி 1680 (ப.32). கி.பி 1766-இல் எழுந்த சாசனத்தில் இப்பெயரில்லை (ப.50). பெரு(ங்)குளத்தூர், சிறுகுளத்தூர் என்பன தொடர்புடையன. பட்டயம் இரண்டையும் அடுத்தடுத்துச் சொல்லுகிறது. இது மாத்தூர்க் கோயிலின் உட்பிரிவாதல் வேண்டும். குளத்தூர் என்பதையே சிறுகுளத்தூர் என்ற பெயரை நோக்கிப் பெருங்குளத்தூர் என்று கொண்டிருக்கின்றனர்.

'திருவேட்பூருடையான்' என்ற பெயரைச் சொல்லுமாறு 'திருவப்பூருடையான்' (ப.32) 68 என்பதையும் அறப்பட்டயம் உரைக்கின்றது. திருவேட்பூரும் திருவப்பூரும் அருகருகே உள்ள ஊர்கள். திருவப்பூர் (Thiruvappur Chetti) செட்டி என்று ஒரு பிரிவினரை எட்கர்தர்ஸ்டன் குறிப்பர் (ப.90). இவர்களே வல்லத்துச் செட்டிகள் எனப்படுவர். திருவப்பூரில் வாழ்ந்த நகரத்தார்கள், தனியே பிரிந்து வல்லத்துச் செட்டிகள் ஆகியமையால், இப்பிரிவினர் பிற்காலத்தில் நாட்டுக் கோட்டை நகரத்தாரிலிருந்து தனிக் குழுவினராகிவிட்டனர். இப்பிரிவு கி.பி.1788-க்குப் பின் ஏற்பட்டிருக்க வேண்டும்.

### நாட்டுப் பிரிவுகள்

நாட்டுக் கோட்டை நகரத்தார்களின் திருக்கோயில்கள் விளங்கும் நாடுகளாகக் கோயில் பெயரோடு சிலவற்றைக் கூறுகின்றனர்.

அவையாவன

1. கல்வாசனாடு
2. பிரம்பூர் நாடு
3. பாலையூர் நாடு

இம்மூன்று நாடுகளும் சிறு பிரிவுகள். 'நாடு' என்பது வளநாட்டின் உட்பிரிவுகள். இக்காலத்தில் 'வட்டம்' என்று வழங்குவதற்கு இணையானது.

கல்வாசனாடு, செட்டிநாட்டுப் பகுதியின் சில ஊர்கள் அடங்கிய பகுதி. கீரணிப்பட்டி முத்துமாரியம்மன் கோயில் திருவிழாவில் கூடுவர். இஃது இளையாத்தக்குடிச் சமீனுக்குள் கட்டுப்பட்டது. முத்தூர், பில்லமங்கலம், நெய்வாசல், செண்பகம்பேட்டை, கல்லாப் பேட்டை முதலிய ஊர்கள் இந்நாட்டைச் சேர்ந்தவை. கல்வாசல் நாட்டுக் கணக்கு, நெய்வாசலில் இருந்தார். இளையாத்தக்குடி, இரணியூர் இரண்டும் கல்வாசல் நாட்டைச் சார்ந்தவை.

பட்டயங்களில் 'கல்வாசல் நாடாகிய குலசேகரபுரம்' (ப.32) 'கல்வாசல் நாடாகிய இளசை நகர்' (ப.31) 'இளையாத்தங்குடி சீர் சேற்றூரில் சிறந்தருள் கல்வாசல் நாடு' (ப.31) (ப.68) (ப.109) என்பன போன்ற தொடர்கள் பயில்கின்றன.

இலுப்பைக்குடி, சாக்கோட்டை முதலியன அடங்கிய பகுதி 'பிரம்பூர் நாடு' எனப்படும். இப்பகுதியில் 'பிரம்ப வயல்' என்ற சிற்றூரே உள்ளது. இதனால்'பிரம்பூர்' நாடு என்ற பெயர் ஏற்பட்டிருக்க வேண்டும். மாத்தூரும் இலுப்பைக்குடியும்

பிரம்பூர் நாட்டில் அடங்கியன. இன்று இந்நாட்டுப் பிரிவு இல்லை. பட்டயங்களில் 'பிரம்பூர் நாட்டில் வீரபாண்டியபுரம்' பிரம்பூர் நாட்டில் சூடாமணிபுரம்' (ப.32,50) (92,109) என்ற தொடர்கள் பயிலுகின்றன.

பாலையூர் நாடு, கண்டனூர், பாலையூர் கோட்டையூர் முதலிய ஊர்கள் அடங்கிய பகுதியாகும். கண்டனூருக்கு அடுத்துள்ள பாலையூரே இந்நாட்டுப் பெயருக்குக் காரணமாகும். 'வேலங்குடிக்கோயில்' பாலையூர் நாட்டில் அடங்கியது. நகரத்தார் அறப்பட்டயங்கள் ஒன்றிலும் 'பாலையூர் நாடு' பற்றிய குறிப்புக் கிடையாது.

இம்மூன்று நாட்டுப் பிரிவுகளில், கல்வாசல்நாடு, பாலையூர் நாடு என்ற பிரிவுகள் இன்றும் உள்ளன. 'பிரம்பூர் நாடு' என்ற பிரிவு வழக்கில் இல்லை. பட்டயங்களில் பாலையூர் நாடு குறிக்கப்பட்டிலது.

இவையன்றி வேறு சில நாடுகளும் பட்டயத்தில் சுட்டப்பட்டிருக்கின்றன. அவை யாவன நேமநாடு (ப.31) கானாடு (ப.31) ஒன்பது நாடு (ப.31) என்பன. நேமத்தைத் தலைமையாக உடையது நேமநாடு. நேமங்கோயில் இதற்குள் அடங்கியது. நகரத்தார்கள் நேமநாடு என்ற நாட்டுப் பிரிவை எழுதுவதில்லை.

சூரக்குடி இதை எழுதும்போதும் நகரத்தார்கள் 'நாட்டுப் பிரிவை' எழுதுவதில்லை. எல்லாவற்றிலும் வளநாட்டுப் பிரிவையே குறிப்பர்.

| கோயில் பெயர் | கேரளசிங்க வள நாடு | நாடு | பெருந்தெரு |
|---|---|---|---|
| 1. இளையாத்தக்குடி குலசேகரபுரம் | இல்லை | கல்வாசல் நாடு | ஏழகப் பெருந்தெரு |
| 2. மாத்தூர்க்கோயில் வீரபாண்டியபுரம் | உண்டு | பிரம்பூர்நாடு | |
| 3. வயிரவன் கோயில் வீரபாண்டியபுரம் | உண்டு | | |
| 4. இரணியூர் இராசநாராயணபுரம் | இல்லை | கல்வாசல் நாடு | |
| 5. பிள்ளையார்பட்டி இராசநாராயணபுரம் | இல்லை | கல்வாசல் நாடு | |
| 6. நேமம் குலசேகரபுரம் | | இல்லை | |
| 7. இலுப்பைக்குடி சூடாமணிபுரம் | உண்டு | பிரம்பூர் | |
| 8. சூரைக்குடி தேசிக நாராயணபுரம் | உண்டு | இல்லை | |
| 9. வேலங்குடி தேசிக நாராயணபுரம் | உண்டு | பாலையூர் | |

# 4 நகரத்தார்கள் வலசை

நாட்டுக் கோட்டை நகரத்தார்கள் தொண்ணூற்றாறு ஊர்களில் குடியாகத் தழைத்து வாழ்ந்தனர். காலப் போக்கில், பல ஊர்களில் இருந்தவர்கள் வெவ்வேறு ஊருக்குக் குடி பெயர்ந்து விட்டனர். பழைய காலத்தில் நகரத்தார் வாழ்ந்த தொண்ணூற்றாறு ஊர்களில் பல இன்னவை என்று தெரிந்தில. முற்காலத்தில் நகரத்தார்கள் இருந்த ஊர்களையும் அங்கிருந்து குடியேறிய ஊர்களையும் வயிநாகரம் அ. இராமநாதன் செட்டியார் தொகுத்த 'நாட்டுக் கோட்டை நகரத்தார் வரலாறு' என்ற நூலால் அறிய முடிகிறது.

## நகரக்கோயிலாரும் குடிப் பெயர்ச்சியும்

நகரத்தார்கள் வாழ்ந்த இளையாத்தக்குடி, ஒன்பது நகரக் கோயிலுள் ஒன்று உள்ள இடம். இதுவே இவர்களின் மிகப் பழைய குடியிருப்பு இடம் என்பர். இதனால் நாட்டுக் கோட்டை நகரத்தார் அனைவரையும் 'இளையாத்தக்குடி நகரத்தார்' என்று அழைக்கும் மரபுண்டு. ஆனால் இளையாத்தக்குடியில் நகரத்தார்யாரும் இன்று வாழ்ந்திலர். பாலகவி வே. இராமநாதன் செட்டியார் 'இளையாத்தக் குடியில் வாழ்ந்தவர்கள் கீழச்சிவல்பட்டியில் குடியேறினர்'1 என்று எழுதுவர். கீழச்சிவல்பட்டியிலுள்ள இரணிக் கோயில் புள்ளிகள், இளையாத்தக் குடியிலிருந்து கீழச்சிவல்படிக்கு வந்தவர்கள். நகரத்தார்கள் இங்கிருந்தே பிற ஊருக்குப் பரவினராதல் வேண்டும் என்ற கருத்தும் உண்டு.

பிள்ளையார்பட்டியில் அண்மைக் காலம் வரை பிள்ளையார்பட்டிக் கோயில் நகரத்தார் குடும்பங்கள் வாழ்ந்தன. கி.பி.1953 இல் இங்கு மூன்று புள்ளிகள் இருந்தன. இங்கிருந்தவர்கள் பின் பி.அழகாபுரிக்கு வந்துவிட்டனர். இப்போது நகரத்தார் குடும்பங்கள் இங்குக் கிடையாது.

ஸ்ரீ பெரியநாயகி உடனாய ஐந்நூற்றீசர் அருளாட்சி புரியும் மாத்தூரில் நேமங் கோயிலைச் சார்ந்தவர்கள் வாழ்ந்திருக்கின்றனர். 'அவர்கள் பெயரால் ஒரு ஊருணியும் பிள்ளையாரும் இன்றும் இருக்கின்றன.'2 கோயில் தொடர்புடையவர்கள் தான் அங்கு இருந்தனர் என்று இதனைக் கொண்டு கூறமுடியவில்லை; பிற கோயிலாரும் இங்கு இருந்திருக்கின்றனர்.

இலுப்பைக் குடியில், இக் கோயிலைச் சார்ந்த நகரத்தார் புள்ளிகள் குடியிருந்தன 'இக் கோயில் நகரத்தார், ஆதியில் இவ்வூரிற் குடியிருந்திருக்கின்றனர். அதன் அறிகுறியாக, தேவகோட்டை மெ. வகையார்ப் பொதுவில், அம்மன் சந்நிதித் திருக்குளமும் பிள்ளையார் கோயிலும் ரூபாய் இருபதினாயிரம் செலவில் கட்டியிருக்கின்றனர் 3. வயிரவன்பட்டியில் வாழ்ந்த நகரத்தார்கள், சிறுகூடல் பட்டியில் குடியேறினர்.

கீழச்சிவல்பட்டியில் 'சூரக்குடியார் வீடு' என்று ஒரு வீட்டாருக்குப் பெயருண்டு. இவர்கள் வாழும் பகுதியில், சூரைக்குடி நகரத்தார் வீடுகளே உண்டு; ஆயினும்'சூரைக்குடியா(ர்) வீடு' என்பது ஒரு குடும்பத்தாருக்கே வழங்குகிறது. இதனால் இவர்கள் சூரக்குடியிலிருந்து சிவல்பட்டி வந்திருக்க வேண்டும். அது போல நேமங் கோயிலில் வாழ்ந்த நகரத்தார்கள் காரைக்குடிக்குக் குடியேறி விட்டனர்.

இவற்றையெல்லாம் தொகுத்து நோக்கும் போது, ஒன்பது நகரக் கோயில் உள்ள ஊர்களில் இளையாத்தக்குடி, பிள்ளையார்பட்டி, மாத்தூர், இலுப்பைக்குடி, சூரக்குடி, வயிரவன்பட்டி, நேமம் ஆகிய ஏழு ஊர்களில் நகரத்தார்கள் குடியாக வாழ்ந்திருக்கிறார்கள் என்பது புலனாகும். மாத்தூரில் மட்டும் பிற கோயிலார் அக் கோயிலாருடன் வாழ்ந்திருக்கின்றனர். மற்ற ஆறு கோயில்களில் அந்த அந்தக் கோயிலாரே இருந்த குறிப்புத்தான் கிடைக்கின்றது.

ஒன்பது நகரக் கோயிலில் இரணிக்கோயில் பிற்காலத்தில் தனிப் பிரிவாக இளையாத்தக்குடியிலிருந்து வளர்ந்தது. இங்கு நகரத்தார்கள் வாழ்ந்தமைக்கான குறிப்புகள் கிடைக்கவில்லை. இப்போது வேலங்குடிக் கோயிலுள்ள இடம் புதியது; பழைய இடம் வேறு. இந்தப் பகுதியில் நகரத்தார்கள் இருந்து குடிபெயர்ந்திருக்க வேண்டும். ஒட்டு மொத்தமாக நோக்கும் போது, ஒன்பது நகரக் கோயில்கள் இருந்த ஊரில் நகரத்தார்கள் குடியிருந்து பின்னர் தான் வெவ்வேறு ஊர்களுக்குக் குடிபெயர்ந்தும் சென்றிருக்கின்றனர்.

## இருவகைப்போக்கு

பல்வேறு ஊர்களில் வாழ்ந்தவர்கள் செட்டிநாட்டுக்குள்ளேயே வெவ்வேறு ஊர்களுக்குக் குடிபெயர்ந்திருக்கின்றனர். இதனால் பல ஊர்களில் செட்டியார் குடும்பங்களே இல்லை; இவ்வாறு குடிபெயர்ந்தபோது புதிதாகக் காடுகளை விலைக்கு வாங்கி ஊரை உண்டாக்கியும் இருக்கின்றனர். பின்வரும் பகுதியில் நகரத்தார்கள் வாழ்ந்த ஊர்களிலிருந்து எந்த ஊருக்குக் குடியேறினர் என்பது விளக்கப்பட்டிருக்கிறது. இவ்வாறு ஊரை விட்டுப் போன போது நகரத்தார் குடும்பங்களே அந்த ஊர்களில் இல்லை.

நகரத்தார் இன்றும் வாழுகின்ற ஊர்களிலிருந்து சிலர் நகரத்தார் வாழும் வேற்றூருக்குச் சென்றிருக்கின்றனர். இராங்கியத்தில் வாழ்ந்த நகரத்தார் தேவகோட்டைக்குப் போயினர்; தேவகோட்டையில் அவருக்கு இராங்கியத்தார் வீடு என்று பட்டப் பெயர். இத்தகைய குடிப்பெயர்ச்சி இங்குப் பேசப்படவில்லை.

## தெற்கு வட்டகை

கீழச்சிவல்பட்டி-பி. அழகாபுரிக்கு அருகிலுள்ள ஊர் 'கல்லுவயல்'. இங்குள்ள கல்லுக் காட்டு ஐயனார் கோயில் நகரத்தார்கள் வழிபடும் குலதெய்வக் கோயில்களில் ஒன்றாகும். தொலையானூர் கண்டீசுவரமுடையார் கோயில் கல்வெட்டு, இவ்வூரைக்'கல்லகவயல்' என்று கூறும். கல்லுவயலில் குடியாக இருந்தவர்கள் தேவகோட்டைக்குக் குடி போயிருக்கிறார்கள். பிள்ளையார்பட்டிக் கோயிலாரான குருவிக்கொண்டான்பட்டி நகரத்தார்களும் இங்கு வாழ்ந்து பின்னரே குருவிக்கொண்டான்பட்டி என்ற ஊரை உண்டாக்கிக் குடியேறினர்.

கீழச்சிவல்பட்டிக்கு அருகிலுள்ள இன்னொரு ஊர் நெய்வாசல்; இவ்வூரின் பழைய பெயர் நெல்வாசல் என்பதாகும். இங்குள்ள சிவன் கோயில் இதன் பழமையை உணர்த்துகிறது. இவ்வூரிலுள்ள திட்டாணி அய்யனாரும் திட்டாணிக் கருப்பரும் மிகப் புகழ்பெற்ற தெய்வங்கள். வயிரவன் கோயில் நகரத்தார்களில் சிலருக்கு இத்தெய்வங்கள், குல தெய்வம். இவ்வூரிலுள்ள கல்வெட்டில் 'ஏழகத்தார்' என்பது ஏழகப் பெருந்தெரு என்பதேயாகும். இங்கு வாழ்ந்தவர்கள் விறாமதி, காரைக்குடி முதலிய ஊர்களுக்குக் குடிபோய் விட்டனர்4. விறாமதி பெரி.பழ.

குடும்பத்தாரை இன்றும் 'நெய் வாசலார்' வீடு என்று அழைப்பது நினைவுகூரத்தக்கது.

மாத்தூர்க் கோயில்-கண்ணூர்ப் பிரிவு நகரத்தார், இன்று கோனாபட்டில் வாழுகின்றனர். இவர்களுக்குக் 'குளத்துப் பட்டியார் வீடு' என்று பெயர். இவர்கள் குளத்துப் பட்டியில் இருந்து கோனாபட்டுக்கு வந்தவர்கள். குளத்துப்பட்டியிலிருந்து கோட்டையூருக்கும் வந்திருக்கின்றனர்.

இளையாத்தக்குடிக்குக் கட்டுப்பட்டது கீரணிப்பட்டி. இங்குக் கோயில் கொண்டு திருவருள் புரியும் கீரணிப்பட்டி முத்துமாரியம்மன், காவிரிப்பூம் பட்டினத்திலிருந்து நகரத்தார்களால் கொண்டு வரப்பட்ட அம்மை. கீரணிப்பட்டியில் வாழ்ந்த நகரத்தார்கள் கீழச்சிவல்பட்டிக்கும் காரைக்குடிக்கும் குடிவந்தனர்; சிலர் குருவிக் கொண்டான்பட்டிக்கும் வந்தனர். அவ்வீட்டாரைக் 'கீரணிப்பட்டியார் வீடு' என்ற பட்டப் பெயரால் இன்றும் அழைக்கின்றனர்.

'சீராத்தக்குடி' என்பது நெய்வாசலுக்கு அருகிலுள்ள ஊர்; இவ்வூரை நெய்வாசலிலுள்ள கல்வெட்டுகள் 'சீராத்தக்குடி நல்லூர்' என்று குறிக்கின்றன. பி. அழகாபுரியிலுள்ள வயிரவன் கோயிலைச் சார்ந்த குடும்பத்தார் 'சீராத்தக் குடியார் வீடு' என்று அழைக்கப் பெறுகின்றனர். இவர்கள் சீராத்தக்குடியிலிருந்து பி. அழகாபுரிக்கு வந்திருக்க வேண்டும். இது போலச் சீராத்தக்குடியில் வாழ்ந்தவர்கள் கோனாபட்டு, ஆத்தங்குடி ஆகிய ஊருக்கும் வலசை போயிருக்கின்றனர்.

இராங்கியத்திலிருந்து மூன்று கிலோ மீட்டர் தொலைவிலுள்ள ஊர் கண்ணனூர்; இங்குள்ள பாலசுப்பிரமணிய சுவாமி கோயில் உத்தம சோழன் கட்டியது; பழங்காலத்தில் இவ்வூரிலும் நகரத்தார் குடும்பங்கள் நிறைய வாழ்ந்தன. கீழச்சிவல்பட்டி அழகாபுரியில் 'கண்ணனூரார் வீடு' என்று ஒரு வீட்டார்க்குப் பெயருண்டு. விரையாச் சிலையிலும் ஒரு குடும்பத்தாருக்குக் 'கண்ணனூரார் வீடு' என்று பட்டப் பெயர் வழங்குகிறது. விரையாச் சிலையிலுள்ளவர்கள் இன்றும் கண்ணனூருக்கு மிக அருகேயுள்ள மேலத்தூர்வாசபுரம் வயிரவன் கோயிலுக்குச் சுவாமி கும்பிட வருகின்றனர். பழைய தொடர்பு இன்றும் நீடிக்கிறது. கண்ணனூரிலிருந்து வேறு சில குடும்பத்தாரும் தேவகோட்டைக்குக் குடிபோயிருக்கின்றனர். வேகுப்பட்டி யிலும் கண்ணனூரிலிருந்து குடியேறியவர்கள் வாழ்கின்றனர்.

கண்ணனூருக்கு அடுத்துள்ள முள்ளிப்பட்டி சேதுராப்பட்டி வரிசையில், நகரத்தார்கள் சேதுரா(வ்) பட்டியில் வாழ்ந்திருக்கின்றனர். இவ்வூர் சேதுராவ் பட்டி என்பதாம். யாரால் இப்பெயர் வந்தது என்பது தெரியவில்லை. இங்குச் செட்டியார்கள் வாழ்ந்த வீடுகளில் அடையாளங்கள் - தாழ்வாரங்கள் - இன்றும் இருக்கின்றன. இங்கு நகரத்தார்கள் கட்டிய பிள்ளையார் கோயிலும் ஊருணியும் உள்ளன. சேதுரா பட்டியில் வாழ்ந்தவர்கள் ஆத்தங்குடி, தேவகோட்டை, பலவான்குடி ஆகிய ஊர்களில் குடியேறியிருக்கின்றனர்.

கீழச்சிவல்பட்டியில் வயிரவன் கோயிலைச் சார்ந்த குடும்பத்தினர் உள்ளனர். இவர்களுக்கு 'வாரியப்பட்டியார் வீடு' என்று பெயர் வழங்குகிறது. காரைக்குடி செயங்கொண்டபுரத் (செக்காலை) திலும் 'வாரியப்பட்டியார் வீடு' என்று ஒரு

குடும்பத்தினருக்குப் பெயருண்டு. இவர்களும் வயிரவங் கோயில் நகரத்தார்களே. கீழச்சிவல்பட்டி - பி. அழகாபுரியிலிருக்கும் வாரியப்பட்டியார் குடும்பத்தினர், இன்றும் வாரியப்பட்டியிலுள்ள கருங்காடன் கோயிலுக்குச் சுவாமி கும்பிடப் போகின்றனர். வாரியப்பட்டியிலிருந்த நகரத்தார்கள், பலவான்குடி, ஆத்தன்குடி, காரைக்குடி, செயங்கொண்டம் (செக்காலை), தேவகோட்டை முதலிய ஊர்களில் குடியேறியிருக்கின்றனர்.

கீழச்சிவல்பட்டிக்கு அருகிலுள்ள பில்லமங்கலத்தில் இன்று நகரத்தார்கள் யாரும் குடியிருக்கவில்லை. கீழச்சிவல்பட்டியில் சூரக்குடிக் கோயிலைச் சார்ந்த ஒரு பகுதியினர் 'பில்ல மங்கலத்தார் வீடு' என்று அழைக்கப்பெறுகின்றனர். அது போல மாத்தூர்க் கோயில் உறையூர்ப் பிரிவில் சில குடும்பத்தார் பில்லமங்கலத்தின் மையத்தில் ஸ்ரீ சுப்பிரமணியர் கோயில் கட்டித் தொன்று தொட்டுக் கொண்டாடி வருகின்றனர். கீழச்சிவல்பட்டியிலுள்ள சூரைக்குடிக் கோயிலார் (தாக்களாவீடு) பில்லமங்கலம் ஸ்ரீ பொன்னழகியம்மனுக்குப் பல திருப்பணிகள் செய்துள்ளனர். இவை நகரத்தாருக்கும் பில்லமங்கலத்துக்குமுள்ள தொடர்பைக் காட்டுகின்றன. குன்றக்குடியில் பில்லமங்கலத்தார் வீடு, கட்டிய விடுதிக்கு இன்றும் பில்லமங்கலத்தார் விடுதி என்று பெயர் வழங்குகிறது. இவற்றையெல்லாம், ஒருமுகப்படுத்தி நோக்கும் போது, பில்ல மங்கலத்தில் வாழ்ந்த நகரத்தார்கள் பி. அழகாபுரி, கீழச்சிவல்பட்டிக்குக் குடி புகுந்தனர் என்று அறிய முடிகிறது.

### கீழ வட்டகை

நகரத்தார்களின் குல தெய்வக் கோயில் உள்ள ஊர் கொரட்டி; இதனையடுத்துள்ள ஊர் தட்டட்டி, இரண்டு ஊர்களையும் இணைத்துத் தட்டட்டி கொரட்டி என்பர். கொரட்டியில் பாண்டியர் காலச் சிவன் கோயில், வழி பாடின்றிக் கிடக்கின்றது. இங்கிருந்த நகரத்தார்கள், காரைக்குடிக்கு வலசை போய் வளமாக வாழ்கின்றனர். காரைக்குடியில் மேலக் கொரட்டியார் வீடு, கீழக் கொரட்டியார் வீடு, நடுக்கொரட்டியார் வீடு என்று வீடு கட்டிக் கொண்ட முறையில் பெயர் பெற்றிருக்கின்றனர். மேலக்கொரட்டியார் வீட்டுக்கு மட்டும் கொரட்டியில் ஊருணியும் பிள்ளையார் கோயிலுமுள்ளன. இவர்களுடைய தருமமே திருவண்ணாமலை சா.நா.நா. பொதுசாதுக்கள் அன்னசத்திரம். கொரட்டியிலிருந்தவர்களில் வேறு சிலர் உய்யக் கொண்டான் சிறுவயலுக்குக் குடி போயினர். கொரட்டியிலிருந்து கானாடுகாத்தனுக்கும் சண்முகநாதபுரத்துக்கும் வலசை போயிருக்கின்றனர்.

இன்றைய நாச்சியாபுரம், 'கம்பனூர் நாச்சியாபுரம்' என்றே முன்பு அழைக்கப் பெற்றது. கம்பனூர் நகரத்தார்கள் வாழ்ந்த ஊர்; கம்பனூரிலிருந்த நகரத்தார்கள் நாச்சியாபுரத்திற்கு வந்துவிட்டனர். குடிப் பெயர்ச்சிக்குரிய காரணம் புலனாகவில்லை.

'சேந்தணி' என்பதும் நகரத்தார் வாழ்ந்த ஊரிலொன்று; காரைக்குடியில் கல்விக் கொடை செய்து தமிழ் வளர்க்கும் சேந்தணியார் குடும்பம், சேந்தணியில் இருந்து காரைக்குடிக்குப் போந்தவர்கள்; அங்கிருந்து தேவகோட்டைக்கும் போயிருக்கிறார்கள். இவர்கள் வயிரவன் கோயிலைச் சார்ந்தவர்கள்.

கீழக்கோட்டை ஆதினமிளகி அய்யனாரும் பொக்கிஷக் கோட்டைக் காளியும் தொன்மையான தெய்வங்கள்; நகரத்தார் குடும்பங்கள் பலவற்றுக்குக் குல

தெய்வங்கள்; இங்கு நகரத்தார் குடும்பங்கள் இல்லை; ஒன்பது நகரக் கோயிலுள் ஒன்றான வேலங்குடிக் கோயில் புள்ளிகள் அனைத்துக்கும் குலதெய்வம் கீழக்கோட்டை அய்யனாரே என்பது சிந்திக்கத் தக்கது. இங்கிருந்தவர்கள் தேவகோட்டைக்குக் குடி போய்விட்டனர்.

காரைக்குடியில் 'நடுவிற் கோட்டையார் வீடு' என்று ஒரு வீட்டுக்குப் பட்டப் பெயருண்டு. இவர்கள் நடுவிக் கோட்டையிலிருந்து காரைக்குடிக்கு வந்தவர்கள். நடுவிற் கோட்டை, எழுவங்கோட்டை இரண்டும் பக்கத்தூர்கள். இரண்டும் ஊர்களிலும் நகரத்தார்கள் குடியிருந்து தேவகோட்டைக்குக் குடி போயிருக்கின்றனர்.

'வாரிவயல்' என்பது நகரத்தார்கள் வாழ்ந்த ஊர்களில் ஒன்று. திரைப் பட மேதை ஏ.வி.எம். மெய்யப்ப செட்டியார் குடும்பத்தினர் இங்கிருந்து காரைக்குடிக்கு வலசை வந்தவர்கள். ஆகையால் அவர்களுக்கு 'வாரிவயலார்' வீடு என்று பெயர்.

1953க்கு முன் வரை, தாணிச்சாஊருணியில் நகரத்தார்கள் வாழ்ந்தனர். அவர்கள் சண்முகநாதபுரம், தேவகோட்டை, காரைக்குடி போன்ற ஊருக்கு வந்து விட்டனர். பிள்ளையார் பட்டியில் இருபத்தாறு புள்ளிகளும் மாற்றூர்க் கோயிலில் எட்டுப் புள்ளிகளும் இருந்தன. இவ்வாறு காலந் தொறும் இடப் பெயர்ச்சி நடைபெற்று வருகிறது.

முனைசந்தை என்னும் முனையந்தை அரிமழத்துக்கு அருகே அமைந்த ஊர். நாட்டுக் கோட்டை நகரத்தார்களான ஐந்நூற்றுவரின் திருக்குளத் திருப்பணியைப் பற்றிக் கூறும் ஒன்பதாம் நூற்றாண்டுக் கல் வெட்டு இங்குள்ளது. ஐந்நூற்றுவர் பற்றிக் கூறும் முதற் கல் வெட்டு இதுவேயாகும். இங்கு நாட்டுக் கோட்டை நகரத்தார்கள் வாழ்ந்திருக்கிறார்கள்; பின் இவர்கள் கடியாபட்டியில் இராமச் சந்திர புரத்தில் குடியேறியிருக்கின்றனர்.

ஓணான் குடியில் இருந்த நகரத்தார்கள் இராயவரத்துக்கும் அரிமளத்துக்கும் போய் விட்டனர். இந்த இரண்டு ஊர்களிலும் இவர்கள் 'ஓணாங்குடியார் வீடு' என்றே அழைக்கப் பெறுகின்றனர்.

## பக்கத்தூருக்குப் பெயர்ச்சி

சாக்கோட்டையில் வாழ்ந்தவர்கள் புதுவயலுக்கும் தேவகோட்டைக்கும் குடி போயிருக்கின்றனர். கருணாக்குடியிலிருந்தவர்களும் வேங்காவயலில் இருந்தவர்களும் அருகிலுள்ள புதுவயலுக்குக் குடியேறிவிட்டனர். ஆலங்குடி, கூத்தலூர், செஞ்சை, செவரக்கோட்டை, நடுவிற்கோட்டை, கல்லுப்பட்டிப் பட்டணம், மேலமாகாணம், ஆகிய ஊர்களில் வாழ்ந்த நகரத்தார்கள் அருகே இருக்கும் காரைக்குடியில் குடியேறினர். ஆய்ங்குடியிலிருந்த நகரத்தார்கள் கானாடுகாத்தானில் குடியாக வாழ்ந்தனர். கம்பங்காடு, கானப்பூர், சித்தாட்டி வயல், பாலையப்பட்டி, வடகாட்டுப்பட்டி ஆகிய ஊர்களிலிருந்தவர்கள் கண்டனூரில் குடியேறினர்.

தாங்கள் வாழ்ந்த ஊருக்கு அருகிலுள்ள வளர்ந்து வரும் ஊரில் நகரத்தார்கள் குடியேறினர். ஒருவர் குடி பெயர அவரைத் தொடர்ந்து மற்றவர்களும்

இடம் பெயரலாயினர். முதலில் குடிபெயர்ந்து போனவர் பணங்காசுடனும் சொத்து சுகத்துடனும் போன ஊரில் இருந்தால், அவர் பங்காளிகளும் சம்பந்த புரமும் அந்த ஊருக்கே போய்விட்டனர்.

## புள்ளி மிகுதி

இவ்வாறு வலசை போனவர்கள், தேவகோட்டையில் தான் மிகுதியாகக் குடியேறியிருக்கிறார்கள். தேவகோட்டையைச் சுற்றியுள்ள இலுப்பைக்குடி, இரவிசேரி, உடப்பன்பட்டி, உதையாச்சி, கடகம் பட்டி, கண்ணன் கோட்டை, காவணன்வயல், செங்கல் கோவில், செப்பா வயல், சேந்தணி, பக்கரிப் பட்டி, பறியன்வயல், புலிகுளம், முதலிய ஊர்களிலுள்ளவர்கள் தேவகோட்டையிலேயே குடியேறினர். ஏறத்தாழ முப்பத்து மூன்று ஊர்களில் வாழ்ந்தவர்களில் பெரும் பாலோர் இங்கேதான் குடியேறியுள்ளனர். இதனால் தான் தேவகோட்டையில் புள்ளி நிறையப் பெருகியிருக்கிறது. சூரக்குடிக் கோயிலைக் தவிர மற்ற எட்டுக் கோயிலாரும் இங்கு வாழ்கின்றனர்.

இவ்வாறு நகரத்தார்கள் வலசை போகக் காரணங்கள் என்ன? என்று ஆராய்தல் வேண்டும்.

(1) உள்ளூரில் வாழ்ந்த வலிமையான மக்கள் பெருக்கம், மக்களோடு ஏற்பட்ட முரண்பாடு; அதில் எதிர்த்து நிற்காமல் விலகிப் போதல்.

(2) அம்மை, வாந்திபேதி, தெய்வக் குற்றம் போன்றவற்றிலிருந்து விலகிப் போதல்

(3) ஒருவர் வெளியூரில் போய்ப் பொருளும் புள்ளிகளும் பெருகி வளமானால் அவர்களுடன் தாமும் போய்விடுதல்.

(4) பெண்ணைக் கட்டிக் கொண்ட மாப்பிள்ளையையும் மகளையும் கூட்டிக் கொண்டு தங்களுடன் வைத்துக் கொள்ள விரும்புதல்.

---

1. வித்துவான் வயிநாகரம் அ. இராமநாதன் செட்டியார் (1953). ப. 23.
2. மேலது: ப. 50.
3. மேலது: ப. 22.
4. மேலது: ப. 20.

## சீர்வளர் செட்டி நாடு

சிவனடி மறவாத சீர்மை மிக்க நாட்டுக் கோட்டை நகரத்தார்களான செட்டியார்கள், அஞ்செழுத்தை உட் செபிப் போர்; அல்லும் பகலும் குமரப் பெருமானை மறவாதவர்கள். இவர்களைப் பாடுவார் முத்தப்ப செட்டியார் 'இருநிதியம் வேண்டினார்க்கு உதவி மிக்க நலந்தான் பெற்றோர்' என்று போற்றுவர். நாட்டுக் கோட்டைச் செட்டியார்கள் அனைவரும் ஒருங்கு கூடிப் பெருகி வாழுகின்ற இடம் செட்டிநாடு; செட்டிகள் கூடி வாழ்ந்த நாடு செட்டி நாடு ஆயிற்று. செட்டிநாடு என்பது தனி நாடாக - தனி மன்னரின் கீழ் - ஒராட்சியின் கீழ் என்றும் விளங்கியதில்லை. இந்நாட்டுக்குத்தனியே மன்னர் யாரும் விளங்கியதில்லை. வருவாய்த்துறைப் பிரிவிலோ பாளையப்பட்டுப் பிரிவிலோ செட்டி நாடு என்ற பகுப்புக் கிடையாது. மக்கள் வழக்கில் தான் இப்பகுப்பு உள்ளது. இன்றையப் புதுக் கோட்டை, சிவகங்கை மாவட்டங்களில் செட்டிநாட்டுப் பகுதிகள் அடங்கியிருக்கின்றன. தொன்மையான நாட்டுப் பிரிவுகளான கானாடு, கல்வாசல் நாடு, பூங்கொன்றை நாடு, திருமலைநாடு, பறம்புநாடு, பொன்னமராபதி பத்துநாடு. வாள் கோட்டை நாடு, பாலையூர் நாடு ஆகியவற்றில் செட்டிநாட்டு ஊர்கள் அமைந்திருக்கின்றன. செட்டிநாட்டுப் பகுதியில் இவ்வினத்தாருடன் பல்வேறு இனத்தார்களும் கலந்து வாழ்கின்றனர். இவர்கள் தம்மை ஆளுவோரைப் பற்றிக்கவலைப் படாது தங்கள் உறவையும் தொழிலையும் கால தேசவர்த்தமானம் கடந்து தொடர்ந்து வளர்த்தனர்.

## எல்லை வரையறை

நகரத்தார்கள் பல்வேறு இனத்தாருடன் பல்வேறு இடங்களில் பலர் ஆட்சியின் கீழ் வாழ்ந்தாலும் அவர்களிடையே இன அடிப்படையான ஒற்றுமையும் கட்டுக் கோப்பும் இருந்தன. தொண்ணூற்றாறு ஊர் நகரக் கூட்டம், கோயில் அடிப்படையில் திருமணம் செய்தல், பங்காளிகளிடையே யான பொதுப்படைப்பு அல்லது பூசை, குல தெய்வக் கோயில் வழிபாடு, நகரக்கூட்டம் ஊருக்கு ஊர் கூடுதல், ஆண்கள் உபதேசம் கேட்டல், பெண்கள் உபதேசம் கேட்டல் முதலியன நகரத்தாருடைய கூட்டுறவைச் சிதைய விடாது ; காப்பற்றி வருகின்றன. கூட்டமாக வணிகம் செய்த குழுமனப்பான்மை இவர்களிடையே என்றும் இருந்தது. அதனால் அவர்கள் தாங்கள் வாழுதற்குரிய நில எல்லையை

"வெள்ளா றதுவடக்காம் மேற்குப் பிரான்மலையாம்
தெள்ளார் புனல் வைகை தெற்காகும் - ஒள்ளியநீர்
எட்டிக் கடற்கிழக்காம் ஈதன்றோ நாட்டரண்சேர்
செட்டிநாட் டெல்கை எனச் செப்பு"

என்று வரையறுத்துக் கொண்டனர். இந்த எல்லைக்குள்ளேயே இம்மரபினர் வாழ்தல் வேண்டும் என்றும் எல்லை தாண்டிச் சென்றால் தீமை விளையும் என்றும் நம்பிக்கை இருந்தது. இது பெண்களுக்கே உரிய கட்டுப்பாடு என்பது தான் உண்மை. வரையறுத்த எல்லைப்பகுதியில் வாழ்வது சமணசமயக் கோட்பாட்டைத் தழுவியதாகும்.

பலபெயர் வழக்கும் விளக்கமும்

இம்மரபினர் தங்களை நாட்டுக் கோட்டை நகரத்தார்கள் என்றும் தொண்ணூற்றாறு ஊர்நகரத்தார்கள் என்றும் ஏழூர்நகரத்தார்கள் என்றும் நாநாதேசிகள் என்றும் தனவைசியர் என்றும் இரத்தின தனமகுடவைசியர் என்றும் பூபாலதன வைசியர் என்றும் பிரதானவைசியர் என்றும் உபயகுல பூ பால வைசியர் என்றும் சந்திரகங்காகுல வைசியர் என்றும் சிவகோத்திரவைசியர் என்றும் செட்டிப்பிள்ளைகள் என்றும் பல பெயர்களால் தங்களைச் சொல்லியும் எழுதியும் வருகின்றனர். இவற்றில் சில பெயர்கள் வழக்கிலுள்ளவை; பிற வரலாற்று நூல்களில் குறிக்கப் பெறுவனவே.

நாட்டுக் கோட்டை நகரத்தார்கள் செட்டி நாட்டிலுள்ள தொண்ணூற்றாறு ஊர்களில் வாழ்ந்தமையால் தொண்ணூற்றாறு ஊர் நகரத்தார் என்று சொல்லிக் கொண்டனர். இன்று இவர்கள் எழுபத்தைந்து ஊர்களில் வாழ்ந்தாலும் தங்களைப் பழைய மரபு வழியே தொண்ணூற்றாறூர் நகரத்தார் என்பர். தொண்ணூற்றாறூர் நகரக் கூட்டம் என்ற வழக்கையும் நோக்குக. அதுபோல ஏழு கோயிலாகவும் ஏழு ஊரிலும் வாழ்ந்தமையால் இவர்கள் தங்களை ஏழூர் நகரத்தார் என்று உரைப்பர்; காவிரிப்பூம்பட்டினத்தில் கீழத்தெருவில் ஏழுவழியினராய் வாழ்ந்த இவர்கள் இங்கு ஏழுகோயிலாராய் வாழ்ந்தனர். 'இருநிதியஞ் சேருகின்ற எழுநகரத்தார்' என்பது திருமுக விலாச வெண்பா. நாகர் கோயில் வட்டாரத்தில் வாழுகின்ற செட்டியார் மரபினர்கள் தங்களை 'ஏழூர்ச் செட்டியார்' என்று சொல்லிக் கொள்வதும் இங்குக் கருதற்பாலது.

இம்மரபினர் பல்வேறு தேசங்களுக்குச் சென்று வணிகம் செய்தமையால் தங்களை'நானாதேசிகள்'/நாநாதேசிகள்' என்பர்.

வணிகர்கள் ஒருவரொடு ஒருவர் இணைந்தும் அனுசரித்துமே வணிகம் செய்வர். வணிகரில் வெளிநாட்டு வணிகம் செய்தோர் பரதேசி வணிகர் என்றும் பலநாடுகளுக்குச் சென்று வணிகம் செய்தோர் நானாதேசி வணிகர் என்றும் பெயர் பெற்றனர். நாட்டுக் கோட்டை நகரத்தார்கள் பல அயல் நாடுகளுக்குச் சென்று வணிகம் செய்தமையால் 'நானாதேசி' எனப்பட்டனர். இவர்கள் வழிபட்ட விநாயகரைத் தேசி விநாயகர் என்றழைத்தனர். இவர்கள் வழியிலடங்கிய சூரக்குடிக் கோயிலார் வணங்கிய சிவபெருமான் 'தேசிகநாதர்' என்பர்; சூரக்குடி, வேலங்குடிக் கோயிலார் தேசிக' நாராயணபுரத்தைச்சார்ந்தோர். இவை யெல்லாம் இந்நானா தேசிகளின் மரபில் மிஞ்சிய எச்சங்கள்..

தனவணிகர், தனவைசியர் என்ற இரண்டும் ஒன்றே; அந்தணர், க்ஷத்திரியர், வைசியர் என்று எண்ணும் மரபில் இவர்களை வைசியர் என்று ரைத்தனர். வைசியர் என்பதையே வணிகர் என்றனர். தனம் என்பது செல்வமாகும். இவர்கள் கடலோடிப் பெருஞ்செல்வம் திரட்டித்தனம் தேடிய பின் தனத்தைக் கொண்டு வணிகம் செய்தபின் தனவைசியர் எனப் பெயர் பெற்றனர். தனத்தைக் கொண்டு கொடுத்து வாங்கித் தன வியாபாரம் செய்த மையால் தனவணிகர் ஆயினர். கூலத்தை வைத்து வணிகம் செய்தோர் கூல வாணிகர் என்றழைக்கப் பெற்றவாறு தனத்தை முதலாக வைத்து வணிகம் செய்தோர் தன வணிகர், தனவைசியராயினர். இத்தொழிலும் இப்பெயரும் மிகப் பிற்பட்டகால வளர்ச்சி நாட்டுக் கோட்டை நகரத்தார்

பல்வகை வணிகங்கள் செய்து திரண்ட செல்வம் பெற்று வசதியான வாழ்வு பெற்றபின் தன வணிகம் செய்யலாயினர்.

நகரத்தார்கள் இரத்தின வணிகம் செய்த மையானும் மன்னர்க்கு முடி சூடுகின்ற உரிமை இவர்க்கு இருந்தமையானும் (இவ்வுண்மை ஆராய்ச்சிக்குரியது; மன்னர்க்கு முடிசூடும் உரிமை இருந்த தாகக் கருதி இப்பெயர் வழங்கினர்) இவர்கள் 'இரத்தின தன மகுட வைசியர்' என்று சொல்லிக்கொண்டனர். இப்பெயரையே' இரத்தின தனமகுட பூ பால வைசியர்கள்' என்பதும் உண்டு. சோழ மன்னர்களுக்கு இவர்கள் முடிசூட்டும் உரிமை பெற்றிருந்தமையால் இப்பெயர் பெற்றனர். இதற்குத் தெளிவான சான்றுகள் இல்லை. 'சடையன் மரபுளோர் தர' என்று வரும் கம்பராமாயணச் செய்தியை வைத்து இது எழுதப்பட்டிருக்க வேண்டும். கெங்காகுல வேளாளப் பெண்களைத் திருமணம் செய்து கொண்டதால் சந்திரகங்காகுல வைசியர்கள் என்று பெயர். இவர்கள் சந்தியாபுரியால் வாழ்ந்த போது 'சந்திரகுல கோத்திர வைசியர்' எனப்பட்டனர். வைசியமரபினர் பல்வகையினருள்ளும் இவர்கள் தனித் தலைமை பெற்றிருந்தமையால் 'பிரதானவைசியர்' என்றழைக்கப் பெற்றனர். நகரத்தார்கள் சிவனடிமறவாது. நெற்றியில் நீறும் கழுத்தில் உருத்திராக்கமும் அணிந்து வாழ்நதமையால் சிவ கோத்திரவைசியர் என்ற சிறப்புப் பெற்றனர்.

நகரத்தார் வரலாற்றை எழுதிய பலரும் இவர்களைப் பூபால தன வைசியர் என்றும் உபயகுல பூபால வைசியர் என்றும் குறிப்பிட்டிருக்கின்றனர். சமஸ்க்கிருத மொழியில் பெயர்களைச் சொன்னால் சிறப்பு என்று கருதிப் புதுப்புது அடைகளைச் சேர்த்துப் பெயரைச் சொல்லியிருக் கின்றனர். தன வைசியர், வைசியர் என்ற பெயர்களை வைத்தே இவை எழுதப் பட்டிருக்கின்றன. இப்பெயர்கள் நிலத்தொடும் நீரொடும் தொடர்புடையனவாக விளங்குகின்றன.

நாட்டுக் கோட்டைச் செட்டிகள் என்று இவர்களைச் சொன்னாலும் 'செட் டியார்' என்றே இவர்களைக் கூறுவர். இவர்களைப் பிற இனத்தார் அன்பாகவும் மென்மையாகவும் மரியாதையாகவும் 'செட்டிப்பிள்ளைகள்' என்று அழைப்பர். இன்றும் 'செட்டி' என்ற பெயரைத் தான் நகரத்தார்கள் தங்கள் பெயருக்குப் பின்னே சேர்த்துக் கொள்ளுகின்றனர். செட்டி என்ற சொல்பழங்காலத்தில் மதிப்பும் மரியாதையும் மிக்கது ; பிற இனத்தார் 'செட்டி' என்று மரியாதைக்குறைவாகப் பயன் படுத்தவே அச் சொல்லுடன் 'ஆர்' விகுதியையும் சேர்த்துச் 'செட்டியார்' என்று வழங்கலாயினர். எட்டி என்று வணிகர்களுக்கு ஆட்சியாளர் வழங்கிய சிறப்புப் பட்டம் இவர்கள் பெயருக்கு முன்னொட்டாய் நின்றது. 'எட்டி' என்ற சொல்லே'செட்டி' என்றாயிற்று. பெயருக்கு முன் நின்றது பெயருக்குப் பின் வந்து நின்றது. பாரதப் பிரதமர் ஜவகர்லால் நேரு பெருமான் 'செட்டி' என்ற சொல் 'சேத்' என்னும் சொல்லிலிருந்து தோன்றியது ' என்று குறிக்கிறார். செட்டியே சேட்டு என்றாயிற்று. சிரோஷ்டி என்ற சமசுக்கிருதச் சொல்லின் திரிபு தான் 'செட்டி' என்பதும் ஒரு கருத்து. மிகச் சிக்கனமாச் செலவு செய்து செட்டாக வாழ்ந்தமையால் இவர்கள் 'செட்டுமார்' என்றழைக்கப்பெற்றனர். செட்டு என்ற சொல்லே இகர விகுதி பெற்றுச் செட்டி என வழங்குகிறது. செட்டி, செட்டியார் என்று வழங்கும் வழக்கே இன்று பெரும் பான்மையானது.

செட்டி, செட்டியார் என்ற வழக்குப் போல 'நாட்டுக் கோட்டை நகரத்தார்' என்ற வழக்குத்தான் மிகுதி. நாட்டரசன் கோட்டை நகரத்தார் என்பதே நாட்டுக் கோட்டை நகரத்தார் என்று மருவிற்று. நாட்டரசன் கோட்டைகட்டியிருந்த இடம் நாட்டரசன் கோட்டை. நாட்டரசன் கோட்டை பற்றியும் நாட்டரசன் பற்றியும் கண்ணுடையம் மன்பள் (பா எண் 18) சுட்டுகிறது. நாட்டரசன் கோட்டையிலிருந்து பரவிய நகரத்தார்கள் நாட்டுக் கோட்டை நகரத்தார்களாவார்கள். நாட்டரசன் கோட்டையின் மருவிய வடிவமே நாட்டுக் கோட்டை என்பது பொருந்தாது. நாட்டுக் கோட்டை என்பதிலுள்ள நாடு, சோழ நாட்டைச் சுட்டும். சோழ நாட்டைச் சார்ந்த காவிரிப் பூம்பட்டினத்தில் இம்மரபினர் அனைவரும் ஒன்றாகக் கோட்டை கட்டி வாழ்ந்தனர். அதனைக் கருத்திற் கொண்டு இவர்களை 'நாட்டுக்கோட்டையார்' என்று சுட்டினர்.

இளையாற்றக்குடி நகரம் நாட்டுக்கு நடு மண்டலமாதலால் இளையாற்றக்குடி நகரத்தாராகிய ஏழுவழி நகரத்தாருக்கு மட்டும் நாட்டுக் கோட்டை நகரத்தார் என்ற பெயர் வந்தது. இக்கருத்து எவ்வாறு பொருத்தமானது என்று புலனாகவில்லை. 'சோழ மன்னனுக்கு நகரத்தில் கோட்டையும் இவர்களுக்கு அவ்வரசன் ஆட்சியுட்பட்ட நாட்டிற் கோட்டையுமாக இருந்ததால் நாட்டுக் கோட்டையார்' எனப் பெற்றனர். (பண்டிதமணி: ப8) பிற்காலச் சோழர் கல்வெட்டுகளில் 'நாட்டுச் செட்டிகள்' என்று ஓரினத்தார் சுட்டப்பெறுகின்றனர். இவர்களும் நாட்டுக் கோட்டை நகரத்தாரும் ஓரினத்தவரா? வேறினத்தவரா? என்பது புலனாகவில்லை. நாடார்கள் இன மரபில் பொருள்- பணப் பொறுப்பு - பொக்கிஷம் - மிக்கவரை உடையவரை 'நாட்டுக் கோட்டை' என்று காளிதேவி நியமித்ததாக நாட்டுப் புறப்பாடல்கள் நவிலுகின்றன. எனவே, நாட்டுக் கோட்டையார் என்ற தொடரும் பணத்தொடர்பைக் காட்டுவதாதல் வேண்டும்.

இவர்கள் எந்த இடங்களில் தாங்கள் வாழவிரும்பினாலும் அங்குப் பல வளங்களை உண்டாக்கி மாடமாளிகைகள் ஓங்கிய நகரமாகச் செய்யும் தன்மையால் 'நகரத்தார்' எனப் பெற்றனர். நகர் என்ற சொல் வீட்டை உணர்த்தும். ஈடும் எடுப்பு மின்றிப் பெரிய வீடுகளை எழுப்பிய இவர்கள் நகரத்தார்கள் என அழைக்கப் பெற்றனர் என்பது ஒரு கருத்து; அறிஞர் கம்பனடிப் பொடி "காஞ்சிபுரத்தில் இருந்து வந்தவர்கள் ஆதலால் இவர்கள் நகரத்தார்கள் என்று பெயர் பெற்றனர்" என்பர். பல ஊர்களைச் சேர்ந்த வணிகர்கள் ஒன்றுகூடி அமைந்த வணிகக் குழுக்களைப் போன்றே ஓர் ஊரில் உள்ள வணிகர்கள் அனைவரும் கூடித் தமக்குள்ளே குழு அமைத்து வாழ்ந்தனர்; அத்தகைய உள்ளூர்க் குழுக்களை நகரம் எனப் பெயரிட்டு அழைக்கின்றன கல்வெட்டுகள். ஆதலின் நகரத்தார் என்ற பெயர் வியாபாரக்குழு என்ற அடிப்படையில் தான் ஏற்பட்டிருக்க வேண்டும். காஞ்சிபுர வாழ்க்கையால் ஏற்பட்டிருந்தால் 'காஞ்சிபுரத்தார்' என்றோ 'புரத்தார்' என்றோ ஏற்பட்டிருக்க வேண்டும். நகரத்தார் என்று பெயர் வந்திருக்க முடியாது. வணிகர் குழுவில் பணப் பொறுப்பில் இருந்தமையால் இவர்கள் நாட்டுக் கோட்டை நகரத்தார் என்று பெயர் பெற்றிருத்தால் கூடும். வயிரவன் கோயிற் புராணம் "பொன்னியா றுவரிக் கொண்கனைப் புணரும் பூம்புகாரப் பெருநகரத்து /மன்னிய திறத்தான் நகரத்தார் என்று வழங்கிய நிற்கும் வைசியர்க்கு" (32: 1 - 2) என்று புகார் நகரொடு தொடர்பு காட்டுகிறது.

## ஐந்நூற்றுவர் – ஐந்நூற்றுவன்

தமிழகத்தில் சிறந்து விளங்கிய வணிகக் குழுவில் சீரும் சிறப்புமிக்கது, 'நானாதேசித் திசையாயிரத்தைஞ் ஞூற்றுவர்' என்ற வணிகக் குழு. கிறித்துவ ஆண்டுத்தொடக்கத்தில் கருநாடகத்திலுள்ள அய்கோளே (Aihole) என்னுமிடத்தில் இவர்கள் தங்கள் தலைமை இடத்தை அமைத்து வணிகம் செய்தனர். இவர்கள் அதனை மையமாக்கி எல்லாத்திசைகளிலும் தங்கள் வணிகத்தை நடத்தினர். இக்குழுவில் தமிழ், தெலுங்கு, கன்னடம், முதலிய பல்வேறு மொழிகள் பேசுவோரும் இருந்தனர். நானா தேசித் திசையாயிரத் தைந்நூற்றுவர் வணிகக் குழுவே இந்நாட்டில் முற்பட்ட வணிகக் குழுவாகும். மைசூரில் கிடைத்த கன்னடக் கல்வெட் டொன்று இம்மரபினரின் சிறப்பைச் செப்புகிறது. இவர்களின் சாசனம் 'பஞ்சசத வீர சாசனம்' எனப்படும். 'பஞ்சசதம்' என்பது ஐந்நூற்றையே குறிக்கும் என்பர் டாக்டர். இரா. நாகசாமி. இம்மரபினர் பல்வேறு வணிகக் குழுக்களுடன் இணைந்து வியாபாரம் செய்தனர். திட்டகுடியிலுள்ள இராஜாதிராச சோழன் காலத்தியக் கல் வெட்டு, இவர்கள் சித்திரமேழிப் பெரிய நாட்டாருடன் சேர்ந்து வணிகம் செய்த மையைப் புலப்படுத்துகிறது. திருவிளக்குடிக் கல்வெட்டு (IBI/1926) இக்குழுவினர் வளஞ்சியருடன் அங்குள்ள கோயிலின் ஒருபகுதியைக் கட்டியமையைத் தெரிவிக்கின்றது. இக்குறிப்புகளால், நாட்டுக் கோட்டை நகரத்தாரை ஐந்நூற்றுவர் என்றும் ஐஞ்ஞூற்றுவர் என்றும் அழைக்கும் மரபு புலனாகும். செட்டிநாட்டிலுள்ள செட்டியார்கள் வாழ்ந்த முனை சந்தைக் கல்வெட்டு முதலாக இப்பெயர் வழங்குதலைக் காண முடியும்.

சுந்தரபாண்டிய புரத்திலுள்ள கண்மாய் 'ஐந்நூற்றுவன்' (பி. அழகாபுரி வெண்ணீறுடையான் கண்மாய்) என்ற பெயரினது. செட்டி ஊருணி என்பது போல ஐந்நூற்றுவன் ஏரி என்று இது வழங்கியது. விரையாச் சிலைச்சிவன் கோயில் கல்வெட்டில் 'ஐந்நூற்றுவமங்கலம்' என்று ஓரூர் குறிக்கப் பெறுகிறது. இம்மரபினர்க்கென இருந்த பறையன் ஐந்நூற்றுவப் பறையன் எனப்பட்டான்.

இத்தகைய குறிப்புகளால், இம்மரபினர் 'ஐந்நூற்றுவர்' என்றழைக்கப் பட் டனர். ஐந்நூற்றீசர், ஐந்நூற்றி அய்யனார், ஐந்நூற்றி விநாயகர் என்ற பெயர்கள் எல்லாம் நாட்டுக் கோட்டை நகரத்தார்களுக்கு 'ஐந்நூற்றுவர்' என்ற பெயரிருந்த வழக்கை வெளிப்படுத்துகின்றன.

ஐந்நூற்றுவராகத் திகழ்ந்த வணிகர் குலமக்களை அவர்கள் குடியிருந்த இடத்தின் பெயரைக் கொண்டு 'இளையாத்தக்குடி நகரத்தார்' என்றழைக்கும் மரபும் பெருவழக்கினது. மேலப்பனையூர் ஞான புரீசுவரர் சுவாமி கோயிலின் வடபுறமுள்ள கல்வெட்டில் (கி. பி. 1360) இம்மரபினர்'இளையாத்தக்குடி நகரத்தார்' என்று பொறிக்கப் பட்டிருக்கிறது. செவ்வலூர் பூமியீசுவரர் கோயில் சிவபெருமான் கருவறை வடபுறமுள்ள கல் வெட்டு 'இளையாத்தக்குடி நகரத்தார்' என்று கூறுகிறது. எட்கர் தர்ஸ்டன் தன்னுடைய குறிப்பில் இவர்களை 'இளையாத்தக்குடி - நாட்டுக் கோட்டைச் செட்டிகளில் ஒருவகை' என்று எழுதுவர் (ப. 369: 1975) இவ்வாறு பல்வேறு பெயர்களால், நாட்டுக் கோட்டை நகரத்தார் அழைக்கப் பட்டாலும் செட் டியார் என்ற பெயரும் நாட்டுக் கோட்டையார் என்ற பெயருமே நிலைத்து விட்டன.

இளையாத்தக்குடி நகரத்தார்

நாட்டுக்கோட்டை செட்டியார்களை அல்லது நாட்டுக் கோட்டை நகரத்தார்களை'இளையாத்தக்குடி நகரத்தார்கள்' என்று அழைப்பதே மரபு. வணிகக் குழுக்களில் இடம் பெற்ற நகரத்தார்கள் பின்னர் அவர்கள் வாழ்ந்த இடப்பெயருடன் இணைத்து அழைக்கப்படலாயினர். இவர்கள் இளையாத்தக்குடியில் தங்கிய போது'இளையாத்தக்குடி நகரத்தார்' என்று அடையாளம் காட்டப்பட்டனர். இம்மரபினரில் தனிப்பட்டவர் களைச் 'செட்டி' என்று அழைத்தாலும் அவ்வினத்தார் எல்லாரையும் ஒன்று படுத்தி இருக்கும் இடத்தொடு சேர்த்துக்கூறுவது தான் உலக இயல்பு. நகரத்தார்களிடையே இருந்த பல்வேறு குழுவினரில் இவர்களைத் தனிமைப் படுத்திக் காட்டவே இவ்வண்ணம் அழைத்தனர். இவ்வாறு பேரோடும் ஆள் பெயரோடும் ஊரைச் சேர்த்து அழைப்பது ஒரு தொன் மரபாகும்.

'இளையாத்தக்குடிநகரத்தார்' என்று இம்மரபினரைக் குறிக்கும் கல் வெட்டுகள் செட்டி நாட்டு வட்டாரத்தில் காணப்படுகின்றன. மேலப் பனையூர் ஞான புரீசுவரர் சுவாமி கோயிலின் வடபுறமுள்ள மன்னர் பெயர் குறிக்கப்படாத கல்வெட்டில் பனையூர், குளமங்கலம் ஆகிய இரண்டு ஊராருக்கு மிடையே ஏற் பட்ட கோயில் வழக்கில், இளையாத்தங்குடி நகரத்தார்களும் கோனாட்டு வெள்ளாளர்களும் வேறு சிலரும் நடுவர்களாக விளங்கியமை கூறப்பட்டுள்ளது. நடுவர்களாக வந்த நகரத்தார்களின் பெயர் கல்வெட்டில் கிடையாது. இதன் காலம் கி.பி. 1360.

செவலூரிலுள்ள மூன்று கல் வெட்டுகள் இளையாத்தக்குடி நகரத்தாரைப் பற்றிய செய்திகளைச் சுட்டுகின்றன. செவலூர்ச்சிவன் கோயிலில் இளையாத்தக்குடி நகரத்தாரும் கழனி வாசலுடையாரும் சுப்பிரமணியரை அமைத்துக் கொடுத்திருக்கின்றனர். கல்வெட்டு கி. பி. 1458 (பார்த்திப தை 14 ஆம் நாள்) ஆண்டினது. அக்கல் வெட்டில் 'இளையாத்தக்குடி நகரத்தார் தம்பிரான் வந்தான்' என்று சொற்றொடர் வருகிறது. இங்குள்ள இன்னொரு கல்வெட்டிலும் இவர்களுக்கு முதல் மரியாதை கொடுப்பதுபற்றிய குறிப்புள்ளது. இதன் காலம் கி. பி. 1500 (ரௌத்தி - ஆடி - 16ஆம் நாள்).

இளையாத்தக்குடி நகரத்தாரைச் சுட்டும் கல்வெட்டுகள் விவரம்.

| இடம் | கோயில் | காலம் | தொடர் |
|---|---|---|---|
| 1. மேலப்பனையூர் | ஞானபுரீசுவரர் கோயில்-வடபுறம் சுவர் | கி.பி. 1360 | 'இளையாத்தக்குடி நகரத்தார்' |
| 2. செவ்வலூர் | பூமியீசுவரர் வடபுறம் சுவர் | கி.பி. 1458 | 'இளையாத்தக்குடி நகரத்தார் தம்பிரான்' |
| 3. " | " தென்புறம் (புசக:833) | கி.பி. 1500 | நகரத்தார்களுக்கு முதல் மரியாதை |
| 4. இராங்கியம் | பூமியீசுவரர் கோயில்-கீழ்புறம் சுவர் (புசக 796) (854) | கி.பி. 1456 | 'இளையாத்தக்குடியான குல சேகரபுரத்து காளைய காலன் பெருந்தெருவில் |

| | | | |
|---|---|---|---|
| 5. காளையார் கோயில் | - | கி.பி. 1511 | இளையாத்தக்குடியான |
| 6. மறவாமதுரை | அகளங்கீசுவரர் கோயில் தென்புறம் (புசக 726) | கி.பி. 1518 | 'ஆறிலொன்று காணி அங்கிஷமாகப் பூண்ட செட்டிகளில் இளையாத்தக் குடிக் கழனிவாசலுடையான் |

இன்றைய புதுக்கோட்டை, சிவகங்கை மாவட்டங்களில் கிடைக்கும் கல்வெட்டுகளில்தான் 'இளையாத்தக்குடி நகரத்தார்' என்ற ஆட்சியையும் அவர்களுடைய செயற்பாடு பற்றிய குறிப்புகளையும் காண முடிகிறது. இவர்களை'இளையாத்தக்குடி நகரத்தார்' என்று அழைத்தமைக்கு இவை சான்று பகருகின்றன. இலக்கியக்குறிப்புகளும் இதையே வலியுறுத்துகின்றன. [டாக்டர் தே. சொக்கலிங்கம் பாடுவார் முத்தப்பர் நூலில் மேலும் விரிவான விளக்கங்களுள்ளன] பல பெயர்களால் வழங்கும் நகரத்தார்களிடையே புரம் என்றும் உடையார் என்றும் வேறுபட்ட பிரிவுகளுள.

## நான்கில் ஐந்து

நகரத்தார் இசைகுடி மானத்தில் குலசேகரபுரம், வீரபாண்டியபுரம், சூடாமணிபுரம், தேசிகநாராயணபுரம், என்ற நான்கு புரங்கள் எழுதப் பெறுகின்றன. இலுப்பக்குடி நகரத் தாரிடம் சூடாமணிபுரத்தில் புகழிடங் கொடுத்த பட்டிணத்தார்' என்று எழுதும் மரபைக்காண முடியவில்லை. அவர்கள் ஏதோ ஒரு காரணத்தால் 'புகழிடங் கொடுத்த பட்டினத்தில் சூடாமணி புரமுடையார்' என்று முறை மாற்றியுள்ளனர். இரணியூர், பிள்ளையார் பட்டிக் கோயிலார் 'குலசேகர புரத்தில்' என்பதையும் எழுதி'இராசநாராயணபுரம்' என்பதையும் எழுதுவர். அவர்கள் நிலம் வாங்கி ஊரமைத்துப் பெயரிட்டுக் குடியேறிய ஊர் 'இராசநாராயண புரம்'. எனவே அவர்கள் எழுதுவது நல்ல பொருத்தம்.

| எண் | குலசேகர புரம் | இராசநாராயணபுரம் | வீரபாண்டியபுரம் | சூடாமணி புரம் | தேசிகநாராயணபுரம் |
|---|---|---|---|---|---|
| 1. | இளையாத்தக்குடி (அ)இரணியூர் | இரணிக் கோயில் | மாத்தூர் | இலுப்பைக் குடி | சூரக்குடி |
| | (ஆ)பிள்ளையார் பட்டி | பிள்ளையார் பட்டி | | | |
| 2. | நேமம் | | வயிரவன் கோயில் | | வேலங்குடி |

மேற்கண்ட அட்டவணையால், எல்லாக் கோயிலும் (இலுப்பைக்குடி தவிர) புரம் என்ற பிரிவுக்குள் அடக்கி விடுதலைக் காண முடிகிறது.




இவ்வாறு ஒரு குழுவாக இருந்து நகரத்தார்கள் நான்குபுரமாக உட்பகுப்புச் செய்து வாழ்ந்தனர்.

## குலசேகரபுரம்

கல்வாச நாட்டைச் சார்ந்த சிற்றூர் இளையாத்தக்குடி; இதனை 'இளையாத்தக்குடியான குலசேகரபுரம்' என்று கல்வெட்டுகளும் நகரத்தார் ஆவணங்களும் பேசுகின்றன. இளையாத்தக் குடியை நகரத்தார்களும் நாட்டார்களும் அப்பெயரால்தான் அழைக்கின்றனர். குலசேகரபுரம், இளையாத்தக் குடிக்குரிய வரலாற்றுப் பெயர் என்பதாம். பாண்டிய மன்னர்களில் குலசேகர பாண்டியன், வீர பாண்டியன் என்று இருவர் விளங்கினர். குலசேகரபுரம் என்ற பெயர் குலசேகர பாண்டியன் பெயரால் ஏற்பட்டிருக்கிறது. இவர்கள் குலசேகரபாண்டியனுக்கு ஆதரவாளர்களாகவோ அவன் குழுவைச் சார்ந்தவர்களாகவோ இருத்தல் வேண்டும்.

இளையாத்தக்குடி, நேமம் என்ற இரண்டு கோயில்களும் குலசேகரபுரத்தைச் சார்ந்தவை; இரண்டு ஊர்களும் நெருங்கிய தொடர்பின. எல்லாக் கோயிலாரும்,

இளையாத்தக்குடிக்கோயிலிருந்து வளர்ந்தவர்களானாலும், இளையாத்தக்குடிக் கோயிலைச்சார்ந்தவர்கள் மட்டுமே குலசேகரபுரம் என்று எழுதுவர். இந்தப் போக்கு அக்கோயிலாரின் தனிமையை எடுத்துக் காட்டுகிறது.

## வீரபாண்டியபுரம்

மாத்தூர், வயிரவன் கோயில் என்ற இரண்டும் வீரபாண்டிய புரச்சார்புடையது. வயிரவன் கோயிற்புராணம் இப் பெயர்க்குரிய காரணத்தை (கி.பி. 1894)

"ஆரம் தாங்கு போர்ச்செழியனரிய மேருச் செருக்கற்றி
யீரந்தாங்கி எனைவரையு மினிது புரப்பான் நிதி கொணர்ந்து
வீரந் தாங்கி ஆண்டமையான் வீர பாண்டிபுரப் பெயர்கொ
ணாரந்தாங்கு வளநாட்டு நாட்ட (பா.92)
வென்னாவற்றாமே"

என்று பாடுகிறது. இது கற்பனையான விளக்கம். பாண்டிய நாட்டில் வாழ்ந்த நகரத்தார்களில் இவர்கள் வீரபாண்டியன் சார்புடையவர்களாக வீரபாண்டியன் பெயரால் தனித்து வாழ்ந்தனர்.

வீரபாண்டிய புரத்தில் இரண்டு கோயில்கள் இருந்தாலும் ஏழகப்பெருந்தெரு என்பது வயிரவன் கோயிலார்க்கு மட்டுமே உரியது. தங்களுக்கு அதில் தொடர்பின்மையால் மாத்தூரார் எழுதுவதில்லை.

பாண்டிய நாட்டில் அரசாட்சிக்குப் போரிட்ட குலசேகரன், வீரபாண்டியன் ஆகியோர்களிடையே எழுந்த உரிமைப் போரில் கி.பி. 1187 இல் மூன்றாம் குலோத்துங்கன் தலையிட்டுப் ஏழகப்படையும் பாண்டியர்களுக்குத் துணையாகப் போரிட்டது. இதனால் நகரத்தார்களின் வணிகத்திலும் வாழ்க்கையிலும் பேரிடர்ப்பாடும் வீழ்ச்சியும் விளைந்தது. என்றைக்கும் வணிகக் குழுவினர் ஆளுவோரின் ஆதரவுடனேயே வளரவும் வாழவும் வேண்டியவர்கள். ஏழகப்படை எனத் தனிப்படையைத் தங்களுக்குக் காவலாக வைத்திருந்த நகரத்தார்கள், இப்போர்க்குப் பின் படையை வைத்துக் கொள்ளும் உரிமையை இழந்தனர்; அவர்களுடைய வணிகக்குழுவும் சிதைந்து தனித்தவர் வணிகமாகிவிட்டது.

மூன்றாம் குலோத்துங்கனுடைய ஒன்பதாம் ஆட்சி ஆண்டுக் கல்வெட்டு (சிதம்பரத்திலுள்ளது).

"விக்கிரம பாண்டியன் வேண்ட விட்ட தண்டால்
வீரபாண்டியன் மகன்பட ஏழகம்பட
மறப்படை படச் சிங்களப் படை"

என்று வீரபாண்டியன் தோல்வியையும் ஏழகப் படை அழிவையும் பேசுகின்றது. நகரத்தார்களின் காப்புப் படைப் பொறுப்பை யேற்று நிருவகித்த நகரத்தார் குழுவினர் வீரபாண்டியன் தொடர்புடையவர்களாயும் ஆதரவாளர்களாயும் இருந்திருக்கின்றனர். 'வீர பாண்டியன் மகன்பட ஏழகம்பட' என்று இரண்டையும் இணைத்துச் சொல்லுவது இருவருக்குமுள்ள உறவைக் காட்டுகிறது.

வயிரவன் கோயிலாரும் மாத்தூர்க் கோயிலாரும் வீரபாண்டியன் வணிகக் குழுத்தலைமையையும் முதன் ஆதரவாளராக விளங்கினர்.

மரியாதையையும் பெறுகின்ற இளையாத்தக்குடி நகரத்தா (பட்டிண சுவாமியும் ஒக்கூருடையாரும்)ருடன் நேமம் கோயிலாரும், இன்னொரு பாண்டியனான குல சேகர பாண்டியனுடன் தொடர்புடைய வராய்க்குல சேகரபுரத்தார் என்று திகழ்ந்தனர் இவற்றை நோக்கினால், வயிரவன் கோயில் நகரத்தாரும் மாத்தூர் நகரத்தாரும்'வீரபாண்டியபுரம்' என்பதன் கீழ் ஒன்றாக இருந்தமையைத் தெளிவாக அறியமுடிகிறது.

## இராசநாராயணபுரம்

இராசநாராயணபுரம் இரணியூர், பிள்ளையார்பட்டிக்குரியது. புரம் என்று எண்ணும் ஐந்துபிரிவில் இதுவே காலத்தால் பிற்பட்டது. குல சேகரபுரத்தின் உட் பிரிவான திருவேட்பூருடையார்க்கு உரியது.

விளைநிலங்களை மையமாகக் கொண்டு சிறுசிறு குடியிருப்புகள் பழைய காலத்தில் அமையும். இவற்றில் சில ஓரின மக்கள் ஒருங்குகூடி வாழுமிடங்களாகி விடுகின்றன. இத்தகைய சிற்றூர்களே பண்டுமிகுதி. இவ்வாறு உருவான குடியிருப்புகளே திருவீங்கைக்குடி, மருதங்குடி போன்றவை. மருதங்குடி என்ற பழமையான பெயரும் குடியிருப்பும் இன்றும் உள்ளது. ஈங்கைக்குடி மலையில் தான் தேசி(க) விநாயகர் என்ற கற்பக விநாயகர் கோயில் குடையப்பட்டிருக்கிறது. ஈங்கைக் குடிக்கு இராசநாராயணபுரம் என்ற பெயர் கி.பி. 1270 முதல் காணப்படுகிறது. (சா.கணேசன்-பிள்ளையார் பட்டித்தல வரலாறு. க.வெ.எண்7) ஈங்கைக்குடி, மருதங்குடி என்ற இரண்டு பெயர்களுக்குப்பின் வந்தது இராசநாராயணபுரம். கான நாட்டுக்காரிகுடி ஐந்நூற்றுவப் பெருந்தெருவில் இருந்து மருதங்குடியில் ஒருபகுதியை விலைக்கு வாங்கி இராசநாராயணபுரம் என்று கி.பி. 1202 இல் பெயரிட்டுக்குடியேறினர். (சா.கணேசன். கவெ எண்9) அது முதல் இராசநாராயணபுரம் என்று இவ்வூர் பெயர் பெற்றது.

நகரத்தார் கோயில் பிரிவுகளில் நகரத்தார்கள் வைத்த பெயர் இராசநாராயணபுரம்; பிறபெயர்கள் யார்வைத்தன என்றோ எவ்வாறு வந்தன என்றோ அறிய முடியவில்லை. நகரத்தார்கள் வைத்த பெயர் என்பதால் தான் இராசநாராயணபுரம் என்ற பெயர் மக்கள் வழக்கில் வழங்கவில்லை; நகரத்தார்கள் அதனைவிடாமல் பின்பற்றி வருகின்றனர்.

சூரைக்குடி, வேலங்குடி என்ற இரண்டுமே தேசிகநாராயணபுரம் எனப் பெறும். திருவேட்பூருடையார் இராசநாராயணபுரம் என்று வைத்துள்ளமை இப்பெயருடன் ஒப்பு நோக்கற்குரியது. 'இராச' என்பது அரசத்தொடர்பைக் காட் டுவது. தேசிக என்பது ஆசிரியர் அல்லது வணிகர் என்பதைக் குறிக்கும். தேசிக நாராயண என்ற பெயர் திருக்கோட்டியூர்த் திருமாலுக்குரிய பெயர் என்பர். 'தேசிகநாதர்' என்ற சூரைக்குடிச் சிவபெருமான் பெயரும் ஒப்பிடற்பாலது. பிரான் மலைக் கல்வெட்டில் பல வணிகக்குழுக்கள் இடம் பெறுகின்றன. அவற்றுள் இரண்டு:

1. புறமலை நாட்டுப் புதுத்தெருவானா சேரநாராயணபுரத்து நகரத்தார்.

2. கேரளசிங்க வள நாட்டு அளகாபுரமான செழிய நாராயண புரத்து நகரத்தார்.

இவற்றை நோக்கும் போது திருமாலை முதன்மை ப்படுத்திச் சில வணிகர்களும் இருந்திருக்கின்றனர். என்பது தெளிவுபெறும்.

இவ்வாறு நகரத்தாருடைய 'புரம்' என்று முடியும் பெயர்களால் சில வரலாற்றுண்மைகள் வெளிப்படுகின்றன.

## நகரக்கோயிலிருப்பிடம்

நகரத்தார்களின் திருமணத்தில் எழுதும் இசைகுடிமானத்தில், வழிவழியாகச் சில தொடர்கள் எழுதப்பட்டுவருகின்றன. அந்தத் தொடர்கள் ஒவ்வொரு கோயிலுக்கும் வெவ்வேறானவை. அந்தத் தொடர்களைக் கொண்டே, அவர்கள் இன்ன கோயிலார் என்பதை அறிட முடியும். இளையாத்தக்குடிக்கோயிலார், இரணியூர்க் கோயிலார், பிள்ளையார்பட்டிக் கோயிலார் ஆகிய மூவரும் கல்வாசல் நாட்டில் என்று எழுதுவர்.

## கல்வாசல் நாடு

நகரத்தார்களின் முதற்கோயிலான இளையாத்தக்குடி, இம்மரபினரின் மிகப் பழமையான இருப்பிடம். இளையாத்தக்குடி, கல்வாசல் நாட்டைச் சேர்ந்தது. ஒரு காலத்தில் இளையாத்தக்குடிச் சமீன் இருந்தது. இளையாத்தக்குடி நித்திய கல்யாணி உடனாய கைலாசநாதர் கோயிலின் பெரும்பகுதி கல்லாப் பேட்டைச் சமீன் மரபினரால் கட்டப்பட்டது. இளையாத்தக்குடியைக் குலசேகரபுரம் என்று நகரத்தார்கள் சொல்லுவர். இப்பெயர் இராங்கியம் சிவன் கோயில் கல்வெட்டில் காணப்படுகிறது.

'கல்வாசநாட்டு குலசேகரபுரத்து
ஒக்கூருடையான் வணிக ராமர்' (புசக 796)

என்பன கல்வெட்டுவரிகள். இதன் காலம் கி.பி. 1456. இங்கு இளையாத்தக்குடி, குலசேகரபுரம் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

கல்வாசல் நாட்டில் பில்லமங்கலம், இளையாத்தக்குடி, செவ்வூர், கீரணிப் பட்டி, நெய்வாசல், ஈழக்குடிப்பட்டி, ஆவினிப்பட்டி,, விறாமதி, முத்தூர் என்ற ஊர்கள் அடங்கியவை. கீரணிப்பட்டி முத்துமாரியம்மன் கோயில் தேர்த்திருவிழாவில் அனைவரும் கூடுவர். ·ஐயா, அம்பலம், நாட்டுக் கணக்கு என்று பலரும் குடைபிடித்துக் கொண்டு மேளதாளத்துடன் தேர் வடம் பிடிக்க வருவர். பாடுவார் முத்தப்பசெட்டியார்,

'மதியாகு சோலைநவ நிதிசேரு கல்வாச வளநாட்டிலினில் பிறந்த வாரி திகழ் புவியிலுயர் கீரணி நன்னகரில்" என்று அம்மையைத் துதிக்கும் பாடலில் கல்வாச வளநாட்டைச் சுட்டுவர்.

நாட்டாட்சி முறையில் நாடு, வளநாடு, கூற்றம் என்றெல்லாம் பிரிவுகள் உள்ளன. இன்று மாவட்டம், தாலுகா, வட்டம் என்று புதிய பிரிவுகள் வந்தாலும் மக்களிடையே பழைய பிரிவுகள் காணப்படுகின்றன. திருக்கோயில் திருவிழாக்களில் இந்த அடிப்படையில் தான் நாட்டார்கள் செயல்படுகின்றனர். இவ்வாறு பாண்டியர் ஆட்சியில் பிரிக்கப்பட்ட வளநாடே, கல்வாசல் நாடு.

இளையாத்தக்குடிக் 'கோயிலைக் கல் வாசல் வளநாட்டில்' என்று எழுதுவது உண்மையும் பொருத்தமுடையது. இரணியூர்க் கோயிலாரும் அவ்வாறு எழுதுவது பொருத்தம். ஆனால் கீழ்க் குண்டாற்று நாட்டுப் பிள்ளையார்பட்டிக்கும் 'கல் வாசல் நாட்டில்' என்று எழுதுவது பொருந்தாது; பழைய இளையாத்தக்குடிக்கோயில் மரபைத் தழுவிப் பிள்ளையார்பட்டி நகரத்தார்களும் எழுது கின்றனர்.

'கல்வாசல் பேட்டை' என்பது இன்று கல்லாப் பேட்டை என்ற ஊராகும். திருப்புனவாசல், அன்னவாசல், நெய்வாசல் என்பன போலக் கல்வாசல் என்ற பெயரும் ஊர்ப் பெயராய் அமைந்தது.

## கேரளசிங்க வளநாடு

மாத்தூர்க் கோயில், வயிரவன் கோயில், இரணியூர்க் கோயில், நேமம் கோயில் இலுப்பைக்குடிக் கோயில், வேலங்குடிக் கோயில் ஆகிய ஆறு கோயில்களிலும் 'கேரள சிங்க வளநாடு' என்ற பெயர் முதற்கண் வருகின்றது. இப்பெயர் திருக்கோட்டியூர்ப் பெருமாள் பெயரால் அமைந்தது என்றும் இராசராசனுடைய சிறப்புப் பெயரால் ஏற்பட்டது என்றும் தெரிகிறது. இப்பெயர் இப்பகுதியை ஆட்சி புரிந்தவர்கள் வைத்த பெயர்.

நகரத்தார்களிடையே வழங்குவனவற்றுள் கல்வாசல் நாடு, நாட்டுப் பிரிவுகளிடையே இன்றுமுள்ள நாட்டுப் பிரிவாகும். கேரள சிங்க வளநாடு என்பது இப்பகுதியை ஆண்ட மன்னர்களாலிடப்பட்ட பெயர். இன்று இப்பெயர் வழக்கிழந்து விட்டது. நகரத்தார்கள் மட்டும் இதனை எழுதி வருகின்றனர். திருக்கோட்டியூர்ப் பெருமாள் 'கேரள சிங்கப் பெருமாள்' என்ற பெயரினர். இவருக்கு இன்னொரு பெயர் 'சொக்க நாராயணப் பெருமாள்.' கேரள சிங்கன் என்பது இராசராசனுடைய சிறப்புப் பெயர்களுள் ஒன்றாகும். அவன் பெயரால், ஆட் சியாளர்களால், அமைக்கப்பட்ட பெயர் இப்பெயர் என்பதும் ஏற்றுக் கொள்ளத் தக்கது. கல்வாயில் நாடு அல்லது கல்வாசல் நாடு, கேரள சிங்க வளநாடு என்ற பெயர்கள் அரசு ஆவணங்களில் கையாளப்பட்ட அரசின் பெயர்களேயாகும். அதனையே நகரத்தார்கள் தங்கள் திருமண இசைகுடிமானம், திருமண அழைப்பு ஆகியவற்றில் பயன்படுத்தியிருக்கின்றனர்.

ஒன்பது நகரக் கோயில்களிலும் கல் வாசல்நாடு, கேரள சிங்க வளநாடு என்ற இரண்டு நாடுகளே பயன்படுத்தப்பட்டிருக்கின்றன. இதனால் என்ன தெரிந்து கொள்ள முடிகிறது? கல்வாயில் நாடு, கேரள சிங்க வளநாடு என்ற இரண்டு நாடுகளின் நிலப்பரப்பிலேயே நாட்டுக் கோட்டை நகரத்தார்கள் வாழ்ந்திருக்கின்றனர். இன்று புதுக்கோட்டை, சிவகங்கை மாவட்டங்களில் நகரத்தார்களின் ஊர்கள் இருக்குமாறே அன்றும் இருந்திருக்கிறது. ஆட்சியாளர்கள் மாறிய போதும், நாடுகளின் பகுப்பு மாறிய போதும் நகரத்தார்கள் புதிய வற்றை ஏற்று எழுதவில்லை; தொன்று தொட்டு எழுதியதையே எழுதிவந்திருக்கின்றனர்.

## பிரம்பூர்நாடும் பாலையூர் நாடும்

நாட்டுப் பிரிவை அடுத்துக் கோயில் பெயரை நிறுத்தி எழுதும் பழக்கம் இளையாத்தக்குடி, வயிரவன் கோயில், இரணியூர், பிள்ளையார்பட்டி, நேமம், சூரைக்குடி ஆகிய கோயில்களில் உண்டு. மாத்தூர், இலுப்பைக்குடி, வேலங்குடி

ஆகிய மூன்று கோயில்களில் வளநாட்டை அடுத்து அதன் உட்பிரிவாகிய நாட்டைக் குறிப்பர்.

மாத்தூர் - பிரம்பூர் நாட்டில்
இலுப்பக்குடி -பிரம்பூர் நாட்டில்
வேலங்குடி - பாலையூர் நாட்டில்

இந்த எழுதுமுறை தொன்று தொட்டு இருந்து வருகிறது.

பிரம்பூர் நாட்டில், மாத்தூரும் இலுப்பைக் குடியும் அடங்கியன. மாத்தூரும் இலுப்பைக்குடியும் அருகருகேயுள்ள ஊர்கள். 'பிறம்பு நாடு' என்பதன் திரிபு பிரம்பூர் நாடு என்பர் அறிஞர் சோம லெ. இன்று பிரம்பூர் நாடு என்ற பிரிவு கிடையாது. மாத்தூரும் இலுப்பைக் குடியும் நூறாண்டுகளுக்கு மேலாக உஞ்சேனை நாட்டைச் சேர்ந்தவை. இரண்டு கோயில்களும் உஞ்சேனை நாட்டில் இருக்க, இன்று நகரத்தார் எல்லாரும் 'பிரம்பூர்' என்று எழுதிவருவது இவர்கள் பழையமரபை விடாப் பிடியாகப் பின்பற்றிவருவதையே காட்டும்.

பிரம்பூர் என்பது மாத்தூருக்கு அண்மையிலுள்ள 'பிரம்பவயல், என்பதாகும். அதனைத் தலைமையிடமாகக் கொண்டு 'பிரம்பூர் நாடு' அமைக்கப்பட்டிருக்கிறது.

வேலங்குடி, கோட்டையூரைச் சார்ந்தது. இன்றும் கோட்டையூர் வேலங்குடி என்பதே வழக்கு, வேலங்குடி, பாலையூர் நாட்டைச் சேர்ந்தது; இன்று பாலையூர் நாடு, பாலைய நாடு என்று அழைக்கப் பெறுகிறது. பாலையூர், கண்டனூர்க்கு அருகில் உள்ள ஊராகும். அவ்வூரின் பெயராலேயே இந்த நாடு அமைந்திருக்கிறது. கண்டனூர், கோட்டையூர், வேலங்குடி, பள்ளத்தூர் ஆகியன இதிலடங்கும். பழநி அறப்பட்டயங்களில் பாலையூர் நாடு சுட்டப்படவில்லை.

நகரத்தார்கள் கோயில்களை வகுத்துக் கொண்டு தங்கள் திருமண முறைகளை ஒழுங்குபடுத்தி எழுதிக் கொண்ட போது இருந்த வளநாடு, நாடு, ஊர் ஆகியன வற்றைத் தங்கள் ஆவணங்களில் எழுதினர். இப் பெயர்கள், இன்ன காலத்தில் இவை எழுதப்பட்டன என்பதைக் காட்டும் ஆதாரங்களாகும்.

## ஏழுகப் பெருந்திரு

இதனை அடுத்து கோயிலின் பெயர் இளையாத்தக்குடி, மாத்தூர், நேமம், இலுப்பைக்குடி, சூரைக்குடி, வேலங்குடி என்று வரும். ஆனால் வயிரவன் கோயிலில் மட்டும் வயிரவன் கோயில் என்ற பெயர்வாராது. அதற்கு ஈடாக 'ஏழகப் பெருந்திரு' என்ற தொடர் பயிலும். 'கேரள சிங்க வள நாடாகிய ஏழகப் பெருந்திரு வான' என்ற சொற்றொடர், கேரள சிங்கவள நாடும் ஏழகப் பெருந்திருவும் ஒன்று என்று கருதவைக்கிறது. 'கேரள சிங்க வள நாட்டில் ஏழகப் பெருந்திரு' என்றிருப்பது தான் பொருத்தம். அல்லது இரண்டுக்கு மிடையே வேறு சொல் இருந்து விடுபட்டு விட்டதோ? தெரியவில்லை.

## பழமை பேணல்

நாட்டுக் கோட்டை நகரத்தார்களில் வயிரவன் கோயில் நகரத்தார்,

``கேரள சிங்க நாடாகிய ஏழகப்
பெருந்திருவான வீரபாண்டிய
புரத்தில் கழனிவாசலுடையார் "

என்று தங்கள் மரபைத் திருமண இசைபிடி மானத்தில் எழுதிவருகின்றனர். இது மிக நெடுங்காலமாக எழுதி வரும் மரபுமாகும். கி.பி. 1542 இல் காளையார் கோயிலில் பொறிக்கப்பட்ட கல்வெட்டில் [ 183/ தெ. III ]

> ஏழகப் பெருந்தெருவான வீரபாண்டிய
> புரத்துக் கழனி வாயிலுடையார் அடைக்
> கலங்காத்தார் சிதம்பரநாதன்"

என்று வருகின்றது. இக்கல்வெட்டுச் சான்றால், ஏழகப் பெருந் தெருவான வீரபாண்டியபுரத்து என்று பிரிவைச் சுட்டுகிறது -- கோயிலைச் சுட்டுவது மிகப் பழைமையான மரபு என்று புலப்படுகிறது. நகரத்தார் இன்று எழுதுமாறே இவ்வாசகமும் எழுதப்பட்டிருக்கிறது.

வயிரவன் கோயில் நகரத்தார்கள் எழுதுவதுபோல மாத்தூர்க் கோயில் நகரத்தார்களும்

> ``கேரள சிங்க வளநாடாகிய பிரம்பூர்
> நாட்டில் மாற்றூரான வீரபாண்டிய
> புரத்தில் அரும்பாக்கூருடையார்"

என்று எழுதி வருகின்றனர். இவர்கள் தங்கள் கோயில் மரபுப் பெயரான --- மாற்றூரை (மாத்தூரை) --- இத்தொடரில் அமைத்திருக்கின்றனர்; பிற கோயிலாரும் தங்கள் கோயில் மரபுப் பெபரை எழுதுவர். வயிரவன் கோயில் நகரத்தார் தங்கள் கோயிலை எழுதும் போது,`வயிரவன் கோயில்' என்றோ வயிரவன்பட்டி என்றோ எழுதவில்லை. இவர்கள் `ஏழகப் பெருந்திருவான' வீரபாண்டிய புரம் என்று எழுதி வரமாத்தூர்க் கோயிலார் `மாற்றூரான வீரபாண்டிய புரம்' என்று எழுதிவருகின்றனர். இவ்வாறு இரு திறத்தாரும் எழுவதை ஒப்புநோக்கினால், கோயில் இருக்கும் இடப்பெயர் மாத்தூர்க் கோயிலார் எழுவதில் மட்டும் காணப்படுகிறது. வயிரவன் கோயிலார் எழுதுவதில் வயிரவன் கோயில் என்றோ வயிரவன் பட்டி என்றோ எழுதிவரவில்லை. வயிரவன் கோயில் நகரத்தார் `ஏழகப் பெருந்திருவான' என்று எழுதி வருவது அவர்கள் கோயில் இருக்கும் இடத்தைச் சுட்டுவதேயாகும். வயிரவன் கோயில் நகரத்தார்கள் இன்றும் தங்களுடைய மிகப் பழைய மரபை மாற்றாமல் தொடர்ந்து பின் பற்றி வருகின்றனர்.

வயிரவன் கோயில் அல்லது வயிரவன் பட்டி என்று எழுத வேண்டிய இடத்தில், அக் கோயிலார் `ஏழகப் பெருந்திரு' என்று எழுதி வருவதன் அடிப் படை என்ன ? வயிரவன் கோயில் என்று இன்று சொல்லும் வழக்கிற்கு ஈடாக முற்காலத்து `ஏழகப் பெருந்தெரு' என்பதே ஆட்சி பெற்று எழுதப்பட்டிருக்கிறது. இன்று வயிரவன் கோயிலார் என்று அழைக்கப் பெறும் நகரத்தார்கள் தொன்று தொட்டு `ஏழகத்தார்' என்றே கொண்டாடப் பெற்றனர்.

### வயிரவன் கோயில் தனியாட்சி

`ஏழகத்தார்' என்ற பெயர் நாட்டுக்கோட்டை நகரத்தார் அனைவரையும் குறிக்கும் என்று சிலர் கருதுகின்றனர். இவர்கள் தொகை நிலையால் ஐந்நூற்று வராயினும் வகை நிலையால் ஏழுவகையார் என்றும் அதனால் இவர்கள் ஏழகத்தார்

என்று பெயர் பெற்றனர் என்றும் எண்ணுகின்றனர். இந்த முடிவுக்கு வருவதற்குப் போதிய ஆதாரங்கள் இல்லை.

`ஏழகத்தார்' என்பது நகரத்தார் அனைவருக்கும் பொதுப் பெயராக இருந்தால், இப்பெயரை அனைவரும் தொன்று தொட்டுப் பயன்படுத்தி வந்திருப்பார். நகரத்தார் அனைவரும் `இளையாத்தக்குடி நகரத்தார்' என்று அவர்கள் முதற்கண் தங்கிய ஊர்ப் பெயராலும் மூலக் கோயிலாலும் தான் கல்வெட்டுக்களிலும் இலக்கியங்களிலும் பேசப்பட்டிருக்கின்றனர். `ஏழகப் பெருந்தெரு' கையாளப் படவில்லை என்பதை இங்கு நோக்க வேண்டும்.

`ஏழகப் பெருந்தெரு' என்பது நகரத்தார்களின் உட்பிரிவான வயிரவன் கோயிலாரையே குறிப்பதாகும். பழைய குறிப்புகளில் வயிரவன் கோயில் நகரத்தார் இருக்குமிடம் `ஏழகப் பெருந்தெரு' என்று இயம்பப் பெற்றிருக்கிறது.

பழைய பெயர் `ஏழகப் பெருந்தெரு' என்றிருக்க இவர்களை `வயிரவன் கோயிலார்' என்றழைக்கும் மரபு எப்போது உருவானது ? நகரத்தார்கள் `பிறவாயாக்கைப் பெரியோனாகிய' சிவபெருமானையே வழிபடுகின்ற சிவகோத்திரத்தவர்கள்; அவர்கள் சிவ பெருமானை வணங்குதலையும் தேக்கு மரத்தால் வீடு கட்டுதலையும் மரபாகக் கொண்டவர்கள்

## வயிரவன் கோயிலாதல்

வடிவுடையம்மை உடனாயவளரொளியீசரைப் போற்றிவந்த சிவன் கோயிலில், சிவ பெருமானுக்குத் தான் முதன்மை. ஆனால் அம்முதன்மை, வயிரவருக்கு மாறியது எப்போது ? சிவன் கோயிலமைப்பில், வயிரவருக்குரிய இடம் அமைவதை பொறுத்து அதற்கு உச்சாடணம் மிகுதி. வயிரவன்பட்டி வயிரவன் கோயிலால், வயிரவர் கருவறை அமைந்திருக்கும் இடத்தை நோக்குக. இரண்டாவது கோபுர வாயிலில் வயிரவரைப் பிரதிட்டை செய்ய வேண்டும் என்பது ஆகமத்துணிபு (சிவஸ்ரீ. சி. சுவாமிநாத சிவாசாரியர் : 1977). ஆனால், வயிரவன்பட்டியில் இவ்வாறு அமையாமல், அம்மன் கருவறை அமைய வேண்டியதானத்தில் வயிரவர்கருவறை அமைந்திருக்கிறது. வயிரவருக்குச் சிவபெருமான் மைந்தன் முருகப் பெருமான் போல முதன்மை கொடுக்கப்பட்டுச் சம்பாசஷ்டி விழாவும் கொண்டாடப்படுகிறது. செட்டிநாட்டிலுள்ள சிவன் கோயில்களில் கந்த சஷ்டி விழாவுக்குப் பதிலாகச் சம்பாசஷ்டி விழாக் கொண்டாடப்பெறும். வயிரவமூர்த்தி எழுந்தருளிச் சம்பாசுரனை அழிப்பது பத்துநாள் திருவிழாவாகும். இவ்விழா சீரும் சிறப்பு மாக நடை பெற்ற திருக்கோயில்களில் வயிரவன் கோயிலும் ஒன்று. இதனால் வயிரவமூர்த்தியைச் சிறப்பாகக் கொண்டாடும் போக்குத் தோன்றி வளர்ந்துவிட்டதை அறியமுடியும்.

செட்டிநாட்டில், திருப்பத்தூர், கண்டனூர், திருமா, வயிரவன்பட்டி, இலுப்பக்குடி, மாத்தூர், சாக்கோட்டை, சிறுபெருச்சியூர் ஆகியன அஷ்டவயிரவத்தலங்கள். கோயிலைக் கும்பிட்டவர்களும் வயிரவரைச் சிறப்பான அபிடேகங்களாலும் வழிபாடுகளாலும் கொண்டாடத் தொடங்கினர். இவ்வண்ணம் சிறுகச் சிறுகச் சிவனுடைய உருவபேதமான வயிரவருக்கு அருள் பொழியும் பெருமை சேர `ஏழகப் பெருந்தெரு' வயிரவன் கோயிலாயிற்று. திருப்பெருந்துறை, ஆவுடையார் கோயில் என்றும் மருதங்குடி பிள்ளையார்பட்டி என்றும் பெயர் பெற்றமை போல இவ்வூரும் வயிரவன் பட்டியாகியது.

பழநிநகரத்தார் அறப்பட்டயங்களில் வயிரவன் கோயிலைச் சொல்லுமிடங்களில்`வயிரவன் கோயில்' என்ற பெயர் காணப்படவில்லை. அதற்கு ஈடாகப்`பெருந்திருவான் கேரள சிங்க வளநாடு வீரபாண்டியபுரம்' என்று எழுதப் பெற்றிருக்கிறது. `பெருந்திருவான்' என்பது `பெருந் தெருவான்' என்பதேயாகும்.`ஏழகம்' என்பது நகரத்தாரனைவர்க்கும் பொதுப் பெயர் என்று தவறாகக் கருதி எழுதப் பெறாமல் விடப் பெற்றிருக்கிறது. `ஏழகம்' என்ற பெயர் ஏழூர் நகரத்தார் என்று பொருள்தரும் வண்ணம் உள்ளமையாலேயே இக்குழப்பம் விளைந்திருக்கிறது. எனினும் இப்பட்டயங்களில் `ஏழகப் பெருந்தெருவான' என்பதே வயிரவன் கோயில் நகரத்தாரைக் குறிக்கும் தொடராக அமைகின்றது.

பதினெட்டாம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்த பாடுவார் முத்தப்பர், திருமுக விலாசத்தில்

``வடிவாரும் பேட்டை வளரொளியோர் மிக்க
வடிவுடையா ளைப் பணியும் மாண்பார்........" [203]

என்று வயிரவன் கோயில் நகரத்தாரைப் பாடுகின்றார். இவ்வருட் புலவர், வயிரவரை முதன்மைப் படுத்தாது சிவ பெருமானையே முதன்மைப் படுத்திப் பேசியிருக்கின்றார். இவர் வயிரவன் கோயில் இருக்குமிடத்தைப் `பேட்டை' என்று இயம்புவர். இச் சொல் மாராத்தியச் சொல். வணிக வண்டிகள் வந்து கிடக்கும் புறநகரையே இச் சொல் உணர்த்துகிறது. எனவே இன்றைய வயிரவன்பட்டியைப்`பேட்டை' என்று சொல்லும் வழக்கு, பிற்காலத்தில் இருந்திருக்கிறது. இச் சொல் பிற்காலத்தியது என்றாலும் இச் சொல்லுணர்த்தும் பொருள், நகரத்தார்களின் வணிகத் தொடர்பைக் காட்டுவதாக மிளிர்கின்றன.

பழநி, நகரத்தார் அறப்பட்டயங்கள் எல்லாவற்றிலும் `பெருந்திருவான்' என்று வயிரவன் கோயில் நகரத்தார் பேசப் படுகின்றனர்;`மிகுந்த செல்வத்தையுடையவர்கள் என்ற கருத்தில் இத் தொடர் அமைந்திருக்கிறது. பழநி, நகரத்தார் அறப்பட்டயங்களில் கி.பி. 1670 ஐ ச் சார்ந்த பட்டயம் `வயிரவன் கோயில் முத்து வடுகன் செட்டி வீரப்பன்' என்று ஒருவர் குறிக்கப்பட்டிருக்கிறார். `வயிரவன் கோயில்' என்று இக்கோயிலாரைச்சுட்டும் வழக்கிற்கு இதுவே முதல்சான்று. இங்குச் செட்டியார் பெயரில் வயிரவரின் பரியாய நாமமான `வடுகன்' என்ற பெயரும் வருகின்றது. இவ்வாறு காலந்தொறும் வயிரவர் வழிபாடு வலிவு பெற்றுப் பேச்சுவழக்கில் `வயிரவன் கோயில்' என்றும் எழுத்து வழக்கில் `ஏழகப் பெருந்திரு' என்றும் வழங்கியிருக்கின்றது. பதினெட்டாம் நூற்றாண்டின் பிற் பகுதியில்தான்`வயிரவன் கோயில்' என்று அழைக்கும் வழக்கம்மிகுந்தது.

## உட்பிரிவுமட்டும் சுட்டுதல்

நகரத்தார்கள் வளநாடு, இடம் எல்லாம் சொல்லிய பின்னர் கோயிலுட் பிரிவைக் கூறுவர். கி.பி. 1458 இல் பொறிக்கப்பட்ட குளியிறைக்கு அருகிலுள்ள செவலூர்க்கல்வெட்டில்,`கழனிவாசலுடையான் செழியதரையன்' என்று நகரத்தார் ஒருவர் சுட்டப்படுகிறார். கழனிவாசலுடையான் என்ற பிரிவு, வயிரவன் கோயிலின் உட்பிரிவாகும். கி.பி. 1542 இல் காளையார் கோயிலில் பொறிக்கப்பட்ட கல்வெட்டில், `ஏழகப் பெருந்தெருவான வீரபாண்டியபுரத்து கழனிவாயிலுடையான் அடைக்கலங்காத்தார் சிதம்பரநாதன்' என்று பொறிக்கப் பட்டிருக்கிறது. கி.பி.

1458 இல் இல்லாத மரபு கி.பி. 1542 இல் காணப் படுகிறது. இதனால் கோயிலைச் சொல்லாமல் உட்பிரிவை மட்டும் சொல்லுகின்ற பழக்கமும் உண்டு என்று தெரிகின்றது.

## வணிகநிலைகள்

ஏழகம், வீரபாண்டியபுரம் என்பனபோலப் `பெருந்தெரு' என்பதும் நகரத்தார்களுடைய வணிகச் சிறப்பைக் காட்டுவதாகும். வணிகர்கள், தாங்கள் கொள்முதல் செய்த பொருள்களுடனும் ஊர் திகளுடனும் காவலுடனும் குழுக் குழுவாகப்பல இடங்களுக்குப் போய் வணிகம் புரிந்தனர். இத்தகைய குழுக்களைச்`சாத்து' என்று கூறுவது மரபு. வணிகர்கள் ஊருக்குள் வந்து வணிக மையம் அமைத்து வணிகம் செய்தனர். இவற்றில் சில நிலையானவை; வேறு சில வாரம் தோறும் கூடுபவை. பல்வேறு தகுதிகளில் பல்வேறு வகையாக இந்த வணிகக் களங்கள் அமைத்துக் கொள்ளப்பட்டன. வணிகக்களத்தின் தகுதிக்கும் அமைப்புக்கும் நிலைக்கும் ஏற்ப வெவ்வேறு பெயர்கள், வணிகர்களால் அளிக்கப்பட்டன. வணிகக் களத்தின் பெயரைச் சொன்னால் அதன் நிலைமை தெளிவுறும். அய்யம் பொழில், நகரம், பட்டினம், வீரபட்டினம், எறிவீர பட்டினம், நியமம், பெருந்தெரு, புரம் என்று பல்வேறு பெயர்கள் வணிகமையங்களுக்கு வழங்கியிருக்கின்றன. இஃது எல்லா வணிகக் குழுவிற்கும் பொதுவான பண்பு.

வணிகம் செய்யவும், அங்கு வணிகத்தால் வரும் வருவாயை ஊர் நன்மைக்குச் செலவு செய்யவுமே வணிகர் குழு வணிகக்களத்தை அறிவிக்கின்றது. முதலாம் இராசேந்திரன் காலத்தில் பொன்னேரி வட்டத்திலுள்ள அய்யப்புழல் (அய்யம் பொழில்) காட்டூரை வணிகர்கள் ஒரு வீரபட்டினமாக அறிவித்து நன்மைகள் செய்திருக்கின்றனர். எனவே அய்யம் பொழிலை விடக் கூடுதல் தகுதியுடையது வீரபட்டினம் என்று புலனாகும். இந்த இடங்கள் வீரர்களின் காவலில் இருந்தவை. வணிகர்கள் எங்காவது ஓரிடத்தில் கண்காட்சி போலப் பொருள்களை வைத்து வணிகம் செய்குவர். அவ்வாறு வணிகம் செய்யும் இடம் `நியமம்' என்று பெயர் பெற்றது. பெருந்தெரு என்பதும் நியமம் என்பதும் ஒன்றே. நார்த்தாமலை ஒரு நகரமாகவும் கொடும்பாளூர் ஒரு மணிக்கிராமமாகவும் குன்றக்குடியை அடுத்த இளநலம் ஒரு நியமமாகவும் காளையார் கோயில், காளையார் காவல் பெருந் தெரு வாகவும் பில்லமங்கலம் அழகாபுரி அரசநாராயணப் பருந்தெருவாகவும் குளிபிறைக்கு அருகிலுள்ள சுந்தரம் தேசியுகந்த பட்டினமாகவும் விளங்கின. இங்கு வணிகர்கள் வணிகம் செய்ததுடன் ஊரில் குடியிருந்தும் ஊர் நலனில் ஆர்வங்காட் டியுமிருந்தனர். இவ்வாறு தலை சிறந்த வணிகக் களமாகப் பொலிந்த ஓரிடமே ஏழகப் பெருந்தெரு.

## பெருந்தெரு–பெருந்திரு

சிலப்பதிகாரத்துக்கு உரை எழுதிய அரும்பதவுரையாசிரியரும் அடியார்க்கு நல்லாரும் `பெருந்தெரு' என்பதைத் தம் உரையிடைக்குறித்திருக்கின்றனர். மாதவிக்கு மன்னன் அளித்த மாலையைக் கூனி நகர நம்பியர் திரிதருமறுகில் விலை கூறுவது போல நின்றாள். அப்போது கூனியைக் கண்டே கோவலன் மாதவியொடு தொடர்பு கொண்டான். கூனி நின்ற இடத்தை `நகர நம்பியர் திரிதரு மறுகு' என்பர் இளங்கோவடிகள். இதற்கு அரும்பதவுரையாசிரியர்,

`கூனிகைக் கொடுத்து நகரியிற் பெருந் தெருவிலே விலைக்கு விற்பாரைப் போல்வதோர் பண்பினாலே [3: 178உரை]என்று எழுதுவர். இதனையே அடியார்க்கு நல்லாரும் எழுதியுள்ளார். எனவே ஒரு சிறந்த வணிகக் களத்தைப் `பெருந் தெரு' என்று அழைக்கும் வணிக மரபு அரும்பதவுரையாசிரியர் காலத்திலிருந் துள்ளது. அப்பகுதி காவிரிப்பூம்பட்டினத்தில் இருந்திருக்கிறது.

வயிரவன் கோயில் நகரத்தார் தங்கள் கோயிலை உணர்த்த `ஏழகப் பெருந்திரு' என்ற தொடரைப் பயன்படுத்துகின்றனர். சிலப்பதிகாரத்தில் `மாதரோ பெருந்திரு வுறுக' [25: 113] என்று வருகிறது. சிந்தாமணி `பெருந்திருவி[1969:4] என்றுரைக்கும். `திரு' என்பது மங்கலச் சொல்லாம், செல்வம்தரும் திருமகளைச் சுட்டும் நற்சொல். அதனால் `ஏழகப் பெருந்திரு' என்ற தொடர்மிகுந்த செல்வத்தையுடைய ஏழகத்தார் என்று பொருள் பயப்பதாகும். மங்கலமும் வளநலமும் பொருந்திய தொடராக இத் தொடர் ஏற்றம் பெற்றிருக்கிறது. பழநி அறப்பட் டயங்களில், இதனைப்`பெருந்திருவான்' என்று எழுதியுள்ளனர். இச் சொல் குபேரனைப் போன்ற செல்வத்தினர் என்பதைக் காட்டும். `ஏழகப் பெருந்தெரு' என்பதே பழைய சொல் வழக்கு; தெரு என்பது திரு என்று மாறிற்று. எகரம் இருக்கும் இடத்தில் இகரமாக மாறுவது இயல்பு. ஒலி மாற்றத் தாலும் பொருட் சிறப்லும் பெருந்தெரு என்பது பெருந்திரு என்று மாற்றும் பெற்றிருக்கிறது.

## மரபு விடுதல்

`ஏழகப் பெருந்தெரு' என்பது போலப் பெருந்தெரு என்று போற்றப் பெற்ற மற்றொரு கோயில் இளையாத்தக்குடிக்கோயில். காளையார் கோயிலில் கி.பி. 1511 பொறிக்கப்பட்ட கல் வெட்டில் `கல்வாயில் நாட்டு இளையாற்றங்குடியான குலசேகரபுரத்துக் காளையார் காவற் பெருந்தெருவில் திருவேட்பூருடையான்' [182/தொகுதி 8] என்று வருகின்றது. திருவேட்பூருடையார், இளையாத்தக்குடிக் கோயிலின் உட்பிரிவினர்; இவர்களே இரணிக்கோயிலாகவும் பிள்ளையார்பட்டியாகவும் பெருகினர். இளையாத்தக் குடிக் கோயிலார் `காளையார் காவற் பெருந்தெரு' என்று வழங்கினர். திருக்கானப் பேரெயிலான காளையார் கோயில் சிவபெருமான் காக்கின்ற வணிகக்களம் என்று இத்தொடர் பொருள் தரும். இந்த இரண்டு கோயில்களில் காணப்படும் ' பெருந் தெரு' என்ற பகுப்பு, ஏனைய கோயில்களிலும் இருந்தனவா என்பது ஆராய்தற்குரியது.

இளையாத்தக்குடிக்கோயிலின் பிரிவாக இருந்த பிள்ளையார்பட்டிக்கோயிலார் மருதங்குடியாகப் பெற்ற போது அதனை இராசநாராணபுரம் என்று பெயரமைத்துக் குடியேறினர். அவர்கள் தனியே வளர்ந்த போது `காளையார் காவல் பெருந்தெரு' என்று எழுதுவதை விட்டு விட்டனர்.

## படைப்பொறுப்பு

`ஏழகப் பெருந்தெரு' என்பது வயிரவன் கோயில் நகரத்தார்களுக்கே உரியது. நகரத்தார் அனைவரும் ஒன்றாக இருந்த போது, வணிகக் குழுவைத்திருந்த படைப் பொறுப்பை ஏற்று மேற்பார்வையிட்டுப் படையைக் கட்டுப் படுத்திப் பேணியவர்கள் ஏழகப் பெருந்திருவினரே. எனவே அந்தப்படை `ஏழகப்படை' என்று அழைக்கப்பெறலாயிற்று.

## ஏழகத்துப் பழைமை

ஏழகம்' பற்றிய பல செய்திகளைத் தமிழிலக்கியங்களால் அறிந்து கொள்ள முடிகிறது. ஏழகப் பகுதி காடும் காடு சார்ந்த பகுதியுமாய் உயிரினங்கள் செழித்து வாழ்வதற்குத்தகுதியுடைய தாய் விளங்கியது. அப்பகுதியின் இயற்கைச் சூழ்நிலை இன்றும் அவ்வாறே இருக்கின்றது. ஏழகத்தில் வளர்ந்த வெள்ளாடுகள் மிகச் சிறந்தவை; மக்களால் மனைகளில் வளர்க்கப் பெற்றவை. மக்கள், முதன் முதலாக வளர்த்துப் பெருக்கிய விலங்கினம் ஆடு. தமிழிலக்கியங்களில், ஏழகத்து மண்ணில் வளர்ந்த ஆடுகளைப் பற்றிய குறிப்புகள் உள்ளன.

வணிகர் குலக் கோவலனுடைய காவிரிப்பூம்பட்டினத்து மனையில் வளர்க்கப்பெற்ற உயிரினங்களில் ஏழகத்தகரும் ஒன்றாகும். கோவலன் பூம்புகாரில் செல்வச் செழிப்போடும் புகழோடும் வாழ்ந்தான். அவன் தரை வணிகம் செய்த மாசாத்துவான் மகன். காவலன் கண்ணகியைக் கூட்டிக் கொண்டு புகாரை விடுத்து மதுரைக்குப் புறப்பட்ட போது, அவன் அன்புக்குரியவையாக வளர்த்த உயிரினங்கள் எல்லாம் கண்ணில் தெரிகின்றன. இதனைச் சிலப்பதிகாரம்,

``ஏழகத் தகரு மெகினக் கவரியும்
தூமயி ரன்னமுந் துணையெனத் திரியும்
தாளொடு குயின்ற தகைசால் சிறப்பின்
நீணெடு வாயி னெடுங்கடை கழிந்தாங்கு"

[நாடுகாண் காதை : 5 --8]

என்று இயம்புகின்றது. ஏழகத்தகர், எகினக்கவரி, அன்னம் என்ற மூன்று உயிரினங்களும் கோவலன் வளர்த்தன. வீடுகளில் தகர் (ஆட்டுக்கிடாய்) வளர்ப்பது இன்று முள்ளது. புதிய பொருள்களையும் சிறந்த பொருள்களையும் உயிரினங்களையும் வணிகத்துக்குப் போகுமிடங்களிலிருந்து கொண்டு வந்து வளர்ப்பது, வணிகர்களுக்கு இயற்கையிலேயே அமைந்த பண்பாகும். அதனால் தரை வணிகம் செய்த கோவலன் மனையில் ஏழகத்தகர் இருந்தது இயல்பான ஒன்றே.

சிலப்பதிகார காலத்திலேயே, ஆட்டுக்கிடாயின் ஓரினம் `ஏழகத்தகர்' என்று புகழ் பெற்றிருக்கிறது. இதற்கு உரை எழுதிய அரும் பதவுரையாசிரியர் `மேழகத்தகர்' என்று எழுதுவர். ஏழகம், மேழகம் என்பன ஒன்றையே குறிக்கும்.

## பத்துப்பாட்டுணர்த்து முண்மை

சிலப்பதிகாரத்துக்கு முந்திய சங்கவிலக்கியங்களிலும் ஏழகத்தகர் பற்றிய செய்திகள் காணப் படுகின்றன. பத்துப் பாட்டுள் இரண்டு பாடல்கள் பாடிய கடியலூர் உருத்திரங் கண்ணனார், பட்டினப் பாலையில் `ஏழகத்தகரை'ச் சுட்டு கின்றார்.

``பொதி மூடைப் போரேறி
மழையாடு சிமைய மால்வரைக் கவாஅன்
வரையாடு வருடைத் தோற்றம் போலக்
கூருகிர் ஞமலிக் கொடுந்தா ளேற்றை
யேழகத் தகரோ டுகளு முன்றில்"

[பட்டினப் பாலை அடி 137 -141 ]

என்று `ஏழகத்தகர்' சுட்டப்படுகின்றது. இந்நூலின் முற்பகுதியிலும்`மேழகத்தகரொடு' [அடிகள் 77] என்ற குறிப்பு வருகிறது. பூம்புகாரிலுள்ள பண்டகசாலை முற்றத்தில் ஆண் நாய்கள், ஏழகத்து ஆட்டுக்கிடாய்களுடன் குதித்துத் திரிகின்றன; பண்டசாலைகளில் ஆட்டுக் கிடாய்கள் துள்ளித் திரியுமாறு, பரதவர்பூமலி பெருந்துறையிலும் ஏழகத்தகர்கள் கவுதாரிப்பறவைகளுடன் விளையாடுகின்றன. இங்கு `மேழகத்தகர்' என்றே பாடமுள்ளது; மேழகம், ஏழகம் ஒரு பொருட் பன்மொழியே என்பதை `மே' என்று ஏடு பெயர்த்து எழுதியவர் எழுதியிருக்கலாம்; பட்டினப் பாலை அடி எண் 141- இலும் பெரும் பாணாற்றுப் படையிலும் `மேழகம்' என்று வருகிறது. இதனை `மேஷகம்' என்பதன் திரிபாகக் கருதுவர். மேஷம் மேழம் என்று வருமாறு `ஏழகம்' என்ற தமிழ்ச் சொல் ஆட்டினம் குறிப்பது கொண்டு `மேஷகம்' என்பதன் திரிபாய்க் கொண்டனராதல் வேண்டும். இம்மாறாட் டத்தால் ஏடெழுதியோர் `ஏழகம்' என்பதை `மேழகம்' என்று எழுதலாயினர்.

இவர் பாடிய பெரும்பாணாற்றுப்படையிலும்
``நெல்லுழு பகட்டொடு கறவை துன்னா
மேழகத் தகரோ டெகினங் கொட்டும்"

[ அடிஎண் 325 --326]

என்று நெய்தல் பட்டினத்தில் ஆட்டுக்கிடாய் விளையாடுதலைச் சுட்டுவர். இக் குறிப்புகளை நோக்கு போது, ஏழகம் என்ற இடம் ஆட்டுக் கிடாய்க்களுக்குப் புகழ் பெற்றிருந்தது என்று புலனாம். இன்று கன்னபுரம் காளை, காங்கேயம் காளை, ஆலம்பாடி மாடு என்பன போலச் சங்ககாலத்தில் ஏழகத் தகர் வீரமுடைய தாயும் வீடுகளில் வளர்க்கத் தக்கதாயும் விளங்கின.

பூம்புகாரிலும் பிற கடற்கரைப் பட்டினங்களிலும் சங்ககாலந்தொட்டு ஏழகத்தகர்கள் இருந்தமையைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் குறிப்புகள் வெளிப்படுத்துகின்றன. சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள் கூறுவனவும் இதையே வலியுறுத்துகின்றது. பண்டு முதல் ஏழகம் பாண்டிய நாட்டில் புகழ் பெற்று விளங்கியதை இச் சான்றுகளால் அறிய முடிகின்றது.

பின் வந்த உரையாசிரியர்கள் காலத்தும் இவை வழக்கில் இருந்தமையை உரைகள் காட்டுகின்றன. இவ்விலக்கிய குறிப்புகள், ஏழகத்தின் பழமையை உள்ளங்கை நெல்லிக்கனி என மெய்ப்பிக்கின்றன.

### ஏழகம் எங்கே உள்ளது ?

ஏழகம் என்பது மதுரைக்கு அருகிலுள்ள ஏடகம் (திருவேடகம்) என்னும் ஊராக இருக்கலாம் என்று கருதினார் டாக்டர் ஹீல்ஷ். [தென்னிந்திய சாசனங்கள், மூன்றாம் பகுதி. பக்கம் 212 அடிக்குறிப்பு]. இக் கருத்தையே சோழர்வரலாறு எழுதிய அறிஞர் கே. என். நீலகண்ட சாஸ்திரியாரும் தம் அடிக்குறிப்பில் சுட்டினார். அறிஞர் தி. நா. சுப்பிரமணியன், ஏழகம் என்பது சங்க இலக்கியங்களில் காணும் ஏழில் என்றும் கொங்கணமே ஏழகம் என்றும் சப்த கொங்கணம் என்றும் வழங்குவது இதனை உணர்த்தும் என்றும் விளக்குவர்.

அறிஞர் கே.ஆர். ஸ்ரீ நிவாஸன் அவர்கள் புதுக்கோட்டை சமஸ்தானத்தில் கல்வெட்டாய் வாளராகப் பல ஆண்டுகள் பணியாற்றியவர். அன்னார் செட்டி நாட்டு வட்டாரப் பகுதி முழுமையையும் ஆராய்ந்து, ஏழகம் என்பது காரைக்குடிக்கு

அருகிலுள்ள கழனிவாசல் கோயிலூர்) என்பதே ஏழகமாகும் என்றார். [புதுக்கோட்டை சமஸ்தானச் சாசனங்கள், ஆங்கில மொழி பெயர்ப்பு. இரண்டாம் பாகம் பக்கம் 141, அடிக் குறிப்பு 62 ]. திருநிலையம்மன் உடனாய கொற்ற வாளீசர் கோயில் கொண்டிருக்கும் கோயிலூரும் காரைக்குடியைச் சேர்ந்திருக்கும் கழனி வாயிலும் உட்பட்ட பரப்பே ஏழகமாகும். இங்குள்ள சிதைந்து போன பெருமாள் கோயிலை `ஏழகப் பெருமாள் விண்ணகரம்' என்று அக்கோயிற் கல் வெட்டுகள் உணர்த்துகின்றன.

## கம்பனடிப்பொடியின் கருத்து

அறிஞர் கம்பனடிப்பொடி சா.கணேசன் அவர்கள்,

``இந்த நகரின் பெயர் தான் ஏழகம் என்பது.
அதனால் தான் இங்கிருந்த அந்தப்புகழ்
பெற்ற படை `ஏழகப் பெரும்படை' அல்லது
`ஏழகப்படை' என்று வழங்கியது. 12 ஆம்
நூற்றாண்டுக்கு முன்வரையில் இந்தப்
படை ஈடும் இணையுமற்றுத்தனிப்
புகழ் கொண்டு விளங்கியது. வணிகர்
வாழ்ந்த பகுதிக்கு `ஏழகப் பெருந்தெரு'
என்பது பெயராகும். அதை
`ஏழகச் சக்கரவர்த்திப் பெருந்தெரு'
என்றும் கூறுவார்கள. இந்தப் பெருமாள்
கோவிலுக்கு `ஏழகப் பெருமாள் விண்ண
கரம்' என்பதே திருநாமம். வீரபாண்
டியன் காலத்தில் இதற்கு `வீரபாண்டிய
புரம்' என்று மற்றொரு பெயரும்
ஏற்பட்டது. அதனால் இதை `ஏழகப் பெருந்தெருவான்
வீரபாண்டியபுரம்' என்றோ `ஏழகச் சக்கரவர்த்திப் பெருந்தெருவான
வீரபாண்டியபுரம்' என்றோ இணைத்துக்
குறிப்பிடுவதே சாசன வழக்காகிவிட்டது.
மேலும் சிறுகுளம், கழனிவாயில், மருதேந்திரபுரம்
முதலான பெயர்களால் இதன்
நகரப் பகுதிகள் வழங்கி வந்திருக்கின்றன."

என்பர். இன்றையக் கோயிலூருக்கும் கழனி வாசலுக்கும் இடைப்பட்டபகுதியே ஏழகம் என்பதும் வயிரவன் கோயிலின் உட்பிரிவுகளான சிறு குளத்தூர், கழனிவாசல், மருதேந்திரபுரம் என்று மூன்றும் இப் பகுதியின் உட்பிரிவுகள் என்பதும் அறிஞர் கம்பனடிப்பொடி அவர்களின் துணிபு.

இந்த வட்டாரத்தில் சிதைந்து போன ஒரு சிவன் கோயிலுமுண்டு; அங்கிருந்த சிவபெருமானும் அம்மையும் கொற்றவாளீசர் கோயிலில் வீற்றிருக்கின்றனர். இந்தப் பகுதியில் அகழ் வாராய்ச்சியை மேற் கொண்டால் கோட்டை இருந்தமைக்கான சான்றுகளும் வணிகர் வரலாறு காட்டும் புதை பொருள்களும் கிட்டுதல் கூடும். எனவே இப்பகுதியே ஏழகம் என்றும் வீரபாண்டியபுரம் என்றும் கழநிவாசல் என்றும் பெயர் பெற்றிருக்கிறது.

வணிகர்கள், பாண்டிய நாட்டிலிருந்தது போலச் சோழ நாட்டிலும் இருந்தனர். இவ்வணிகக் குழுவினரான ஏழகத்தார் பாண்டிய நாட்டில் கி.பி. 950 முதல் சீரும் சிறப்பும் பெற்றுச் செழித் திருந்தனர். இரண்டாம் இராசாதிராசனுடைய திருவாலங்காட்டுக் கல்வெட்டில் `பாண்டிய நாட்டு ஏழகத் தாரிலும் என்று வருவது இவ் வேழகத்தாரின் பாண்டிய நாட்டுரிமையைக் காட்டுகின்றது.

## இன்றைய இடமே—ஏழகப் பெருந்தெரு

இன்றையக் கோயிலூர் (காரைக்குடிக்கு அருகிலுள்ளது), ஏழகப் பெருந்தெரு என்று ஆராய்ச்சியாளர்கள் எழுதிவந்திருக்கின்றனர். பல்வேறு கல்வெட்டு, இலக்கியச் சான்றுகளை ஆராயும் போது, கோயிலூர் ஏழகத்தாருடைய படை வைக்கப்பட்டிருந்த இரண்டாவது கோட்டையாகும். ஏழகப் பெருந்தெருவினர்க்குரியதர்த்தலைமை பெற்று விளங்கிய இடம், இன்று வயிரவன் கோயில் இருக்கும் பகுதியேயாகும். வயிரவன் பட்டி,. குண்டாற்று அருகே உள்ளது. புதுக்கோட்டை மாவட்டம், கோவிலூர் சாலபுரிசுவரர் கோயிலிலுள்ள கல்வெட்டொன்றில் "கீ[ழ]குண்டாற்று ஏழகச் ச[க்]கரவர்த்திப் [ப]

.....தருவாந.....[விரப]ாண்டியபுரத்து சிறு செற்[றி]..[யூருண்டயான்]"(புசக 490) என்று ஒரு பகுதிகாணப் படுகிறது. இக்கல்வெட்டு `ஏழகம்' எங்குள்ளது என்பதைக் தெளிவாகக் கூறுகிறது. [ஏழகப் பெருந்தெரு என்றாலும் ஏழகச் சக்கரவர்த்திப் பெருந்திரு என்றாலும் ஒன்றேயாகும்].

இக் கல்வெட்டில்தான். ஏழகப்பெருந்தெரு எங்குள்ளது என்பதைத் தெளிவாகப் பேசுகிறது. பிள்ளையார் பட்டியும், கீழ்க்குண்டாற்றைச் சார்ந்திருக்கிறது. இதனைப்பிள்ளையார் குடைவரை வாசலுக்கு இடப்பக்கமுள்ள கல்வெட்டு (கி.பி. 1116) ``கேரள சிங்கவள நாட்டுக் கீழ்க் குண்டாற்று மருதங்குடி" என்று கூறுவதால் தெரிந்து கொள்ள முடிகிறது. எனவே இன்றைய வயிரவன் கோயில் உள்ள பகுதியே, வயிரவன் கோயில் நகரத்தார்களின் பழமையான வாழ்விடம் என்பது தெளிவாகும். இப்பகுதியிலேயே ஏழகப் படையின் தலைமையிடம் இலங்கியது; இங்கிருந்து பிள்ளையார்பட்டி, கழனிவாசல் முதலிய பகுதிகளிலும் நகரத்தார்களுக்குரிய படைநிலைகள் இருந்தன. நகரத்தாரனைவருக்கும் பொதுவாக விளங்கிய கோயிலே பிள்ளையார் பட்டிக்குடைவரைக்கோயிலும் ஏழகப்படையும்.

## சோழனுடன்போர்

நாட்டுக்கோட்டை நாகரத்தார்களின் படை வைத்துவணிகம் செய்யும் வணிகக்குழு வீழ்ச்சி அடைந்த பின்னர், நாயக்கர் காலச் சிற்றரசரான வெங்களப்ப நாயக்கர் மரபினர் இப்பகுதிக் கோட்டையைத்தங்கள் தலைமையிடமாகக் கொண்டு ஆட்சிபுரிந்தனர். மூன்றாம் குலோத்துங்கன் பாண்டிய நாட்டுப் போரில் ஏழகப்படை பங்கு பெற்றுச் சோழனை எதிர்த்தது நகரத்தாருக்குப் பெரும் வீழ்ச்சியைத்தந்தது.

## பழைமையும் உத்தியும்

நாட்டுக் கோட்டை நகரத்தார்களின் வணிகக் குழுவிற்கு உரிய படை ஏழகப்படை. இப்படை வரலாற்றுப் புகழ்பெற்றது. இளம் பூரணருக்கு முற்பட்ட புறப் பொருள் வெண்பாமாலை, பொதுவியலில் `ஏழக நிலை' என்று ஒரு துறையைச் சுட்டு கின்றது.

இப்புறப் பொருளிலக்கண நூல், பொது வியற்படலத்தில், முதற்கண் முடிகெழு வேந்தர் மூவருக்குமுரிய அடையாளப்பூக்களின் நிலையை மூன்று துறைகளாக விளக்குகிறது. அவை போந்தை, வேம்பு, ஆர் என்ற பெயரின. மன்னர் மூவரையும் சொல்லிய பின்னர், மன்னர்களின் வளர்ச்சியையும் தளர்ச்சியையும் காட்டுகின்ற`உன்ன நிலை' என்ற துறை இடம் பெறுகின்றது. அடுத்து இவ்வியலின் ஐந்தாவது துறை`ஏழகநிலை'. இத்துறை, மன்னர் பின்னோரான வணிகர் படை பற்றிய தாகும்.

மன்னவன் தன் படையோடு சென்று பகைவனொடு போர் செய்வான்; தன் படை, பகைவன் படைக்குத் தோற்பின் வேற்று மன்னர் படையின் துணையைத் தேடுவான். அவர் படையும் போதவில்லை எனில் தன் கீழுள்ளார் படையெல்லாம் திரட்டிப் போளுற்றுவான். பல படையும் ஒன்று சேரும் போது அரசர் பாலிருந்த படை, போர்த்திறம் மிக்கதாய்த் திகழும். மன்னர் போரிடுதற்கு என்றே பழக்கிய படைக்கும் பிறர் காவலுக்கு வைத்துள்ள படைக்கும் போர்த்திறத்தில் செயல்பாட்டில் வேற்றுமை உண்டு. மன்னர் படை, கோட்டையை விட்டு வெளிப் போந்து பகைவரைத் தாக்கிடும்(Offensive force) படை; வணிகர்படை கோட்டைக்குளிருந்து வெளியார் தாக்குதலைத்தடுத்துக் காத்திடும் (Defensive force) படை முற்கூறிய படை மறவர் படை, பிற்கூறிய படை அகப்படை. இவர்களே தாம் செய்த பணியால் மறவர் என்றும் அகம்படையர் அல்லது அகம் படியர் என்றும் பெயர் பெற்றனர். வணிகர்கள் வைத்திருந்த படையை வணிகர்களையும் அவர் தம் உடைமைகளையும் காத்துத்தருகின்ற படையாகும். இப்படை ஏழகத்தில் இருந்த காரணத்தால் `ஏழகப் படை' என்று பெயர் வழங்கியது. மன்னர் பின்னோரான வணிகர்கள் பால் படை இருந்தமை வரலாற்றுண்மை. அப்படை மரபை உணர்ந்தே, ஐயனாரிதனார், புறப் பொருள் வெண்பா மாலையில் மன்னர் படையைச் சொல்லியபின் வணிகர் படையைக் கூறுகிறார்.

ஏழகம் எல்லாக் காலத்தும் ஆட்டுக் கிடாயுடன் அடையாளங்காட்டப்பட்டிருக்கிறது. ஏழகப் படை, பின் வாங்கி முன் பாயும் போரியல் உத்தியைப் பின்பற்றி அச்செயலால்`ஏழகநிலை' என்று பெயர் பெற்றதாதல் வேண்டும். குதிரைகள் போருக்குப் போதிய அளவு கிட்டாமல், போர்ப் பணிகளில் தமிழக விலங்கான `கிடாய்களும்' பயன்படுத்தப்பட்டிருக்கின்றன.

குதிரையை எதிர்க்கக் கிடாய் வருகின்றது. புறப் படைக்குக் குதிரை வேண்டும்; அகப்படைக்குக் கிடாயே போதுமானது; இன்றும் மஞ்சு விரட்டுக் காளைகளுடன் சேர்த்துக் கிடாய், மான் போன்றவற்றை வளர்ப்பர். இவை ஒன்றுக்கு ஒன்று துணையைப்பிறரிடம் பிடிபடாமல் மீண்டுவிடும். போரில் குதிரையும் ஆடும் ஒத்தன அல்லவாயினும் படையின் வலியாலும் தலைவன் மனவுறுதியாலும் இரண்டும் நேருக்கு நேர் ஆனவை. ஏழக நிலை என்ற துறையால், வேந்தர்களிடையே நடைபெறும் போரில் வணிகர் படையும் பங்கு பெற்று அரசப் படைக்கு ஈடாகப் போர் செய்தலைப் புறப் பொருள் வெண்பாமாலை புலப்படுத்துகிறது.

`ஏழகக்கிடாய்' என்று மறைபொருளாகக் கூறுவது ஒரு குறியீடாகும். போரில் பகைவனொடு பொருது தோற்றுப் பின் வாங்குவது போலப் படைகள் பின் வாங்கிப் பகையாளியை உள்ளே இழுத்துத்தாக்கும் உத்தியாகும். பிற்காலப் பல்லவவேந்தர்கள், இவ்வுத்தியைப் பயன்படுத்தியே தங்கள் பகைவர்களைச் சிதற அடித்தனர். இதனை உணர்த்தும் ஒரு குறியீடுதான் ஏழகநிலை. வணிகக்குழுவினரின் போரியலுத்தியைப் புறப்பொருளிலக்கணிகளும் ஏற்றுத் துறை கண்டிருப்பது நோக்கத்தக்கது

வழிவழியாக வந்த இந்த ஏழகப் படை, பாண்டியருடன் சேர்ந்து மூன்றாம் குலோத்துங்கனுடன் போரிட்டுச் சிதைந்தது. இதனால் நகரத்தார் வணிகக்குழு வலி குன்றியது. இதனைத் தொடர்ந்து நாட்டுக் கோட்டை நகரத்தார்கள் படை வைத்துக் கொள்ளுதலை விட்டு விட்டனர்.(இவையெல்லாம் தனியாய்வுக்குரியன)

நாட்டுக் கோட்டை நகரத்தார் வரலாற்றில் வயிரவன் கோயில் நகரத்தார்கள் வலிமையும் பெருமையும் பெற்றுத் திகழும் சிறப்பை `ஏழகப் பெருந்திரு' என்ற பெயர் காலங்காலமாக உணர்த்தி நிற்கிறது. இவ்வாறு நகரத்தார்கள் எழுதும் இசைகுடிமான வாசகம் நகரத்தார் வரலாற்றின் பல கூறுகளை விளக்குகின்றது. இனி உட்பிரிவுகளைப் பற்றிய கருத்துகள் தரப்படுகின்றன.

## நகரக் கோயில் உட்பிரிவுகள்

நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் ஒன்பது கோயில் பிரிவுகளாக வாழுகின்றனர். இந்த ஒன்பது கோயில்களில், சிலவற்றில் மட்டும் பல உட் பிரிவுகள் உள்ளன. இலுப்பக்குடி, நேமம் போன்ற கோயில்களில் உட்பிரிவு இல்லை. இளையாத்தக்குடிக் கோயிலிலும் மாத்தூர்க் கோயிலிலும் ஒவ்வொன்றிலும் ஏழுயேழு உட்பிரிவுகள் இருக்கின்றன. நரகத்தார்கள் தங்களை ஏழூர் நகரத்தார் என்று சொல்லி ஏழு கோயில்களைக் கொண்டிருந்தது போல இவ்விரு கோயில்களிலும் உட்பிரிவுகள் ஏழு அமைந்திருக்கின்றன. ஏழு கோயில் பகுப்பு ஏற்பட்ட காலத்திலேயே ஏழு உட்பிரிவுகளும் ஏற்பட்டிருக்க வாய்ப்புகள் குறைவு. எல்லாக் கோயில்களையும் வரன் முறைப் படுத்திப் பகுப்புகளை ஒரு காலத்திலேயே ஏற்படுத்தியிருக்க வேண்டும். இவ்விரு கோயிலிலும் உட்பிரிவுகள், கோயிலை உரிமையாகப் பெற்ற போதே அமைந்திருக்க வெண்டும். வயிரவன் கோயிலில் மூன்று உட்பிரிவுகள் காணப்படுகின்றன.

## இளையாத்தக்குடி

இளையாத்தக்குடிக்கோயில் உட் பிரிவில் ஏழு உட்பிரிவுகள்: இவற்றில்

ஆறு பிரிவுகளின் பெயர் ஊர்ப்பெயராகும். நாட்டுக் கோட்டை நகரத்தார்கள் இசைவுபிடிமானம் (இசை குடிமானம்) எழுதும் போது

`கல்வாசனாட்டில் இளையாத்தக்குடியான
குலசேகரபுரத்தில் ஒக்கூருடையார்'

என்று எழுதுவர். முதலில் நாடு; பின் கோயில் அல்லது கோயிலுள்ள ஊர்; அடுத்த அதற்குள்ள இன்னொரு பெயர்; இறுதியில் கோயில் உட்பிரிவின் பெயர்.

நாடு+கோயில்+வேறுபெயர்+உட்பிரிவு.

இந்த அமைப்பு இளையாத்தக்குடியின் ஏழுபிரிவில் ஆறு பிரிவில் காணமுடிகிறது

**ஒக்கூர்**

இளையாத்தக்குடிக் கோயில் பிரிவில் முதல் பிரிவாகத் திகழ்வது `ஒக்கூருடையார்' என்ற பிரிவாகும். சங்கஇலக்கியப் பழைமையுடைய, ஊர் ஒக்கூர். இங்கு வாழ்ந்த சங்கப்புலவர் ஒக்கூர் மாசாத்தியார். இன்றும் இப்பெயருடன் செட்டிநாட்டில் ஓர் உள்ளது. இவ்வூரின் பெயராலேயே `ஒக்கூருடையார்' என்ற பெயரமைந்திருக்கிறது. இங்கு இலுப்பைக்குடி, இளையாத்தக்குடி, பிள்ளையார் பட்டி, வயிரவன் கோயில் ஆகிய நான்கு கோயில்களைச் சார்ந்த நாட்டுக் கோட்டை நகரத்தார்கள் வாழுகின்றனர்.

நகரத்தார்களில் ஒக்கூர் நகரத்தாருக்குத் தனிமரியாதை--முதல்மரியாதை--உண்டு. காருண்யபாண்டியராசன் என்ற பாண்டிய மன்னன் நகரத்தார் குலச்சிறு பெண்ணைத்தூக்கிச் சென்று விட்டான். நகரத்தார்கள் அப்பெண்ணை மீட்டு அவளைக் கொன்று விட்டனர். இதனையறிந்த மன்னன் ஒரு பெண் கொலைக்கு ஈடாக எட்டுத் தலையும் எண்ணாயிரம் பொன்னும் செலுத்துக என்று ஆணை யிட்டான். நகரத்தார்களும் கோயிலுக்கு ஒருவர் மேனி ஏழு கோயிலுக்கு ஏழு தலை கொடுக்கவும் எஞ்சிய ஒரு தலையை ஒக்கூர் நகரத்தார் கொடுக்கத்தாமே இசைந்தனர். இதனால் ஒக்கூர் நகரத்தார்களுக்குக் கோயில் குருஸ்தானங்களில் திருநீறு, களாஞ்சி முதலிய வற்றில் முதல் மரியாதை கொடுக்க வேண்டும் என்ற மரபு உருவானது. இதனை எல்லா நகரத்தார்களும் ஏற்று இசைந்தனர். இதனால்தான் இளையாத்தக்குடிக்கோயில் --ஒக்கூர் நகரத்தாருக்குக் -- கோயில் குருஸ்தானங்களில் முதல் மரியாதை அளிக்கப்பட்டு வருகிறது.

ஒரு பெண் கொலைக்கு எட்டு ஆடவரைப்பலி கேட்கும் அரசியல் நெறி விசித்திரமானது; இக்கதையை எவ்வளவு தூரம் நம்ப முடியும் என்பது தெரியவில்லை. கோயில், கோயிலுட்பிரிவு ஏற்பட்ட காலத்தில், நகரத்தார்களில் இளையாத்தக்குடி நகரத்தார் வயதில் மூத்தோராகவும் செல்வத்தில் உயர்ந்தவராகவும் விளங்கியிருக்க வேண்டும். அம்மூத்த பிரிவனர் இளையாத்தக் குடிக்கோயிலாராய்த்திகழ்ந்தனர். அப்பிரிவில் மூத்த முதல் வழியினர் ஒக்கூர் நகரத்தராய்த் தனிப்பிரிவாக விளங்கினர். தொன்று தொட்டு முதல் மரியாதை பெற்று வந்த ஒக்கூர் நகரத்தார்கள், பல கோயில்களாகவும் பல பிரிவாகவும் வளர்ந்த போதும் ஆதிமரபை விட்டு விடவில்லை.

நகரத்தார்கள் ஒன்றைத் தொடங்கிவிட்டால் அதனை எந்தக்காலத்திலும் விடாது பற்றிப் பிடித்துக்கொள்வர். இஃது இயல்பான காரணமாகும்.

இதற்கு இன்னொரு காரணமும் இயம்ப முடியும். இராங்கியம் பூம்பிசுவரர் கோயில், நகரக்கோயில்போல நகரத்தார்க் குரியதாக விளங்கியது. பிற்காலத்தில் இக் கோயிலுடன் நகரத்தார் கொண்டிருந்த தொடர்பு விட்டுப் போய் விட்டது. தொன்மைக்காலத்தில், இக் கோயிலை நகரத்தார்களே கட்டியிருக்கின்றனர். இக் கோயிலில் பொறிக்கப்பட்டிருக்கும் கல்வெட்டுகளால் ஒக்கூர்நகரத்தார்களின் முதன்மையும் சிறப்பும் வெளிப்படுகின்றன.

இளையாத்தக்குடி நகரத்தார் என்று ஒரு தொகுதியாக வாழ்ந்த போது மூத்த வழியினரான ஒக்கூர்ப்பிரிவைச்சேர்ந்த வணிக ராமர் இராங்கியம் கோயிலைக் கி.பி. 1456 க்கு முன் கட்டினார். இத் திருப்பணியே நகரத்தார் திருப்பணிகளில் காலத்தால் முற்பட்டது. கி.பி. 1456 இல் பொறிக்கப்பட்ட கல்வெட்டு ஒக்கூர் நகரத்தாருக்கு முதல் மரியாதை கொடுக்க வேண்டும் (புசக 796) என்றும் அடுத்தக்கழனிவாசற் குடியாருக்கு (வயிரவரன் கோயில்) க் கொடுக்க வேண்டும் என்றும் தெரிவிக்கின்றது. இத் திருக்கோயில் மரபே நாட்டுக் கோட்டை நகரத்தாரிடையே வேரூன்றியது. இதனால் தான், `ஒக்கூருடையார்' முதற்கண் எண்ணப்படுகின்றனர். இச்சிறப்பு முன்னர் திருக்கோயில் திருப்பணி செய்தமைக்காக ஏற்பட்டது.

பட்டண சாமியார்

இளையாத்தக்குடிக் கோயில் பிரிவில் இரண்டாவது பிரிவு பட்டண சாமியார். இதனை எழுதும் போது

``கல்வாச னாட்டில் இளையாத்தக்குடியான
குலசேகரபுரத்தில், அரும்பாற்திளையாரான
பட்டண சாமியார்"

என்று எழுதுவர். பிற பிரிவுகளில் வருவதைக் காட்டிலும் `பட்டண சாமியார்' என்ற இரண்டு பெயர்களும் ஊர்ப் பெயர்கள் அல்ல. ஒரு பிரிவு இரண்டு பெயர்களால் பேசப்படுவது இப்பிரிவின் தனிச் சிறப்பு. அரும்பாற்கிளையார் என்ற பெயரே பழைய பெயர். இத்தொடரை அரும்பால்+கிளையார் என்ற இரண்டின் தொகைச் சொல்லாகக் கொள்ள வேண்டும். அரும்பால் என்பது அரிய பகுதி; கிளையார் என்பது கிளைத்தவர்கள், வழியினர்; இவ்வாறு பொருள் கொண்டால்,`அரியபிரிவின் வழி வந்தோர்' என்ற கருத்துக் கிடைக்கும். ஆதலின் இப்பெயரும் இந்தப்பிரிவின் அருமையைப் புலப்படுத்தும். இப்பிரிவினரை`அரும்பூர்க் கிழார்' என்று பண்டிதமணி மு. கதிரேசஞ்செட்டியார் எழுதுவார். அரும்பாற்கிளையார் என்பதற்கு மாறாக உள்ளது.

இவர்களின் பெயரே 'பட்டண சாமியார்' என்பதாம். இப்பெயரும் பழைமையான பெயரே. பட்டினத் தடிகளைப் பட்டின சுவாமி என்பர். இந்த வழக்குடன் இப்பெயரை ஒப்பிட்டு இரண்டும் ஒன்றே என்ற கருத்து எழுந்து விட்டது. ஆதலால் பால கவி வயிநாகரம் இராமநாதன் செட்டியாரும் அறிஞர் சோமலெயும் பட்டினத்தார் பிறந்த பிரிவு அவர் பெயரால் வழங்கலாயிற்று என்று

எழுதினார். அறிஞர் சோமலெ, 'இப்பிரிவின் குலமுதல்வர் இவர்' என்பர். பட்டினத்தார் நாட்டுக்கோட்டை மரபைச் சார்ந்தவர்; அவருடைய கோயில், பிரிவு ஆகியன தெரிந்தில. பட்டினத்தாருக்கும் பட்டணசுவாமிக்கும் எவ்வகைத் தொடர்பும் கிடையாது என்பதுதான் உண்மை. அரும்பாற் கிளையார் நகரத்தார் வணிகக்குழுவில் தலைமை ஏற்றுவிளங்கியமையான் பட்டின சாமியார் என்று பெயர் பெற்றனர்.

நாட்டுக்கோட்டை செட்டியார்கள் தென்னிந்தியாவிலிருந்த மிகப்பெரிய வணிகக் குழுவுடன் சேர்ந்தவர்கள். ஐந்நூற்றுவர் வணிகக் குழுவைச் சேர்ந்த வணிகர்களுக்குந் தனித்தனியே பொறுப்புகள் வரையறுக்கப்பட்டிருந்தன. இப்பொறுப்புகளின் பெயரால் சில நகரத்தார்கள் அழைக்கப் பெற்றனர். வணிகக் குழுவுக்குத் தனியே தலைவர் விளங்குவார். அக்குழுவின் தலைவர் பட்டணசடாமி எனப் பட்டார். பட்டணக் கிழார், தெசிகள் தண்ட நாயகன், நாநாதேசி என்பனவும் அத்தகையனவே. பல பிரிவுகளை மேற் பார்க்கும் அதிகாரி`நாடுசுவாமி' என்ற பெயரினர். இளையாத்தக்குடிக்கோயிலில் இரண்டாவது பிரிவினர், தலைமையாகத் நிகழ்ந்தமையான் `பட்டண சாமி' எனப் போற்றப் பெற்றனர்.`ஐந்நூற்றுவர் சங்கத் தலைவன் பழங்காலத்தில் பட்டணசாமி என்று அழைக்கப்பட்டான் என்பர் டாக்டர் மா. இராச மாணிக்கனார். (தமிழக ஆட்சி ப. 157) பல்வேறு கல்வெட்டுகளில் வணிகத் தலைவர் `பட்டிண சாமியார்' என்று கையேழுத்திட்டிருக்கின்றமையைக்காண முடிகிறது.

வணிகர்கள் ஒருங்குகூடி அறம் செய்யக்கையெழுத்திட்டதைப்பிரான் மலையிலுள்ள கல்வெட்டு (422) க் கூறு கின்றது. இதில் கையெழுத்திட்டவர்களுள் ஒருவர் பட்டிணசாமி; இதுபோலப் பேரையூர்க்கல் வெட்டிலும் இப்பெயர் பயிலுகின்றது. வணிகர்கள் தங்கள் தலைவரை எவ்வாறு தேர்ந்தெடுத்தனர் என்பது புலப்படவில்லை.

நாட்டுக்கோட்டை நகரத்தார்களின் தாய் ஊர் (Basic) இளையாத்தக்குடி; அக் கோயிலின் முதற் பிரிவு திருக்கோயில் திருப்பணியைச் செய்யும் திருத்தொண்டை மேற் கொண்டு முதல் உட் பிரிவானது. இரண்டாம் இடம் வணிகக்குழுவின் தலைமையாக விளங்கிய அருபாற் கிளையாரான பட்டணசுவாமியார்க்கு உரித்தாயிற்று.

### பெருமருதூர்

இளையாத்தக்குடிக் கோயிலின் மூன்றாவது பிரிவு பெருமருதூருடையார் என்பதாகும். ஆவுடையார் கோயில் ஊராட்சி ஒன்றியத்தில் பெருமருதூர் இருக்கிறது. இவ்வூர் ஆவுடையார் கோயிலுக்குக்கிழக்கே உள்ளது, கண்டதேவிக்கு அருகே சிறுமருதூர் என்றவூர் காணப்படுகிறது. பெருமருதூருடையார் பற்றி வேறு செய்திகள் கிடைத்தில.

### கழனி வாசற்குடி

இளையாக்தக்குடிக்கோயிலில் நான்காவது பிரிவு 'கழனிவாசற்குடியார்' என்ற பிரிவு. வயிரவன் கோயில் நகரத்தார்களில் இரண்டாவது பிரிவு 'கழனிவாசலுடையார்' என்பதாம். வெவ்வேறு கோயில்களான இரண்டு பிரிவும் ஒரு ஊரின் பெயருடனேயே விளங்குகின்றன. அதில் `குடியார்', `உடையார்' என்ற பெயரே வெவ்வேறானவை. எல்லாக் கோயில் உட்பிரிவுகளிலும் உடையார்

என்பது இறுதியாகச் சேர்ந்திருக்கிறது. இளையாத்தக்குடிக்கோயிலில் அரும்பாற் கிளையார் பட்டிண சாமியார் என்றும் கழனி வாசற்குடியார் என்றும் வருவனவே முற்கூறியவற்றிலிருந்து வேறானவை.'உடையார்' என்பது போலக் 'குடியார்' என்பதும் பழமையான வழக்கு குறித்த பகுதியை உரிமையாகப் பெற்றவர்கள் 'உடையார்' என்றும் குறித்த பகுதியில் குடியாக வாழ்ந்தவர்கள் 'குடியார்' என்றும் வழங்கப்பெற்றனர். வயிரவன் கோயில் நகரத்தார்களுக்குரிய கழனிவாசலை உரிமையாக உடையவர்கள் 'கழனிவாசலுடையார்' என்றும் கழனிவாசலில் வாழ்ந்த நகரத்தார்கள் 'கழனிவாசற் குடியார்' என்றும் அழைக்கப் பெற்றனர். இப்பிரிவு பழநி அறப் பட்டயங்களில்லை. எனவே இது பிற்காலத்தது என்று தோன்றுகிறது.

**கிங்கிணிக்கூர்**

இளையாத்தக்குடிக்கோயிலில் ஐந்தாவது பிரிவு கிங்கிணிக் கூருடையார். இதில் சொல்லப்படும் ஊர் `கிங்கிணிக்கூர். புதுக்கோட்டை மாவட்டம் திருவிடையார்ப்பட்டிக்கு அருகில் கிங்கிணிப்பட்டி என்ற ஊர் காணப்படுகிறது.

இவ்வூர் அரிமளம்--முனைசந்தைக்குச்சிலகல் தொலைவிலுள்ளது. இவ்வூருக்கு அருகேதான் மணியம்பலம் இருக்கிறது. மணியம்பலத்து நகரத்தார் என்ற பிரிவினர் திருக்கோட்டியூரில் வாழ்ந்தனர். இதனாலும் கிங்கிணிக்கூர் என்பது இஃது என்று கொள்ளப்பெறும். இந்த வட்டாரப் பகுதியில் நகரத்தார்கள் பற்றிய கல் வெட்டுகள் நிறையக் காணப்படுகின்றன. கிங்கிணி என்பது கிண்கிணி என்பதன் திரியாகும். பாதச்சதங்கை, அரைச் சதங்கை ஆகியவற்றைக் கிண்கிணி என்பர். `கிங்கிணி மாலை நெல்' என்ற ஒரு வகை நெல்லுமுண்டு. கிங்கிணிக்கூர் என்னும் ஊர் வேறு எதற்கும் உள்ளதா? என்றும் அதன் பெயர்க்காரணமும் ஆராய்தற்குரியது.

**பேரசெந்தூர்**

இளையாத்தக்குடிக் கோயில் பிரிவில் ஆறாவதாக வருவது பேர செந்தூருடையார். இதில் கூறப்படும் `பேர செந்தூர்' எவ்வூர் என்பது புலனாகவில்லை. `பேர' என்ற சொல் `பெரிய' என்பதன் மரூஉவாகும். `பெரிய செந்தூர்' என்ற கருத்தில் இத்தொடர் அமைந்திருக்கிறது. `பேர' என்ற சொல்லுக்கு விற்பனை, விலை பேசுதல் என்றும் பொருள் கொள்ள முடியும். `பேரம் பேசுதல்' என்பதையும் இங்குக்கருத்திற் கொள்ள வேண்டும். `பேர' என்ற அடைவணிகத்துடன் தொடர்புடைய சொல்லாகும். வணிகர்குழுவில் பொருள்களைத் தெரிந்தெடுத்துப் பேரம் பேசி வாங்கித்தரும் குழுவினராக இவர்கள் விளங்கினர் போலும்.

அன்றி இத் தொடருக்குவேறு வகையான விளக்கமும் தரலாம். `செந்திலாதியன் குடி கொண்ட படை வீடு. புறநானூறு இதனைச் `செந்தில்' என்று இயம்பும். சைவத்திருத்தலங்களைத்திரு என்னும் அடையிட்டுச் சொல்லுமாறு குமரன் குடி கொண்ட கோயிலையும் திருச்செந்தூர் என்றழைப்பர். நகரத்தார்கள் முருகன் பால்மாறாத அன்பு கொண்டவர்கள்; திருச்செந்தூர் கடற்கரைப்பட்டினம். நகரத்தார்களின் கடல் வணிகத் தொடர்புடைய பதி. எனவே அதற்குப் பெரிய என்ற அடை கொடுத்துப் பேர செந்தூர் என்றனர்.

திருச்செந்தூராக இவ்வூர் இருந்தால் அதனை இத்தொடராலேயே குறித்திருக்கலாம். திருச்செந்தூரிலிருந்து வேறு ஊர் என்று காட்டுதற்குப் பேர செந்தூர் என்ற பெயர் அமைந்ததா? செந்தூர் முருகன் சிறப்பைக் காட்ட அமைந்ததா? என்று புலனாகவில்லை. பேர செந்தூர் என்ற ஊர் செட்டி நாட்டு வட்டாரத்தில் காணப்படவில்லை. இளையாத்தக்குடியில் இந்தப்பிரிவு ஆறாவது பிரிவாக இருப்பது, ஆறுமுகப் பெருமானை நினைவு கூரும் வகையாக அமைக்கப் பட்டிருக்கிறது.

## சிறுசேத்தூர்

இளையாத்தக்குடிக்கோயிலின் ஏழாவது பிரிவு சிறு சேத்தூருடையார். சேற்றூர் என்பதே சேத்தூர் என்று வழங்குகிறது. சிறு சேத்தூர் என்பது திருப்புத்தூர் ஊராட்சி ஒன்றியத்திலுள்ளது. இந்த ஊருடன் இவர்கள் தொடர்புடையவர்கள் வேறு செய்திகள் எவையும் கிட்டில.

## மாத்தூர் உறையூர்

நகரக் கோயில் வரிசையில் இரண்டாவதாக எண்ணப் பெறும் கோயில் மாத்தூர்க்கோயில், (இது மாற்றூர் என்றும் கொள்ளப்பெறும்). மாத்தூர்க் கோயிலின் ஏழு உட்பிரிவுகளில் முதலாவது `உறையூருடையார்' என்ற பிரிவு. நாட்டுக் கோட்டை நகரத்தார்களிடையே அமைந்த உட்பிரிவுகளில், சங்ககால ஊர்களுடன் தொடர்புடைய பெயர்கள் இரண்டு. ஒன்று உறையூர், மற்றொன்று ஒக்கூர் உறையூர், மாத்தூரின் பிரிவு. ஒக்கூர் இளையாத்தக்குடியின் பிரிவு. தமிழக வரலாற்றில், காலந்தொறும் உறையூர் வணிகச் செல்வாக்கும் அரசியல் சிறப்பும் மிக்க ஊர். அது சோழரின் தலை நாகராய் உள்நாட்டு வணிகச் சிறப்புமையமாகத் திகல்வதாகும். ஒக்கூரோ பாண்டிய நாட்டு ஊர். இந்த இரண்டு பிரிவையும் நகரத்தார்கள் அந்தந்தக் கோயில்களில் முதலாவதாக எழுதிவருகின்றனர். இவர்கள் பழைய மரபு இருந்தால்தான் முதன்மை தருவர்; முறைமாறினால் வம்பு, வழக்கு, கூட்டம், மன்றம் என்றுபோய் விடுவர். புதிதாக முளைக்கும் எதற்கும் முதன்மையோ மேலாண்மையோ நகரத்தார்கள் கொடுக்க மாட்டார்கள்.

பட்டினப்பாலையும் (அடி 285) புறநானூறும் (பா 69.12) உறந்தை சோழர்களின் தலை நகரம் என்றும் ஊர்ப்பெயர் உறந்தை என்றும் சுட்டும். இவ்வூரைச் சங்கநூல்கள் உறந்தை என்றே சொல்லுகின்றன; உறையூர் என்றில. உறந்தை என்பது உறையூரின் மரூஉ என்பர் தொல்காப்பிய உரையாசிரியர் பேராசிரியர். சிலப்பதிகாரம் உறையூர் (8.3,10:242) என்று முதற்கண் ஆளும் நகரத்தார்களுடன் தொடர்புடைய ஊர்களில் உறையூர் ஒன்று. சோழராட்சியில் முதன்மை பெற்றிருந்த உறையூரில் வணிகம் செய்து வாழ்ந்தவர்கள் உறையூருடையார் ஆவார்.

## அரும்பாக்கூர்

மாத்தூர்க்கோயில் பிரிவில் இரண்டவது பிரிவு அரும்பாக்கூருடையார். அரும்பாக்கம், ஊர் என்பன அருபாக்கூராயாற்றா ? என்பது தெளிவாகவில்லை. இளையாத்தக்குடிகோயிலில் `அரும்பாற்கிளையார்' என்று பிரிவுளது; இதற்கும் அரும்பாக்கூருடையார் என்பதற்கும் தொடர்புண்டா? அரும்பாக்கூர் எவ்வூர் என்று இன்றைய நிலையில் அறியச் சான்றுகள் கிட்டில. இதனை அரும்பூர் என்பர் பண்டிதமணி.

## மணலூரும் மண்ணூரும்

மாத்தூர்க்கோயிலின் மூன்றாவது உட்பிரிவு மணலூருடையார். மணலூர் என்பது காரணப் பெயர். மணலூர் என்று பல ஊர்கள்காணப்படுகின்றன. இஃது எங்குள்ள ஊர் என்பது தெரிந்திலது;இவ்வூரும் செட்டி நாட்டு வட்டாரத்துக்குள்ளேயே இருக்க வேண்டும்.

இக்கோயிலின் நான்காவது பிரிவு மண்ணூருடையார். மணலூர், மண்ணூர் என்பன அடுத்தடுத்து அமைகின்ற பிரிவுகளுக்குப் பெயராக வந்துள்ளன. மணல், மண் என்பன வெவ்வேறானவை. இரண்டும் வாழும் மண்ணின் தொடர்பால் பிரிவுபட்டன. மக்கள் வாழ்ந்த ஊர்களின் பெயரால் இப்பெயர்கள் அமைந்திருக்கின்றன. திருப்பத்தூர் வட்டாரத்தைச் சுற்றியே இந்த இரண்டு ஊர்களும் இருக்க வேண்டும் என்பது துணிபு.

## கண்ணூரும் கருப்பூரும்

மாத்தூர்க் கோயிலின் ஐந்தாவது உட்பிரிவு கண்ணூருடையார் என்பதாகும். ஆறாவது பிரிவு கருப்பூருடையார் என்பதாம். திருப்பத்தூருக்கு அருகிலுள்ள கருப்பூரே இங்குச் சொல்லப் பெறும் ஊர். நகரத்தார்களின் இன்னொரு வகையானரான அருவியூர் நகரத்தார்கள் (அரியூர்) வாழ்ந்த அருவியூர், கருப்பூக்குப்பக்கமாக இருக்கிறது. திருப்பத்தூரை ஒட்டிய கருப்பூர், மாத்தூர்க்கோயில் உட்பிரிலில் சொல்லப்படும் ஊராகும். மாத்தூர்க்கோயில் உட்பிரிவைச் சார்ந்த பல ஊர்கள், திருப்புத்தூரை ஒட்டியனவாக இருத்தல் வேண்டும்.

## குளத்தூர்

மாத்தூர்கோயிலின் ஏழாவது பிரிவு 'குளத்தூருடையார்' இப்பெயரால் பல ஊர்கள் உள்ளன. குளம், ஊர் என்ற பெயர்கள் அத்துச்சாரியை பெற்றுக்குளத்தூர் என்று தொகைச் சொல்லாய் வருகின்றது. சாக்கோட்டை உமையாம்பிகை உடனாய வீரசேகர சுவாமி கோயிலில் மகா மண்டபம் உட்புறத்தூணில் (ஏ. ஆர். 59--1946--1947) கல் வெட்டு ஒன்றுள்ளது. அதில்

``இச்சித்திரகண்டக்கால்
மாத்தூரான வீரபாண்டிய
புரத்துக்குளத்தூருடையான
பட்டன் பட்டனான பரமானந்த
தெவன் தன்மம்"

என்று வருகின்றது. `வீரபாண்டிய புரத்துக் குளத்தூருடையான ' என்பது இப்பிரிவின் பழமையைப் புலப்படுத்துகிறது.

குளத்தூர் என்ற பெயரால் புதுக்கோட்டை மாவட்டத்தில் பலவூர்கள் உள்ளன. அவையாவன குளத்தூர், இராஜகுளத்தூர், கூழைக் குளத்தூர் என்பன. மாத்தூர்க் கண்ணூருடையார் `குளத்துப்பட்டி என்ற ஊரில் வாழ்ந்ததாகத் தெரிகிறது. நாட்டுக் கோட்டை நகரத்தார் திருச்சிராப்பள்ளி உறையூரிலிருந்து சிவகங்கை அருகேயுள்ள ஒக்கூர் முடிய பல ஊர்களில் வாழ்ந்திருக்கின்றனர். திருவேட்பூர் என்னும் திருவப்பூர் (திருகோகர்ணம்), நார்த்தாமலை என்ற நகரத்தார்மலை மணியம்பலம், சுந்தரபாண்டியபுரம், திருக்கோட்டியூர், முதலியன குறிக்கத்தக்கவை.

இவ்வட்டாரத்தில் காணப்படும் கல்வெட்டுகளில் `ஐந்நூற்றுவர்' பற்றிய குறிப்புகள் மிகுதி. புதுக்கோட்டை -- திருச்சி வழித் தடத்திலுள்ள குளத்தூரில் இருக்கும் இடிந்த சிவன் கோயில் கல் வெட்டுகளில் இவ்வூர் `கூழைக்குளத்தூர்'(புசக 162, 294, 512, 515) என்று சொல்லப்பட்டிருக்கிறது. பிற்காலக் கல் வெட்டுகள் இவ்வூரைக் குளத்தூர் என்றே (புசக 551, 558, 694) குறிக்கின்றன.

## வயிரவன் கோயில்–சிறுகுளத்தூர்

மாத்தூர்க் கோயிலின் உட்பிரிவில் குளத்தூருடையார் என்று இருப்பதுபோல வயிரவன் கோயிலில் 'சிறு குளத்தூருடையார்' என்ற பிரிவு முதலாவதாக இடம் பெற்றிருக்கிறது. மாத்தூரும் வயிரவன் கோயிலும் வீரபாண்டியபுரத்தைச் சேர்ந்தன. ஒரு பொதுத் தொடர்பிலிருந்து இந்த இரண்டு கோயில்களும் கிளைத்திருக்கின்றன. புதுகைக்குளத்தூரே மாத்தூர்ப்பிரிவில் குளத்தூர் என்று ஏற்றுக் கொள்ளப் பெற்றிருக்கிறது.

ஏழுகோயில்களை எண்ணுகின்ற வரிசையில் இளையாத்தக்குடி, மாத்தூர், வயிரவன் கோயில் என்ற முறை வரும். இம்முறை பஞ்சாங்கங்களிலும் தொன்றுதொட்டு வரும் வழக்கிலும் நகரத்தார் வரலாற்று நூல்களிலும் வருவதாகும். வயிரவன்கோயிலில் முதலாவது பிரிவு சிறு குளத்தூருடையார் என்பதாகும். மாத்தூர்க்கோயிலில் குளத்தூர் காணப்படுவதால் வயிரவன் கோயிலில் சிறுகுளத்தூர் என்று கொள்ளப் பெற்றது. சிறுகுளத்தூர் திருமெய்யம் பகுதியில் இருப்பதாகச் சத்தியமூர்த்திப் பெருமாள் கோயில் கல் வெட்டுக்களால் அறிய முடிகிறது. இச் சிறுகுளத்தூரில் மூன்று உட்பிரிவுகள் உள்ளன. வேறு எந்தக் கோயிலும் உட் பிரிவில் வகைகள் கிடையாது.

அவையாவன,

1. பெரிய வகுப்பு
2. தெய்யனார் வகுப்பு
3. பிள்ளையார் வகுப்பு.

இம் மூன்று பிரிவுகளும் பிற்காலத்தில், பங்காளிகள் தனித்தனியே கூடிக் கொள்வதற்காக ஏற்பட்டவை. அதனால் தான் இவர்கள் `வகுப்பு' என்று சொல்லப் படுகின்றனர், இம் மூன்று பெயர்களும் ஊர் பெயர்களாக இல்லாமையால் மேற் சொல்லிய கருத்து வலிமையுறும்.

இவ்வாறு பெயரிட்டிருக்கும் போக்கை நோக்கும் போது, கோயிலின் உட் பிரிவுகள் ஊர் அடிப் படையில் அமைந்தவை என்பதில் அய்யமில்லை. அந்த உட் பிரிவுகள் ஒரு குடும்பத்திலிருந்து வளர்ந்தவை. எனவே ஒரு கோயிலைச் சார்ந்தவர்கள் அனைவரும் பங்காளிகள் என்பது போல ஒரு கோயில் உட்பிரிவைச் சேர்ந்தவர்கள் அனைவரும் ஒரு கிளையில் உண்டாகிப் பெருகியவர்கள் ஆதல் வேண்டும். பொதுப் படைப்புகளும் அல்லது பூசைகளும் பங்காளி அடிப்படையில் தான் அமைந்திருக்கின்றன.

இந்த மூன்று உட்பிரிவுகள் பற்றி வயிநாகரம் ஆ. இராமநாதன் செட்டியார் பின்வரும் கருத்தைக் கூறியுள்ளார்.

``இக்கோவில் நகரத்தார், பிள்ளையார் வகுப்பு என்றும் தெய்வ நாயகர் வகுப்பு என்றும் பெரிய வகுப்பு என்றும் பெயர் பெற்றிருக்கின்றனர். இவர்கள் மூவரும் சகோகதரர்கள் ஆவர்.

இக்கோவில் (வயிரவன் கோவில் ஆவரணத்துள் ஒரு விநாயகர் இருக்கின்றார். இவ்விநாயகரையே பிரதானமாகக் கொண்டு இருப்பவர் பிள்ளையார் வகுப்பு; சுவாமி சந்நிதியில் `தெய்வ நாயகர்' என்பர் உருவச்சிலையில் காட்சி தருகின்றார். இவர் வழி வந்தவர்களே தெய்வநாயகர் வகுப்பினர். புள்ளியிலும் முறையிலும் பெரியவர்களாக இருந்த காரணம் பற்றிய 'பெரிய வகுப்பினர்' என்று பெயர் பெற்றனர் போலும் (பக் 56--57)

இக் குறிப்பால், மூன்று வகை வளர்ந்தமைக்கான காரணம் விளங்கும். இவ்வகை முறை ஏன் தோன்றியது ? இவை தனித்தனி உட்பிரிவாகக் கொள்ளப்படாதது ஏன்? என்பன ஆராயத்தக்கன.

வன்னியர்களிடையே பெரிய வகுப்பு, சின்ன வகுப்பு என்ற பிரிவுகள் உண்டு. இவை பொருள் வளத்தின் அடிப்படையில் அமைந்த சமூகப் பிரிவுகள் என்பர். மாராட்டியர் செப் பேடுகளில்

> ``சீர்கோழிச் சீர்மை ஏழுமா (க)ஆணத்து
> ணாட்டாரும் குடியான பேர் சகலரும்
> பெரிய வகுப்பு சின்ன வகுப்பு உள்பட
> சம்மதித்து"

என்று வரும்பகுதி ஒப்புநோக்கத்தக்கது.

இரணியூர், பிள்ளையார்பட்டி இரண்டு கோயிலாரும் அண்ணன் தம்பிகள் என்றும் ஒரு கிளையில் தோன்றிய இரண்டு பிரிவுகள் என்றும் கொள்வது முடிந்த முடிபு. ஒரு குடும்பத்தின் இரண்டு பிரிவுகள் இரண்டுகோயில்களாக வளர்ந்தன. புள்ளிப் பெருக்கமும் பொருள் பெருக்கமும் இதற்குக் காரணங்களாகலாம். இது காலத்தால் முற்பட்ட வளர்ச்சி.

இதன் பின்னரே வயிரவன் கோயில் சிறு குளத்தூரில் மூன்று பிரிவுண்டாயிற்று. இவை தனித் தனி உட்பிரிவாகவோ தனிக் கோயிலாகவோ வளர்ந்து மாற்றம் பெற்றில. இதனால் சிறு குளத்தூரில் ஏற்பட்ட பிரிவுகள் பிற்காலத்தன என்பது தெளிவாகும்.

### கழனிவாசலுடையார்

வயிவரன் கோயிலில் இரண்டாவது பிரிவு கழனி வாசலுடையார் என்பதாகும். கழணி வாசலோடு தொடர்புடைய மூன்று பிரினிகள் நகரத்தாரிடையே காணப்படுகிறது.

| | | | |
|---|---|---|---|
| 1. | கழனிவாசற்குடியார் | இளையாத்தக்குடி | நான்காவது பிரிவு |
| 2. | கழனி வாசலுடையார் | வயிரவன் கோயில் | இரண்டாவது பிரிவு |
| 3. | கழனி நல்லூருடையார் | வேலங்குடி | ஒரே பிரிவு. |

மூன்றும் `கழனி' என்பதை முதற்கண் பெற்றவை; கழனி வாசற்குடியார், கழனி வாசலுடையார் இரண்டு ஒரு சார்பாக அமைந்த இடங்களாதல் வேண்டும். ஒன்றில் உடையார் என்றும் மற்றொன்றில் குடியார் என்றும் வேறுபாடான சொற்கள் உள்ளன.

கழனியை ஒட்டி அமைந்த ஊர் கழனி நல்லூர் என்றும் கழனியை விட்டு விலகியிருந்த ஊர்ப்பகுதி கழனி வாசல் என்றும் அதனைச் சார்ந்தமைந்திருந்த குடியிருப்பு கழனிவாசல்குடி என்றும் கொள்ளுமாறு இப்பெயர்த் தொடர்கள் அமைந்திருக்கின்றன. இம் மூன்று கோயில் நகரத்தாரும் ஒரு வட்டாரத்தில் தனித் தனிக்குடியிருப்புகளில் வாழ்ந்திருக்கின்றனர். கழனிவாசலில் குடியாக வாழ்ந்தவர்கள் கழனிவாசற்குடியார் என்றும் கழனி வாசலை உடைமையாகக் கொண்டு வாழ்ந்தவர்கள் கழனிவாசலுடையார் என்றும் பெயர்பெற்றனர் என்பதும் ஒரு விளக்கமாகும்.

வயிரவன் கோயிலுக்குரிய உட்பிரிவு கழனிவாசலுடையான் (புசக 802). இதனைச் செவலூர்க்கல் வெட்டில் காணமுடிகிறது. இதே தொடர் காளையார் கோயில் கல்வெட்டில் (183) எட்டாந்தொகுதி) `ஏழகப்பெருந்தெருவான வீரபாண்டிய புரத்துக் கழனிவாயிலுடையான் அடைக்கலங்காத்தார் சிதம்பரநாதன்' என்று வருகிறது. இதன் காலம் கி.பி. 1542. செவலூர்கல் வெட்டு கி.பி. 1458. எனவே இப்பெயர் வழக்குப் பழைமையானது என்றறியப் பெறும்.

## மருதேந்திரபுரம்

வயிரவன் கோயிலில் மூன்றாவது பிரிவு மருதேந்திரபுரமுடையார். வயிரவன் கோயில் பிரிவுகளில் வரும் சிறு குளத்தூர், கழனிவாசல், மருதேந்திரபுரம் என்ற மூன்றும் வயிரவன் பட்டியைக்குறிப்பன அல்ல. பிள்ளையார் பட்டி மருதங்குடியை வேறுபடுத்தி வயிரவன் கோயிலுட்பிரிவை `மருதேந்திரபுரம்' என்றனர் போலும்; இப் பெயர்க்குப் பொருத்தமான விளக்கம் கிடைக்கவில்லை.

இளையாத்தக்குடி, மாத்தூர், வயிரவன் கோயில் என்பனவற்றை அடுத்து இரணிக் கோயிலும் பிள்ளையார் பட்டியும் எண்ணப் பெறுகின்றன. பிற்காலத்தில் வளர்ந்த இவற்றை நேமம் இலுப்பக்ககுடிக்கோயிலுக்கு முன்னே அமைத்திருப்பது ஆராயத்தக்கது. எவ்வாறு இவ்வைப்பு முறை கொண்டு வரப் பட்டது என்பது தெரியவில்லை.

## திருவேட்பூருடையார்

நாட்டுக்கோட்டை நகரத்தார்களில் இரணியூர், பிள்ளையார்பட்டிக்கோயிலைச் சேர்ந்த நகரத்தார்கள் தங்கள் வீட்டுத் திருமணச் சடங்குகளில்

``கல்வாசல் நாட்டில் இளையாத்தக் குடியான
குலசேகர புரத்தில் இரணியூர் மருதங்
குடியான இராசநாராயண புரத்தில்
பிள்ளையார் பட்டியான திருவேட்பூருடையார்"

என்று எழுதிவருகின்றனர். இங்கனம் ஒவ்வொரு கோயிலாரும் அவரவர்களுக்குப் பொருந்தும் தொடர்களைத் தொன்று தொட்டு எழுதிவருகின்றனர். இக்காலத்தில்

தாலுகா, மாவட்டம் என்பனவற்றைச் சொல்லி ஊரை எழுதுவது போல அக்காலத்தில் ஊர், அவ்வூர் இருக்கும் நாடு ஆகியவற்றொடு எழுதிவந்திருக்கின்றனர்.

## இரண்டும் ஒன்றாய் வளர்தல்

இளையாத்தக்குடி, இரணியூர், பிள்ளையார் பட்டி ஆகிய மூன்று கோயிலாரும் எழுதும் திருமணவாசகங்களில் கல்வாசல்நாடு என்பது நாட்டுப் பிரிவைக் குறிக்கும். முன்காட்டிய அத்தொடரிலுள்ள ஏனைய பெயர்கள் எல்லாம் ஊர்ப் பெயர்களே. இளையாத்தக்குடி, குலசேகரபுரம் இரண்டும் ஒரே ஊர்; ஏனைய இரணியூர், பிள்ளையார் பட்டி ஆகியன உட்பிரிவுகள். இந்த இரு பிரிவினர்க்கும் சொந்தமான ஊருணிகளும் விநாயகர் கோயில்களும் இளையாத்தக்குடியிலும் உள்ளன. இவ்விரண்டு கோயில்களும் பின்னாளில் தனித்தனியாகப் பிரிந்தன. இவ்விரு கோயிலாரும் தங்கள் திருமணத்திற்குத் தங்கள் கோயிலில் பாக்குவைக்கும் போது இளையாத்தக்குடியிலும் பாக்குவைக்கின்றனர். ஒரு கிளையிலிருந்து தழைத்தமையாலே இது தொடர்கிறது. ஆனால், பிள்ளையார்பட்டிக் கோயிலார் இரணியூர் மருதங்குடி என்று தங்கள் இசைவுபிடிமானத்தில் எழுத இரணியூர் நகரத்தாரும் இரணியூர் மருதங்குடி என்று எழுதுவர். பிள்ளையார்பட்டி என்ற பெயரால் இரணியூரார் குறிப்பில் வருவதில்லை

பாலகவி வயிநாகரம் இராமநாதன் செட்டியார், இரணிக் கோயிலார் (இவர்களை இரணியூர்க் கோயிலார்) அண்ணன் என்றும் பிள்ளையார்பட்டிக் கோயிலார் தம்பி என்றும் குறிப்பிடுகிறார். மூத்தவர் என்பதாலேயே இவர்களுடைய கோயில் பிள்ளையார்பட்டிக்கு முன் நிறுத்தப்பட்டது. இரணியூர், பிள்ளையார்பட்டி ஆகிய இரண்டு கோயிலாரும் `இரணியூர் மருதங்குடியான' என்ற தொடரைப்பயன்படுத்துகின்றனர். இரணிக் கோயிலார் பிள்ளையார் பட்டியிலும் பிள்ளையார்பட்டிக்கோயிலார் இரணியூரிலும் வாழ்ந்தமையால் போலும் இரண்டு ஊர்களையும் எழுதுகின்றனர்.

இரணியூர்க் கோயிலாரும் பிள்ளையார்பட்டிக் கோயிலாரும் தனித்தனியாகப்பிரியா. ஒன்றாக இருந்த போது `திருவேட்பூருடையார்' என்றழைக்கப்பட்டனர். இரண்டு கோயிலாரும் தனித்தனியாகப் பிரிந்த போது இருவரும் `திருவேட்பூருடையார்' என்றே எழுதிக் கொண்டனர். ஒருவர் பழைய பெயரை வைத்துக்கொள்ள இன்னொருவர் புதிய பெயரை வைத்துக்கொள்ள வில்லை. ஒரேபெயரால் இரண்டு பிரிவுகுறிக்கப்படுவது இங்குத்தான்.

இரணியூர்க்கு வேறு பெயரில்லை. இக்கோயிலார் தங்களைச் சொல்லிக்கொள்ளும் போது`இரணிக்கோயில் என்றே சொல்லுவர்; இரணியூர்க் கோயில் என்று சொல்ல மாட்டார்கள். பிள்ளையார்பட்டிக்கு மருதங்குடி என்பது பழைய பெயர். இதற்கு ஈங்கைக் குடி என்பது இன்னொரு பெயர். மலையுள்ள பகுதி ஈங்கைக்குடி. திரு வீங்கைக்குடிக்கு நகரத்தார்கள் குடியேறிய போது இதனை `இராசநாராயணபுரம்' என்று பெயரிட்டுக்குடியேறினர். [சா. கணேசன்-- பிள்ளையார்பட்டித்தல வரலாறு. கல்வெட்டு எண் 9] இக்கல்வெட்டின் காலம் கி.பி. 1202.

## பிள்ளையார்பட்டியும் ஓங்காரக்குடியும்

பிள்ளையாரின் பெருமை பரவிய பின் அவர் இருக்கும் ஊருக்குப் பிள்ளையார் பட்டி என்ற பெயர் ஏற்பட்டது. வயிரவர் சிறப்பாகப் போற்றப்படும் ஏழகத்துக்கு (ஏழகப் பெருந்தெரு) வயிரவன் பட்டி என்று பெயர் வந்தது போல இப்பெயர் அமைந்தது. லிங்கம் இல்லாமல் ஆவுடையார் இருக்கும் கோயிலுள்ள ஊர் ஆவுடையார் கோயில் என்றும் பெயர் பெற்றது போலப்பிள்ளையார் பட்டி என்ற பெயரும் ஏற்பட்டது.

நகரத்தார்கள் காவிரிப்பூம்பட்டினத்திருந்து பாண்டிய மன்னனால் அழைத்துவரப் பெற்று ஓங்காரக் குடியில் குடியேறினர் என்று தனவைசியராகிய நாட்டுக்கோட்டை நகரத்தார் சரித்திரம் (1894:ப 21) கூறுகிறது. இங்கு ஓங்காரக்குடி என்று கூறப்படும் ஊர் பிள்ளையார் பட்டியே. கானாட்டைச் சேர்ந்த கரைக்குடி ஐஞ்ஞூற்றுவன் பெருந்தெருவிலிருந்த நகரத்தார் குடியேறியதைக் கல் வெட்டுக்கள் தெரிவிக்கின்றன. (சா. கணேசன் -- க.வே. எண் 9) இதை அடிப்படையாகக் கொண்டே நகரத்தார் வரலாறு எழுதியவர்கள் மேலே கூறிய வரலாற்றை எழுதியிருக்கின்றனர்.

ஓங்காரம் என்பது பிரணவம்; பிரணவம் பிள்ளையார் வடிவம். பிரணவத்தின் திரிந்த வடிவம் பிள்ளையார் சுழி: பிரணவமே வேத மூலம்; இஃதே எல்லா ஒலிகளுக்கும் மூலகாரணம். எனவேதான் பிள்ளையார் பட்டியை ஓங்காரக்குடி என்று பரியாய நாமமாக எழுதினர். பிள்ளையார் பட்டியிலுள்ள கல்வெட்டில் வரும் `கரைக்குடி' என்ற பெயரும் இதற்கு ஒத்ததாக விளங்குகிறது.

பிள்ளையார் பட்டிக் கோயிலார் பிள்ளையார் பட்டியை உரிமையாகப் பெற்றபின் பிள்ளையார்பட்டிக் கோயிலார் எனப் பெற்றனர். ஆனால் இவர்கள் 'திருவேட்பூர்' என்று எழுதுவது ஏன்? இப்பெயர் பிள்ளையார்பட்டிக் குரிய பெயர் என்று இங்குள்ள கல்வெட்டோபிறவோ குறிக்கவில்லை. 'திருவேட்பூருடையார்' என்ற தொடருக்குத் திருவேட்பூரயுடையார்' என்ற தொடருக்குத் திருவேட்பூரையுடைய வர்கள் என்று பொருளாகும். ஏனைய கோயில்களில் ஒக்கூருடையார், கண்ணூருடையார், குளத்தூருடையார் என்பன போன்ற பெயருடைய பிரிவுகள் காணப் படுவதுபோலத் திருவேட்பூருடையார் என்ற பெயரும் வழங்குகிறது.

## திருவேட்பூர் எது?

மறவா மதுரை அகளங்கீசுவரர் கோயிலிலுள்ள கல்வெட்டொன்றில் 'கல்வாசல் நாட்டு இளையாத்தக்குடியான குலசேகரபுரத்து திருவெட்பூருடையான்' (புசக 848) என்ற தொடர் வருகின்றது. இக்கல்வெட்டின் காலம் கி.பி. 1577. இதே தொடர் கோனா பட்டுக் கற்பக விநாயகர் கோயில் அருகேயுள்ள கல் வெட்டிலும் காணப்படுகிறது. இதன் காலம் கி.பி. 1577. அதிராப்புலி விசையாலயத் தேவர் காலக்கல்வெட்டு சேவகப் பெருமாள் செட்டியார் மகன் அழகன் செட்டியார் என்பவர் அழகப் பெருமாள் ஊருணியையும் கற்பக விநாயகர் கோயிலையும் கட்டினார். அக் கோயிலுக்கு விசையாலயத் தேவன் கோனா பட்டுப்பைய வயலில் நிலம் விடுத்தான். அதனைத் தெரிவிக்கும் கல்வெட்டில்

"இளையாத்தக்குடியான குலசேகரபுத்துத்
திருவெட்பூ ருடையான் அழகபரி....
(அழகிய பரிபாலர்) சொலையார் எகப்
பெருமாள் சேவகப் பெருமாள்
புத்திரன் அழகன் செட்டியார் " (புசக 861)

என்று வருகின்றது. இதனால் கி.பி. 1577 இல் பிள்ளையார்பட்டிக் கோயில், இரணிக் கோயில் என்று தனித்தனிப்பிரிவு ஏற்படவில்லை; திருவேட் பூருடையார், இளையாத்தக் குடியைச் சார்ந்த ஒரு பிரிவாகவே இருந்திருக்கிறது.

பிள்ளையார்பட்டியிலுள்ள கல்வெட்டு ஒன்று (சா.கணேசன்: க.வெ.எண்9) கி.பி. 1202 இல் பொறிக்கப்பட்டது. இதில் இரராசநாராயணபுரம் என்று பிள்ளையார்பட்டிக்குப் பெயரிடப்பட்ட குறிப்புக் காணப்படுகிறது. 'இளையாத்தக்குடி' என்ற பெயர் இங்குள்ள ஒரு கல்வெட்டிலும் பயில வில்லை. கோனா பட்டுக் கல்வெட்டு நானூறு ஆண்டுகள் கழித்து வெட்டப்பட்டும், இராசநாராயண புரத்தைச் சொல்லவில்லை. ஏன்? கோனாபட்டுத்திரு வேட்பூருடையார் பிள்ளையார்பட் டியில் நிலம் வாங்கிக் குடியேறியவர்களில் இல்லை. எனவேதான் கி.பி. 1577 இல் இன்று எழுதுமாறு எழுதிலர்.

பிள்ளையார் பட்டிக் கோயிலிலுள்ள கல் வெட்டுகள் மருதங்குடி, ஈங்கைக்குடி, இராச நாராயணபுரம் என்ற பெயர்களைப் பிள்ளையார் பட்டிக்குக் கூறுகின்றன. எனவே திருவேட்பூர் என்ற பெயர் பிள்ளையார்பட்டிக்கு உரியதன்று. திருவேட்பூர் என்ற பெயர் புதுக்கோட்டைக்கும் பக்கத்திலுள்ள திருக்கோ கர்ணத்தின் பழைய பெயராம். இங்குள்ள திருக் கோகர்ணே சுவரர் கோயில் கல்வெட்டுகளில் 'திருவேட் பூர்' என்ற பெயர் காணப்படுகிறது.

"வல்ல(நாட்)டுக் கவிப்பால் திருவெட்ப்பூர் (கோக)ர்ணத்து மஹாதெவர்க்கு" (புசக 73)

இங்குள்ள இன்னொரு கல்வெட்டிலும் 'திருவெள்ப்பூர்'(புசக 239) என்று பெயர் வருகின்றது. இதனால் திருவேட்பூர் என்பது திருக்கோகர்ணத்தின் தொன்மைப் பெயர்; திருக் கோகர்ணம் என்பது பிற்காலப் பெயர்; ஆதலால் திருவேட்பூரில் வாழ்ந்த இளையாத்தக்குடி நகரத்தார்கள், மருதங்குடியான பிள்ளையார்பட்டிக்கு வந்து நிலம் வாங்கி இராச நாராயணபுரம் என்று பெயரிட்டு வாழ்ந்தனர். அதனாலேயே அவர்கள் திருவேட்பீருடையார் என்றழைக்கப்பட்டனர். இப்பகுதியைச் சார்ந்த மணியம்பலம், குளத்தூர், திருவரங்குளம், நார்த்தா மலை போன்ற ஊர்களில் நகரத்தார்கள் வாழ்ந்திருக்கின்றனர்.

திருவேட்பூருடையார் என்று பிள்ளையார்பட்டிக் கோயிலார் எழுதுவதால் பிள்ளையார் பட்டி திருவேட்பூர் என்று மயங்கியவர்களுமுண்டு. (தேவகோட்டை சு.செ.மேவு. மெய்யப்ப செட்டியார் மணிவிழா வெளியீடு-ப:167.

இரணியூர், பிள்ளையார்பட்டிக் கோயில்களில் உட்பிரிவுகள் தோன்றவில்லை. இரணியூரில் புள்ளி 1289, பிள்ளையார்பட்டியில் புள்ளி 1714 (வயிநாகரம் அ. இராமநாதன் செட்டியார் ப:47) மிகுதியாகியும் பிரிவுக்குள் பிரிவு அமைக்கப் படவில்லை.

பிள்ளையார்பட்டி, இரணிக் கோயிலார் தாங்கள் முன் வாழ்ந்த ஊர்ப் பெயரால் தங்களைக் 'திருவேட்பூருடையார்' என்று அழைத்துக் கொண்டனர். நகரத்தார் உட்பிரிவில் அமைந்த ஊர்கள் எல்லாம் நகரத்தார்கள் முன்னர் வாழ்ந்த ஊர்களின் பெயராதல் வேண்டும் என்ற உண்மையை வெளிப் படுத்துகின்றது.

## பிரிவின்றிப் பெயர் பெற்றமை

பிள்ளையார்பட்டிக் கோயிலுக்குப்பின் நேமம் கோயில் எண்ணப் பெறுகிறது. நேமம், இலுப்பக்குடிக் கோயில்களில் உட்பிரிவு இல்லை. நேமம், இலுப்பக்குடி, சூரைக்குடி, வேலங்குடி ஆகிய நான்கு கோயில் பிற கோயில்கள் போலப் பழமையானவை. இவை நான்கிலும் உட்பிரிவு இல்லை. இப்பிரிவுகளைக் கோயில் பெயரால் மட்டும் சொல்லியிருக்கலாம். அவ்வாறு சொல்லாமல் ஒவ்வொன்றிலும் ஒரு பெயர்த் தொடர் அமைத்துச் சொல்லி வருகின்றனர். இப்பெயர்கள் ஒரு கோயிலில் உட்பிரிவு இருந்தால் எவ்வாறு கூறுவார்களோ எழுதுவார்களோ அதுபோலவே எழுதப்பட்டிருக்கின்றன. இந்தப்பிரிவுகளும் ஏதோ ஒரு பொதுப்பகுப்பிலிருந்து பின்னர் பிரிந்திருக்கக் கூடும் என்றும் இவ்வுட் பிரிவுகளும் பெயரும் பழைமையானவை என்றும் வெளிப்படுகின்றன.

இந்த வழிவழிப் பழக்கத்தை நோக்கும் போது ஏழு அல்லது ஒன்பது கோயில்களும் அவற்றின் பிரிவுகளும் எல்லாம் ஒரே பிரிவின் உட்பிரிவுகளாக இருந்து தனித்தனிக் கோயில் உரிமையால் பிரிந்து வளர்ந்தவை என்பது போதரும். இத்தாய்ப்பகுதியை'இளையாத்தக் குடி நகரம்' என்று அழைத்திருக்கின்றனர். இவக்களுக்குத் தொடக்ககாலத்தில் இளையாத்தக்குடிக்கோயிலில் வழிபடும் உரிமை இருந்தது; ஆனால் கோயில் உடைமை இல்லை.

## ஊர்ப்பெயர் உட்பிரிவு இளநலம்

நான்கு கோயில்களும் அவற்றின் உட்பிரிவுகளும்:

| | | |
|---|---|---|
| 1. | நேமம் கோயில் | இள நலமுடையார் |
| 2. | இலுப்பைக்குடிக் கோயில் | சூடாமணிபுரமுடையார் |
| 3. | சூரைக்குடிக் கோயில் | புகழ்வேண்டியபாக்கமுடையார் |
| 4. | வேலங்குடிக் கோயில் | கழனி நல்லூருடையார் |

இந்த நான்கு கோயில்களின் உட்பிரிவுப் பெயர்கள் அனைத்தும் ஊர்ப் பெயர்களே; பிற கோயில் உட்பிரிவுகளின் பெயரும் இவ்வாறு அமைந்தனவேயாகும். நேமம் கோயிலின் உட்பிரிவுப் பெயர் 'இளநலமுடையார்' ஆனால் இப்பெயர் ஊரின் பெயர்தான் என்று அறியுமாறில்லை. பிற கோயில்களிலுள்ள உட்பிரி வெல்லாம் ஊர்ப் பெயர்களாக இருத்தலின் 'இளநலம்' என்பதும் ஊர்ப் பெயரே. இக்கருத்தை வலியுறுத்துமாறு 'தேனாறு பாயும் இள நலமுடையார்' என்ற தொடர் விளங்குகிறது. நேமம், குன்றக்குடி உய்யக் கொண்டான் சிறு வயல் ஆகிய ஊர்கள் வழியாகத்

தேனாறு பாய்கின்றது. ஆறுபாயுமிடம் ஊரேயாதல் வேண்டும். இதனாலும் 'இள நலம்' என்பது நேமத்துக் குரிய பெயர் என்று தெளிவாகும். ஆறுபாயும் சிறப்புடன் நேமம் சொல்லப்படுவது குறிக்கற் பாலது.

நேமம் செயங் கொண்ட சோழீசர் திருக் கோயிலைத் திருப்பணி செய்தவர்கள், அதனை முழுமையாக இடித்து விட்டுப் புதியதாகக்கட்டினார்கள். பழைய சிவன் கோயிலிருந்த கல்வெட்டுகள் அழிந்துவிட்டன. இடித்துத் தள்ளிய சிவன் கோயில் கற்களைக் கொண்டு வடபாலுள்ள அம்மன் கோயிலைக் கட்டியிருக்கின்றனர். இடம் மாறியும் சிதைந்தும் கல்வெட்டுகள் இருப்பதை அம்மன் கோயிலில் காணமுடிகிறது.

## இலுப்பையும் இருப்பும்

இலுப்பக்குடி என்ற பெயர் இருப்பை மரங்கள் நிறைந்தமையால் ஏற்பட்ட பெயர். தமிழகத்தில் கோயில்கள் இருக்குமிடத்தைச் சுற்றி இலுப்பை மரங்களை வளர்ப்பது தான் நடை முறை. இலுப்பை விதைகளைக் கொண்டு எடுக்கும் எண்ணெயே பழங்காலத்தில் கோயில்களில் விளக்கெரிக்கப் பயன்பட்டது; கோயிலுக்கு இரவில் ஒளி தந்து மக்கள் வழிபட இலுப்பெண்ணெய் விளக்குகளே ஏற்றப்பட்டன. கோயிலின் மிகுதியான தேவையைக் கருதி ஊரார் கோயிலை ஒட்டி இலுப்பைத் தோப்புகளை உண்டாக்கிக் காத்தனர். எனவே கோயிலைச் சுற்றி இலுப்பைத் தோப்பு இருப்பதை எங்கும் காணமுடியும். இலுப்பை மரங்களால் இலுப்பைக் குடிக்குப் பெயர் வந்திருக்குமா? வேறு பெயர் ஏதேனும் வழங்கியிருக்குமா? என்று ஆராய்தல் வேண்டும்.

இருப்பு என்ற சொல் இலுப்பு என்று மாறி ஒலிக்கும். இருப்பைமரம் என்பதையே இலுப்பை மரம் என்பர். இதனை இருப்பை மரம் என்று கொள்ளாமல், 'இருப்பு' என்று கொண்டால் 'நிலை' என்று பொருள் தரும். 'உன்னிருப்பென்ன? அவனிருப்பென்ன?' என்ற வழக்கை நோக்குக. இருப்புக்குடி என்பது இலுப்புக்குடி என்று மாறிற்று; ரகரம் லகரமாக மாறி ஒலிக்கின்றது. அன்றி இருப்பு என்பதைக் கையிருப்பு என்று பொருள் கொண்டு, இவ்வணிகக் குழுவின் வரவு செலவு இருப்பைக் கணக்குப் பார்த்துக் காத்து வந்தவர்கள் இப்பிரிவினரெனலாம். இதனால் இப்பெயர் இவர்களுக்கு ஏற்பட்டதாகும். இவ்விளக்கங்கள் சொல்லின் அடிப்படையில் எழுந்தவையே; இவற்றை உறுதிப் படுத்தப் போதிய ஆதாரங்கள் கிடைத்தில.

இலுப்பைக் குடிக் கோயிலார் இலுப்பைக் குடிக்குரிய மற்றொரு பெயராகப் 'புகழிடங் கொடுத்த பட்டணம்' என்பதைச் சொல்லுகின்றனர். தமிழ் நாடு கெஜட்டில் இலுப்பைக் குடியை 'இலுப்பைக் கிராமம் என்றும் இலுப்பை மரங்கள் நிறைந்த பெரிய சோலை' என்றும் எழுதியுள்ளனர். (சேது அருணாசலம் (1985)-இலுப்பைக்குடிக்குட முழுக்குவிழா மலர்) நகரத்தார்கள் எழுதும் 'புகழிடங் கொடுத்த பட்டணம்' என்பது போன்ற பெயர்கள் அரசு ஆவணங்களில் காணப்படுவதில்லை. இளையாத்தக்குடி, மாத்தூர், வயிரவன் கோயில் ஆகியவற்றில் குலசேகரபுரம், வீர பாண்டிய புரம் என்று காணப்படுமாறு இலுப்பைக் குடியில் புரம் என்பது முன்னமையாது புகழிடங் கொடுத்த பட்டணம் என்பது முன்னமைந்துள்ளது; இது மற்ற கோயில் தொடரமைப்பிலிருந்து வேறுபட்டிருக்கிறது. பின்வரும் எடுத்துக்காட்டால் வேற்றுமையை அறிக:-

## மாத்தூர்

கேரளசிங்க வளநாடாகிய பிரம்பூர் நாட்டில் மாற்றூரான வீரபாண்டிய புரத்தில் அரும்பாக்கூடருடையார்.

## இலுப்பைக்குடி

கேரள சிங்க வள நாடாகிய பிரம்பூர் நாட்டில் இலுப்பைக்குடியான புகழிடங் கொடுத்த பட்டணத்தில் சூடாமணி புரமுடையார்.

பட்டணம், பட்டினம் என்ற வழக்கு கடற்கரை ஊர்களுக்குத்தான் உரியது. காவிரிப் பூம்பட்டினம், நாகபட்டினம் என்று வழங்குவன இதை மெய்ப்பிக்கும். இலுப்பைக்குடி நகரத்தார் சூடாமணி புரத்திலிருந்து வந்தவர்கள் என்று கொண்டால், சூடாமணிபுரம் எங்குள்ளது? என்பது ஆராய்தற் குரியது. இலுப்பக்குடியின் வேறு பெயர் சூடாமணிபுரம் என்ற கருத்துப் பொருத்தமாக இல்லை. கடாரம், ஸ்ரீவிஜயம் ஆகிய நாடுகளின் சைலேந்திரமன்னன் மாற விசயோத்துங்கவர்மன் என்பான் தந்தை சூடாமணி வர்மன் என்பவன் ஆவான். நாட்டுக் கோட்டை நகரத்தார்களின் அயல் நாட்டுத் தொடர்பை நோக்கும் போது, இம்மன்னன் பெயருக்கும் சூடாமணிபுரம் என்ற பெயருக்கும் ஒரு தொடர்பிருக்கக்கூடும் என்று தோன்றுகின்றது. குலசேகர புரம், வீரநாராயணபுரம் என்பன பாண்டிய மன்னர்களின் பெயர்கள்; அவைபோலச் சூடாமணிபுரம் என்பது மாற விசயோத்துங்கவர்மனுடைய தந்தை பெயராகலாம். இதனை வரையறுத்துக் கூறச் சான்றுகள் இன்று கிட்டில.

சூடாமணி என்ற சொல் முடிமணி, தெய்வமணி என்பன வற்றைச் சுட்டும். தலையில் சூடும் அணிகாரணமாக இப் பெயர் இக்கோயிலாருக்கு ஏற்பட்டிருக்கும் என்று கருதுவது பொருத்தமில்லை. ஏனைய கோயில்களில் மன்னர் பெயர்த் தொடர்பிருப்பது போல இப்பெயரும் மன்னர் தொடர்பாகவே இருப்பதுதான் முறையாகும்.

## புகழ்வேண்டிய பாக்கமுடையார்

சூரைக்குடிக்கோயிலார் 'புகழ் வேண்டிய பாக்க முடையார்' ஆவர். இப்பெயர்'இலுப்பைக் குடியான புகழிடங் கொடுத்த பட்டணத்தில்' என்று வரும் பெயருடன் ஒத்துள்ளது. தேசிக நாராயண புரத்தின் உட் பிரிவு புகழ் வேண்டிய பாக்கம்; சூடாமணி புரத்தைத் தன்னகத்தே கொண்டது புகழிடங் கொடுத்த பட் டணம். இது தான் இரண்டுக்குமிடையே வேற்றுமை. புகழிடம் என்பதைப் புகலிடங் கொடுத்த பட்டணம் என்றும் சிலர் எழுதுகின்றனர். புகழ் என்ற சொல் அடைக்கலம் என்ற பொருளையுடையது. அடைக்கலம் கொடுத்தவர்கள் இலுப்பக்குடிக் கோயிலார் என்றும் அடைக்கலம் வேண்டி நின்றவர்கள் சூரைக்குடிக் கோயிலார் என்றும் புலனாகும். கடல் சீறிப் பொங்கி வெள்ளமாய்ப் பாக்கத்தை (சூரைக் குடி) அழிக்கப்புகுந்த போது அடைக்கலம் வேண்டி வந்தவர்களுக்குப் பட்டினத்திலிருந்தவர்கள் (இலுப்புக்குடி) அடைக்கலம் கொடுத்தனர். பெயர்க்குரிய காரணங்கள் எவ்வாறாயினும் இரண்டு கோயிலார்க்கு மிடையே ஒரு நெருக்கம் நெடுநாள்களாக இருந்து வந்திருக்கின்றது என்பது உள்ளங்கை நெல்லிக்கனி. இரண்டு கோயிலையும் அடுத்தடுத்து எண்ணுவது இதனை வலியுறுத்தும்.

நகரக் கோயில்களில் நிறைவாக எண்ணப் பெறுவது வேலங்குடிக் கோயில்; இவர்களைக் கழனி நல்லூருடையார் என்பர். இளையாத்தக்குடி கழனி வாசற்குடியார், வயிரவன் கோயில் கழனிவாசலுடையார் ஆகியபெயர்கள் கழனி நல்லூருடையார் என்ற பெயருடன் ஒப்பு நோக்கத்தக்கன. கழனிகள் நிறைந்த நல்லூரில் வாழ்ந்தவர்கள், வேலங்குடிக் கோயிலார்; மேற் சுட்டிய மூன்று கோயிலாரும் அருகருகே இருந்தமையால் இவ்வாறு ஒற்றுமையும் வேற்றுமையுமுள்ள பெயர்களால் அழைக்கப்பட்டனர் போலும்.

நகரக் கோயில் உட்பிரிவுகள் பற்றிய ஆய்வில் பின்வரும் முடிவுகள் சிந்திக்கத்தக்கன.

ஒன்பது கோயில்களில் மூன்றில் தான் உட்பிரிவு உண்டு; ஏனையவற்றில் உட்பிரிவு கிடையாது. ஆனால் உட்பிரிவுகளைப் போல அவற்றுக்குப் பெயரிட்டிருக்கின்றனர். எல்லாக் கோயிலும் உட்பிரிவு இருந்தாலும்-இல்லாவிட்டாலும்-அப்பிரிவுக்கு ஒரு பெயருண்டு. இவ்வாறு அமைந்த பெயர்கள் இருபத்திரண்டு; ஆனால் அமைந்த உட்பிரிவுகள் இருபத்து மூன்று. திருவேட்பூருடையார் என்பது இரணியூர், பிள்ளையார்பட்டி ஆகிய இருவர்க்கும் வருகிறது. வயிரவன் கோயில் சிறு குளத்தூருடையாரிடம் மூன்று பிரிவிருந்தாலும் ஒரே வாசகம் எழுதப்பெறுகிறது.

இளையாத்தக்குடிக் கோயிலில் இன்று ஏழுபிரிவுகள்; திருவேட்பூருடையாரைச் சேர்த்தால் எட்டு, ஆதலின் இளையாத்தக்குடிக் கோயிலுக்கு எட்டுப்பிரிவுகள் இருந்தன என்பது தெளிவாகும். ஒன்று பிரிந்த பின்னர் புதிதாக இன்னொன்று தோன்றியிருக்க வேண்டும்; அந்த அந்தக் கோயிலில் காக்கப்பட்டுவரும் பழைய ஏடுகளை ஆராய்ந்தால் கோயில் உட்பிரிவுகள் பற்றி மேலும் அறிய முடியும்.

திசையாயிரத்தைந் நூற்றுவர் நாட்டுக் கோட்டை நகரத்தார்களின் பழைய குழு இக்குழுவின் வரலாறு மிகச் சுருக்கமாக இங்கு இடம் பெறுகிறது.

## ஐந்நூற்றுவர் பழமை

தமிழகத்தில் 'நானாதேசி திசையாயிரத்து ஐந்நூற்றுவர்' என்று ஒரு வணிகக் குழு குறிக்கப் பெறுகின்றன. இக்குழுவினர் தக்காணத்திலும் தமிழகத்திலும் வணிகம் செய்தனர். இவர்கள் சில சமயம் சித்திரமேழி நாட்டார் என்ற வணிகக் குழுவுடன் இணைந்து வணிகம் செய்தனர். இக்குழுவில் தமிழ், தெலுங்கு, கன்னடம் முதலியபல மொழி பேசுவோர் இருந்தனர். கல் வெட்டாய்வாளரின் பின்வரும் கருத்து இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

"கிறிஸ்து அப்தத் தொடக்கமான நூற்றாண்டுகளில் இவர்களின் தாயகம் தக்காணத்தில் கன்னட நாட்டில் உள்ள அய்ஹொளே (அய்யம் பொழில்) யினின்றும் பரவி, தென்னாடு முழுவதும் தம் பண்டங்களுடனும், ஊர்திகளுடனும், அவற்றைக் காக்கும் படைகளுடன் சென்று, ஆங்காங்கே தம் வணிக நிலையங்கள், பண்டக சாலைகளான தாவளங்கள் அமைத்து, அவ்விடங்களிலுள்ள பொருள் தானிய விளைஞர்களான சித்திரமேழி நாட்டார் இணைப்புகளுடன் ஒன்றி, அவ்வவ்விடங் களுக் கேற்ற வாறு, அவ்வூர்களை அய்யம் பொழில், நகரம், மணிக் கிராமம், பட்டினம், வீரபட்டினம், நியமம் (நேமம்), பெருந்தெரு, என்ற வகைப் பெயர்களை இட்டமைத்தார்கள்".

இம் மேற்கோள் பகுதியால், திசையாயிரத்து ஐந்நூற்றுவர் பல்வேறு குழுவினருடன் நெருங்கிய உறவு கொண்டிருந்தமை புலப்படும். இக்குழுவைச் சார்ந்தவர்கள் பிற்காலத்தில், தனித்தனிக் குழுக்களாகப் பிரிந்து போயினர்.

நாட்டுக் கோட்டை நகரத்தார்களில் ஐந்நூற்றீசரை வழிபடு கடவுளாகக் கொண்டவர்கள் மாத்தூர்ப் பிரிவினர். ஐந்நூற்றீசர், திசையாயிரத்து ஐந்நூற்றுவர் குழுவைச்சார்ந்த வழிபடு கடவுளாவர். வணிகர்கள் சிவபெருமானையே வழிபடுதல் வேண்டும் என்று சிவாகமங்கள் வலியுறுத்துகின்றன. திசையாயிரத்து ஐந்நூற்றுவர், குழுவில் இருந்து பிரிந்த பகுதியினர் ஐந்நூற்றுவர்; இவர்கள் தங்கள் குழுவின் பெயரால் சிவபெருமானை 'ஐந்நூற்றீசர்' என்று அழைத்தனர்.

## பிரிதலும் வளர்தலும்

'திசையாயிரத்தைந் நூற்றூவர்' குழுவைச் சார்ந்த இன்னொரு பகுதியினர், 'ஆயிரம் வைசியர்' என்று தனியாகப் பிரிந்தனர். ஆயிரம், ஐந்நூறு என்ற எண்ணிக்கையைக் கூட்டினால் ஆயிரத்தைந்நூறு வரும். ஐந்நூற்றுவர் என்ற தனிக்குழுப் பிரிந்தபின் கோயம்புத்தூர் வட்டாரத்தில் 'ஐந்நூற்று ஒன்றாம் செட்டியார்கள்' என்று சிலவைசிய மரபினர் தங்களுக்குள் ஒரு குழுவாகி வளர்ந்தனர். அவர்கள் இன்றும்'ஐந்நூற்றொன்றாம் செட்டியார்கள் ' என்று சொல்லிக் கொள்ளுகின்றனர். ஒருவரிலிருந்து ஒருவரை வேறுபடுத்த இப்படிப் பெயரிட்டுக் கொண்டனர். செட்டியார்கள் என்று சொல்லப்படும் பல்வேறு இனத்தார்கள், ஒரு குழுவினராக இருந்து பல காரணங்களால் தனித்தனியே சிதைந்து போயினர் என்பதை இப் பெயர்கள் உணர்த்துகின்றன.

## காலக் குறிப்பு

திசையாயிரத்தை ஞூற்றுவர் என்ற வணிகக் குழுவினைச் சார்ந்த நானா தேசிகள் இன்றையச்செட்டி நாட்டுக்குப் பழங்காலத்திலேயே வந்து விட்டனர். அவர்கள் இங்குவந்த காலத்தை அறுதியிட்டுரைக்கப் போதிய ஆதாரங்கள் கிட்டவில்லை.

டாக்டர் கே.வி. இராமன் கி.பி. எட்டாம் நூற்றாண்டுக்கு முன்னரே நானாதேசிக் குழுவினர் பாண்டிய நாட்டில் இருந்தனர்' என்று கருதுவர். பிள்ளையார் பட்டிக் குகைக் கோயில், ஐந்நூற்றுவர் வணிகக் குழுவினரோடு நெருங்கிய தொடர் புடையது. புதக்கோட்டை மாவட்டத்திலுள்ள முனியந்தைக் (முனி சந்தை) கல்வெட்டும் இதனை உணர்த்துகின்றது. இக்குழு வினரைப் பற்றிப் பல்வேறு காலங்களைச் சார்ந்த நார்த்தாமலைக்கல்வெட்டு, பிரான் மலைக் கல்வெட்டு ஆகியனவும் திசையாயிரத்தைந்நூற்றுவரைச்சுட்டுகின்றன.

## பிரான் மலைக் கல்வெட்டு

திசையாயிரத்து ஐந்நூற்றுவர் குழுவிற்கும் சித்ர மேழிப் பெரிய நாட்டார் என்ற குழுவிற்கும் நெருங்கிய தொடர்பிருந்தது. இராஜாதி ராஜ சோழன் காலத்திய திட்டைக் (291/8) கல்வெட்டு, 'திசையாயிரத் தைஞ்ஞூற்றுவர்' சித்தரமேழி பெரிய நாட்டாருடன் கூடி வணிகம் செய்தனர் ' என்று தெரிவிக்கிறது. இதனால் திசையாயிரத்தைஞ் ஞாற்றுவர் வாணிபம் மட்டுமே செய்தனர் என்பதுணரப்படும்.

செட்டிநாட்டிலுள்ள பிரான்மலைக்கல் வெட்டு, திசையாயிரத்து ஐந்நூற்று வரைப் பற்றிய செய்திகளை விரிவாகக் கூறுகிறது. இதில் பல பிரிவினர் பற்றிக் குறிக்கப்பட்டுள்ளனர். இதில் கையெழுத்திட்டவர்களின் பெயர்களில் 'செட்டி' என்ற பின்னொட்டுக் காணப்படுகிறது.

எண் அடிப்படை

குழுக்கள், இனங்கள் தங்கள் பெயர்களை எண்ணுடன் அமைத்துக் கொள்வது மிகப் பழைய வழக்கு. சுந்தரமூர்த்தி சுவாமிகள் காலத்திலேயே தில்லை வாழந்தணர்'தில்லை மூவாயிரவர்' என்று சுட்டப்பட்டனர். அவ்வாறே ஆயிரவர், ஐந்நூற்றுவர் என்று எண்ணொடு பெயர்களை அமைத்துக் கொண்டனர். ஒருவரை விட இன்னொருவர் பெரியவர் என்று காட்டிக் கொள்ளக் கூடுதலான எண்ணைத் தங்கள் பெயரோடு அமைத்துக் கொண்டனர். காலப் போக்கில், இந்தப் பெயர்களோடு நானாதேசி, பரதேசி என்ற பெயர்களும் மணிக் கிராமம், அஞ்சு வண்ணம் என்ற பெயர்களும் வழங்கின.

வாழ்விடமும் பெயரும்

திசையாயிரத்தைஞ் ஞூற்றுவர், தாங்கள் தங்கிய இடங்களை ஒட்டியும் பிற சூழல்களை அடிப்படையாகக் கொண்டும் தங்களைக் காலந்தொறும் வெவ்வேறு வகையாக அழைத்துக் கொண்டனர். வாழ்ந்த இடத்தை ஒட்டித் தங்களை அழைத்தனர்.

"ஸ்வஸ்தி ஸ்ரீ கோப்பரகேசரி வன்மர்க்கு
யாண்டு 20 இவ்வாண்டு கானக
நாட்டு முனியந்தை திசையாயிரத்
தைஞ்ஞூற்றுவர் பேரால்'

(PSI:617)

"நானா தேசித் திசையாயிரத்தைஞ்
ஞூற்றுவர்க்கு சிறப்பாக"

(கூடிLXXIL.P6)

"நானா தேசிய எடுத்த பாதமூத்த செட்டி" (ARE 121 of 1916).

இந்தத் தொடர்கள் திசையாயிரத்தைஞ்ஞூற்றுவர் குழுவுக்குப் பல நாடுகளொடும் உள்ள தொடர்பை உணர்த்துகின்றன. பற்பல நாடுகளிலும் ஆயிரம் திசைகளிலும் சென்று வணிகம் செய்யும் ஐஞ்ஞூற்றுவர் என்பதே இத் தொடரின் பொருளாகும்.

மைசூர் அரசு வெளியிட்டுள்ள கன்னடக் கல்வெட்டொன்று (Epigraphia Carnotica. Vol VII . SK 101). தென்னிந்திய வணிகக் குழுக்களைப் பற்றிக் கூறுகிறது. இக் கல்வெட்டு, இவ்வணிகக் குழுக்களின் பெருமையைப் 'பஞ்ச சதவீர சாஸனம்' என்று சுட்டுகிறது. 'பஞ்சசதம்' என்ற சமசுகிருதப் பெயரால் ஐந்நூற்றுவரே உணர்த்தப் படுகிறனர். இவர்களே இப்பெரிய குழுவின் அடிப்படையாக விளங்கினர்.

சுமத்திராவில் 'லோபா-டோவா' என்ற இடத்தில் கிடைத்த கல்வெட்டு (சக ஆண்டு 1010 க்கு நேரான கி.பி. 1088). ஒன்று 'ஆயிரத்தைஞ்னூற்றுவர்' சுமத்திராவில் தங்கி வணிகம் புரிந்தனர்,' என்று தெரிவிக்கின்றது. பர்மாவில் 'பகான்' என்னும் இடத்தில் கிடைத்த தமிழ்க்கல் வெட்டுக் காலத்தால் பழைமையானது. இக்கல்வெட்டு, குல சேகர ஆழ்வாரின் 'முகுந்த மாலா' நூலின் சில அடிகளுடன் துவங்குகிறது. இக்கல்வெட்டு முடியும் போது,

"திருச்செல்வம் பெருக! புக்கம் ஆன
அரிவர்த்தனப் புரத்து (அரிமர்த்தனபுரம்)
நானாதெசி விண்ணகர் ஆழ்வார் கோயில் திருமண்டபமுஞ்
செய்து திருக்கதவும் இட்டேன்,
மலை மண்டலன்னுந்துாய
மகோதையார் பட்டணத்து
ஈராயிரன் சிறியனான சீகுல
சேகர நம்பியேன்"

என்று முடிவு பெறுகின்றது. இக்குழுவினர் நானா தேசி என்றும் தங்களை அயல் நாடுகளில் குறித்துக் கொண்டமை புலனாம்.

திசையாயிரத்து ஐந்நூற்றுவர், கி.பி. எட்டாம் நூற்றாண்டு முதல் செட்டி நாட்டுப் பகுதியில் இருந்தனர். விசய நகர ஆட்சிக் காலத்திலும் கம்பெனியார் ஆட்சிக் காலத்திலும் திசையாயிரத்தைஞ்னூற்றுவர் தங்கள் கடலோடி வணிகச் செல்வாக்கை இழந்தனர். கம்பெனியாருடைய கடற்படை வளத்தாலும் கப்பல் வணிகத்தாலும், திசையாயிரத்தைஞ்னூற்றுவரின் கப்பல் வணிகம் நானா தேசங்களிலும் வணிகம் செய்த நிலை குலைந்தது. இதனால் ஒரு பெருங் குழுவினர் பலகிளைகளாகச் சிதைந்தனர். இந்திய விடுதலைக்கு முன்னர் நகரத்தார் பலரும் கப்பல் வைத்துக் கடல் வணிகமும் போக்கு வரவும் நடத்தியுள்ளனர். கப்பலோட்டிய தமிழர் வ.உ.சி. தொடங்கிய கப்பல் கம்பெனியில் நகரத்தார் பலர் பங்குதாரராக இருந்திருக்கின்றனர். இக்குழுவைச் சார்ந்தவர்களே ஐந்நூற்றுவர் என்னும் நாட்டுக் கோட்டை நகரத்தார்கள்.

## ஐம்பொழில் நாச்சியார்

திசையாயிரத்தைந்நூற்றுவர் ஐம்பொழில் தேவதையை வழிபடுவோர். இவர்களைப் போலக் கன்னட நாட்டு வணிகரும் கன்னிகாபரமேச்சுவரியைக் கொண்டாடுகின்றனர். மழவர் மாணிக்கத்தில் `நானாதேசி நாச்சியார் என்னும் அம்மை கோயில் இருந்தது. இப்பிரான் மலைக் கல்வெட்டில் இம்மரபினர்` ஸ்ரீ வாசுதேவ சகாயன் தேவி மூல பத்ரலோப ஸ்ரீ ஐம் பொழில் பரமேச்சுவரிக்கும் பூமிதேவிக்கும் மக்கள்' என்று சுட்டப் படுகின்றனர். இவ்வணிகக்குழுவினர் ஐம்பொழில் பரமேச்வரி என்ற தெய்வத்தையும் பூமி தேவியையும் வணங்கினர். ஐம் பொழில் பரமேச்சுவரியை வணங்கியமையால் இவர்கள் தங்களுக்குச் சிங்கக் கொடியைக் கொடியாகக் கொண்டார்கள்.

பிரான் மலைக் கல்வெட்டில்`ஐம்பொழில் வளநாட்டு கல் வாயல் நாட்டு சுந்தர பாண்டிய புரத்து நகரத்தார்' என்ற சொற்றொடர் வருகின்றது. கல்வாசல் நாடு, ஐம் பொழில் வள நாட்டின் ஒரு பகுதி. சுந்தர பாண்டிய புரம், பில்ல

மங்கலமாகும். ` ஐம் பொழில் வள நாடு' பற்றித் தெளிவாக அறியப் போதிய சான்றுகள் கிட்டில. ஐம்பொழில் தேவதை என்பது நாநாதேசி திசையாயிரத்தைந்நூற்றுவர் அய்யம் பொழிலிலிருந்து வணங்கிவந்த தெய்வம். ஐஹொளே (Alhole) என்பதன் மருவிய வடிவமே அய்யம் பொழில். இதனைக் காவிரிப் பூம்பட்டினத்திலிருந்து வரும் போது நகரத்தார்கள் கொண்டு வந்தார்கள். மிதிலைப் பட்டிக்கவிராயர் மரபினர் பாடிய கீரணி அம்மன் கும்மியில்.

``காவிரிப் பூம் பட்டணத்தில் இருந்தொரு
காவலன் மாறனழைத்துவர
பூவிரிப் புனல்மிகும் பாண்டிய நாட்டினிற்
பொங்கத்துடன் வந்தமர்ந்தாளே"

என்று பாடுகிறார். நகரத்தார்களின் முதல் வாழ்விடம் இளையாத்தக்குடி; இளையாத்தக்குடிக்கு வடபாலுள்ளதும் இளையாத்தக்குடி சிவன் கோயிலின் பரிவார தெய்வமும் கீரணிப்பட்டி முத்து மாரியம்மனே. இவ்வம்மையே ஐம்பொழில் தேவதை ஆகலாம். இது மேலும் ஆராய்தற்கு உரியது.

## பசும் பொற்பை

நகரத்தார்களுடன் சேர்ந்து வணிகம் செய்த சித்திரமேழிப் பெரிய நாட்டார் பற்றிய பிரான் மலைக் கல்வெட்டில், `சித்ரமேழியே தெய்வமாகவும் பசும்பையே வேலியாகவும் உடையவர்' என்று குறிக்கப் பெறுகிறது. திருக்கோயிலூர்க் கல்வெட்டிலும் ` செம்பொன் பசும்பையே' வேலியாகவும் என்றுளது. இவர்கள்` பசும் பொன்பையே' தெய்வம் என்று கொண்டாடினர். இப்பை வணிகர்களின் வளமைச் சடங்கைக்காட்டும் சின்னமாகும்.

இன்று நாட்டுக் கோட்டை நகரத்தார்களின் திருமணத்தில் மாப்பிள்ளை`வல்லுவப்பை அல்லது வள்ளுவப்பை என்று ஒரு பட்டுப்பையைத் தோள் மீது போட்டுக் கையில் பிடித்திருப்பர்; மாப்பிள்ளை அழைப்பிலிருந்து இப்பையிருக்கும். திருப்பூட்டும் போதும் (தாலிக்கட்டும் போதும்) இப்பையை (மாப்பிள்ளைத்தோழனாகிய)ச் சிறுவன் வைத்துக் கொண்டிருப்பான். கடந்த பதினைந்து இருபதாண்டுகளாகப் பையை வைத்துக் கொள்ளும் பழக்கம் நின்று போய் விட்டது. இந்தப்பையில் பெண் வீட்டார் மாப்பிள்ளை வீட்டுக்கு வந்து மனையில் இருந்து பாக்குச் சுருள் வைப்பர். இரண்டு நாள் திருமணத்தில் கூட இம்முறை இருந்தது. ஒரு நாள் திருமணமாக மாறிய போது இப்பழக்கம் நின்று விட்டது; வள்ளுப்பையை மாப்பிள்ளை வீட்டார் கொண்டுவருவதுமில்லை.

வள்ளுவப்பையைத் தெய்வமாகக் கருதி அதன் முன்னிலையிலேயே திருப் பூட்டு நடை பெற்றது. நகரத்தார்களுடைய திருமணச் சடங்கில் அவர்கள் பழைய வணிக மரபைக் காட்டும் பையும் அது தொடர்பான சடங்குகளும் நின்று போய் விட்டன. இது நகரத்தார்களின் வரலாற்றை உணர்த்தும் உண்மையாகும்.

## நகரத்தார்களின் தாயகம்

நகரத்தார்களின் தாயகம் பற்றி மரபு வழியாக வழங்கும் வரலாறு ஈண்டு நினைத்தற்பாலது.

``இத் தனப் பெரும் வணிகர்கள் கலியுகம் (200) இருநூறு ஆண்டுகளுக்கு முன் நாக நாட்டில் சாந்தியாபுரி என்னும் நகரில் சந்திரகுல கோத்திரவைசியரென்ற பெயரும் கோபதீச்சுர சுவாமிதரிசனமும் மரகதவிநாயகர் பூசையும் சதா சிவ குருபீடத்தில் தீட்சையும் இரத்தின வியாபாரமும் செய்து கொண்டிருந்தார்கள். அந்நாட்டு மன்னன் செய்த கொடுமையால் காஞ்சிபுரம் வந்தார்கள். பின் அந்நகரத்துக்கு அதிபனாகிய பிரதாப அரசன் அநீதி செய்யவே காவிரிப்பூம் பட்டினம் வந்தார்கள். அங்குப் பூவந்திச் சோழன் நகரத்தார் குலப் பெண் அநீதியாய்ச் சிறைவைக்கப் பலர் உயிர் துறந்தனர். ஆண் குழந்தை களைத் தங்கள் ஆசான் ஆத்மநாத சாஸ்திரியிடம் விடுத்தனர். ஆசான் தன் மாணாக்கர்களுடன் பாண்டி நாட்டுக்கு வந்து விட்டனர்".

இக் கதை நெடுங்கால மாகச் செட்டியார்களிடையே வழங்குகிறது. இதனைக் கி.பி. 1894 இல் எழுதி அச்சிட்டு வெளியிட்டனர்.

நகரத்தார்கள் வாழ்ந்த சாந்தியாபுரி எங்குள்ளது? அப்பகுதியின் இன்றையப் பெயர் என்ன? ஆகியவற்றை ஆராய்தல் வேண்டும்.

சாந்தியாபுரி, காஞ்சிபுரம், காவிரிப்பூம்பட்டினம் என்ற வரிசையில் காவிரிப்பூம் பட்டினம் நகரத்தார்களின் வாழ்விடமாகத் திகழ்கிறது. சிலப்பதிகாரம் காவிரிப்பூம்பட்டினத்தில் நகரத்தார் வாழ்ந்தமையைத் தெரிவிக்கும். கோவலன் கண்ணகியர் நகரத்தார் மரபைச் சார்ந்தவர் என்பது தமிழறிஞர்கள் ஒப்புக் கொண்ட உண்மை.

செட்டிநாட்டில் வாழ்ந்த பல புலவர்கள் தங்கள் நூல்களில் நகரத்தார் காவிரிப்பூம் பட்டினத்திலிருந்து இப் பகுதிக்குக் குடிபெயர்ந்தவர்கள் என்று பாடியுள்ளனர். பாடுவார் முத்தப்ப செட்டியார் திருமுக விலாசத்தில்

``பார்த்திபர் காவிரிப்பூம் பட்டினத்தில் முன்வைசியர்
கோத்திரத்தில் மிக்க குபேரனைப் போல்"

என்று பழைய வரலாற்றைச் சொல்லிப் பாடுகின்றார்.

நகரத்தார்கள் காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து இன்று வாழும் பகுதிக்கு வந்தமைக்கு என்ன காரணம்? கம்பனடிப் பொடி அவர்கள் இதற்கான காரணங்களைக் கீழ்க்கண்டவாறு முறைப்படுத்தித்தருகிறார்.

1. நகரத்தார் கொடைச் சிறப்பால் ஏற்பட்ட பொறாமை

2. இவர்கள் செல்வ வளத்தால் எழுந்த பொறாமை.

3. இவர்கள் அறிவாற்றாலால் தோன்றிய பொறாமை.

(இவற்றையெல்லாம் ஒன்றாக்கி நகரத்தாரிடம் மன்னனுக்கு ஏற்பட்ட பொறாமை என்று ஒன்றாகக் கொள்ளலாம்)

நகரத்தார் பெண்ணை உலாப் போந்த மன்னன் முத்த மிட அதனால் விளைந்தபகை.

நகரத்தார் சொல்லும் கதையில் இந்நான்கு கூறுகளும் அவ்விருவர் பாலும் இருந்தன என்று உணரலாம்.

வேலங்குடி கல்வெட்டு என அச்சிடப்பட்டுள்ள நூலில் இவ்வரலாறு இடம் பெற்றிருக்கிறது. அன்றிப் பாண்டிய நாட்டில் நற்குடிகளும் வைசியர்களும் இன்மையால் சவுந்தர பாண்டியன் சோழ மன்னனை நாடி நகரத்தார்களை அழைத்து வந்தான். இவ்வாறு நல்ல குடிமக்கள் இல்லாத போது நாடு விட்டு நாடு சென்று மக்களை அழைத்தல் வரலாற்றில் கண்ட உண்மை.

பாடுவார் முத்தப்ப செட்டியாரும் முத்துக் குட்டிப் புலவரும் பாண்டிய மன்னன் சோழநாடு போய் நகரத்தாரை அழைத்து வந்தான் என்பர்.

``பார்த்திபர் காவிரிப்பூம் பட்டினத்தில் வைசியர் கோத்திரத்தில் குபேரனைப் போல்--வீற்றிருக்கும் அந்நாளில் பாண்டி நகர்க்கான குடி வேண்டுமென்று தென்னாடர் தேசிகர்பால் சென்றுரைத்து-- முன்னான மெத்த உபசாரம் வேண்டுவதெல்லாமுரைத்துச் சித்தம் திரும்புதற்குச் செய்தி சொல்லிச் -- சத்தியமாய்த் திங்கள் கதிர் உள்ள மட்டும் தேசிகரே எந்நாட்டில் உங்கள் மரபுக்கொரு காலும் -- பங்கம் வரஒட்டேன்.......

(திருமுகவிலாசம்: 183--187)

இதனை நகர வாழ்த்திலும் குறிப்பர். கண்ணுடையம்மன்மள் பாடிய முத்துக்குட்டிப் புலவர்,

`சென்று நற்குடி மாறனழைக்கச்
சிறந்த காவிரிப் பூம்பட்டணத்தில்
அன்றிருந்து பொற்றே ரேறிவந்தோர்.
அருவியூர் சுந்தரம் தன்னிளசை.
யென்று மூன்றிலிசை யைஞ்ஞூற்றுவாழ்
எழுமா நகர்வாழு வணிகர்
நன்றிசேர் கண்ணுடையாளைப் போற்றும்
நகர மெங்கள் நகரங்காணாண்டே"

என்று அப்பள்ளில் இவ்வரலாற்றைக் குறிப்பர். வாய்மொழிக்கதை சோழ மன்னனை நாடிப் பாண்டியன் அழைத்தான் எனத் தெரிவிக்கிறது. பாடுவார் ஆசானை நாடி அழைத்து வந்தான் எனக் கூறுகிறார். எழுநகரத்தார்குளுவ நாடகத்திலும் இக் கருத்துக்கள் இடம் பெற்றுள்ளன.

புலவர்கள் நகரத்தார் இடம் பெயர்ந்தமையை விளக்கினாலும் மக்களிடையே வழங்கும் கதை பெண்ணுடன் தொடர்புபடுத்தித்தான் பேசுகிறது.

நாகர் கோயில் வட்டாரத்தில் வாழும் இரணியல் செட்டியார்கள் செட்டியார் வகைகளில் ஒரு பிரிவினர் ``நாகர் கோயில் கோட்டாற்றுப் பகுதியில் குடியேறினர். காவிரிப்பூம் பட்டினத்தில் இருந்து கொண்டு வந்த மரகதப் பிள்ளையாரைக் கோட்டாற்றில் பிரதிஷ்டை செய்து வழி படுவாராயினர். அக் கோயில் உள்ள தெரு செட்டித் தெரு எனப்படுகிறது. அங்குள்ள பிள்ளையார் பெயர்``தேசிய விநாயகர்" என்பது தான் (பிள்ளையார்பட்டிப் பிள்ளையாரின் பெயரும் இதுவே)

இரணியல் செட்டியார்கள் காவிரிப்பூம் பட்டினத்திலிருந்து வந்தவர்கள். அவர்கள் தங்களை `ஏழூர்ச் செட்டியார்கள்' என்பர். ஏழூரில் வாழ்வதால் அப்பெயர்

அடைந்தனர். நாட்டுக்கோட்டைச் செட்டியார்களும் ஒரு காலத்தில் கோட்டாற்றில் வசித்தவர்கள் என்று நம்புகின்றனர்.

பன்னிரண்டாம் செட்டியார்கள் எனும் செட்டியார்கள் குழித்தலைக்கு மேற்கே 'பழைய செயங்கொண்டம்' பகுதியில் வாழ்கிறார்கள். இவர்கள் சிவபெருமானைத் தங்கள் பங்காளியாகப் பெற்றவர்கள். இவர்களும் காவிரிப்பூம்பட்டிணத்திலிருந்து வந்ததாகவே சொல்லுகின்றனர்.

"நகரத்தார்களின் மரபுகளைப் பற்றியும் 1318 ஆம் ஆண்டு பாண்டியன் கல்வெட்டு ஒன்று சில செய்திகளைத் தருகின்றது. அதில் காவிரியின் இரு கரையிலும் இருந்த பதினெண்பூமி வணிகநகரத்தார்களின் பிரசஸ்தி அல்லது மெய்க்கீர்த்தி கொடுக்கப்பட்டுள்ளது. இப்பதினெண் பூமி வணிக நகரத்தார் சோழ நாட்டிலிருந்து பாண்டிய நாட்டிற்கு வந்து குடியேறினர் என்று தெரிவிக்கின்றது."

பூவாளுர் செட்டியார்கள், வேளாண் செட்டியார்கள், இரணியல் செட்டியார்கள், பன்னிரண்டாம் செட்டியார்கள் முதலியோர் தாங்கள் எல்லாம் காவிரிப்பூம் பட்டிணத்திலிருந்து வேறிடத்துக்குப் பெண் காரணமாகக் குடிபெயர்ந்த தாகவே சொல்லுகின்றனர். சிலர் சோழ நாட்டில் உறையூர்ப் பகுதியிலும் சிலர் பாண்டிய நாட்டிலும் குடியேறினர்.

காவிரிப்பூம் பட்டினத்தில் வணிகர்களுக்கும் அரசுக்கும் ஏற்பட்ட கருத்துவேறுபாட்டில் பல வணிகக் குழுக்கள் வெளியேறின. அத்தகையவர்களில் நகரத்தார்களும் ஒரு சாரார் என்று கருதலாம்.

நகரத்தார் வரலாறு பற்றிய வேலங்குடிக் கல்வெட்டு, நகரத்தார் வரலாற்றையோ இடப் பெயர்ச்சியையோ சொல்லவில்லை. அக்கல்வெட்டு வேலங்குடி இறைவற்கு வாணிய நகரத்தார் செய்த கொடையையே உரைக்கிறது.

நகரத்தார் வரலாற்றில் தொடர்புடைய பூவந்திச் சோழன். ராசபூஷண சோழன் என்ற பெயர்கள் வரலாற்றில் இல்லை. இவற்றுக்கு ஒப்பான பெயர்களும் இல்லை. இவை இன்னும் ஆராய்தற்கு உரியன.

# பெருமை

## ஊரும் பேரும்

நாட்டுக் கோட்டை நகரத்தார்கள், இளையாத்தக்குடியில் தங்கியபோது`இளையாத்தக்குடி நகரத்தார்' எனப் பெற்றனர். இம் மரபினரில் தனிப்பட்டவர்களைச் செட்டி என்று கூறினாலும் அவ்வினத்தார் அனைவரையும் ஒன்றுபடுத்து இருக்கும் இடத்தொடு சேர்த்துக் கூறும் மரபே காணப்படுகிறது. நகரத்தார்கள் இடையே பல்வேறு பிரிவினர் இருந்தனர். அதனால்தான் இந்த வழக்குத் தோன்றியது. இனப்பெயரோடும் ஆள்பெயரோடும் ஊரை இணைத்து அழைப்பது ஒரு தொன் மரபாகும்.

## கல்வெட்டு ஆட்சி

செட்டி நாட்டு வட்டாரத்தைச் சார்ந்த பகுதிகளிலுள்ள கல்வெட்டுகளில்`இளையாத்தக்குடி நகரத்தார்' என்ற தொடர் பயிலுகின்றது. இத்தொடர் பயிலும் கல்வெட்டுகளால் இளையாத்தக்குடி நகரத்தார்கள் பற்றிய பல்வேறு பெருமைகள் தெரியவருகின்றன. இவர்களை மேலப்பனையூர் ஞானபுரீசுவரர் சுவாமி கோவிலின் வடபுறம் சுவரிலுள்ள கல்வெட்டுக் குறிக்கின்றது. இக்கல்வெட்டின் காலம் கி.பி. 1360; இதனைப் பிலவங்க வருஷம் பங்குனி மாதம் 12 ஆம் நாள் கல் வெட்டியிருக்கின்றனர். இக் கல்வெட்டில் மன்னர் பெயரில்லை.

## அறம் சொன்ன மரபு

இளையாத்தக்குடி நகரத்தார், கோவில் தகராறில் நடுவர்களாக இருந்து நடுச்சொல்வது பற்றி இக் கல்வெட்டால் அறியமுடிகிறது. பனையூர், குளமங்கலம் ஆகிய இரண்டு ஊராருக்கும் இடையே கோயிலை ஒட்டித்தகராறு எழுந்து வழக்காயிற்று. இவ்வழக்கில், இளையாத்தக்குடி நகரத்தார்களோடு கோனாட்டு வெள்ளாளர்களும் வேறு சிலரும் நடுவர்க்ளாக இருந்தனர். அறம் சொல்ல வந்த அறவோர்களின் பெயர்கள் கல்வெட்டில் இல்லை. அவர்களை `அனைவரும்' என்றே கல்வெட்டுக் கூறுகிறது.

## இருப்பு—இளையாத்தக்குடி

பனையூர், குளமங்கலம் ஆகிய இரண்டு ஊராருக்கும் கோயில் நிலவுரிமை பற்றிய வழக்கு எழுந்தது. பனையூர் அறிவீசுவரமுடைய நாயனார்க்கும் மலையக் கோயில் திருவெங்கைக்காலீசுவர நாயனார்க்குமிடையே தான் இடர்ப்பாடு. இவ்வழக்குத் தோன்றிய இடம், பொன்னமராபதி நாட்டு வடபத்து நாடு, இந்த வழக்கை ஆராய்ந்து நடுச்சொல்லப்பக்கத்து நாடுகளிலுள்ளவர்கள் அழைக்கப் பட்டனர். கோயில் தொடர்பான வழக்கு என்பதால் கல்வாசல் நாட்டில் வாழ்ந்த இளையாத்தக்குடி நகரத்தார்கள் நடுச்சொல்ல அழைக்கப்பட்டனர். இன்னொருபுறம் கோனாட்டு வேளாளர்கள் அழைக்கப்பட்டனர். பொன்னமராபதி நாட்டிலும் சிலர் இடம் பெற்றிருக்க வேண்டும். நடுவர்களாக இருந்தவர்களின் பெயர்கள் கல் வெட்டில் கிடையாது.

நடுச்சொல்ல வந்தவர்கள் இரண்டு ஊராரின் வாய்மொழிகளைக் கேட்டு, இரு திறத்தாரும் நடந்து கொள்ள வேண்டிய வகையை நிலவரம் செய்தார்கள். தொலைவில் இருந்தாலும் இளையாத்தக்குடி நகரத்தார்கள், நீதி சொல்லுவதற்கு நாட்டார்களால் அழைக்கப்பெற்றிருப்பது அவர்களின் வழிவழிப் பண்பாட்டை உணர்த்துவதாகும்.

## கோயிற் பணியும் முதன்மையும்

செவ்வலூர் (செவலூர்) பூமியீசுவரர் கோயிலில் இளையாத்தக்குடி நகரத்தார்கள் பற்றிய மூன்று கல்வெட்டுகள் இருக்கின்றன. இன்று இவ்வூரில் நகரத்தார் குடும்பங்கள் இல்லை. அவர்கள் வெளியூர் சென்று விட்டனர். பூமியீசுவரர் கோயிலில் சுவாமிகோயில் வடபுறம் ஒரு கல்வெட்டுக் காணப்படுகிறது. இதன் காலம் கி.பி. 1458. (பார்த்திப வருஷம் தை மாதம் 24 ஆம் தேதி) இக்கல்வெட்டில், இளையாத்தக்குடி நகரத்தார்க்கும் கழனிவாசலுடையான் செழியதரையர் ஆவுடையார்க்கும் செவலூர் பூமியீசுவரமுடையநாயனார் கோயில் பண்டாரத்தாரும் ஊரரும் பிரமாணம் பண்ணிக் கொடுதிருக்கின்றனர்.செவலூர் சிவன் கோயிலுக்கு நாயகரும் சுப்பிரமணியரும் இவர்கள் அமைத்திருக்கின்றனர். இவ்விறைவன் பூசைத்திருநாளுக்கு `இளையாத்தக்குடி நகரத்தார் தம்பிரான் வந்தான்' என்று திருச்சின்னம் கூறினர். இத்திருநாளில் இவர்களுக்கு முதற் பிரசாதம் கொடுத்துப் பரிவட்டமும் கட்டிக் கொள்ள இவ்வூரார் இசைந்தனர். இவ்வாறு வாழ்ந்தவூரில் இவர்களுக்கு தன்மை கிடைத்தது. இஃது இக்கல் வெட்டின் முற்பகுதி. இதனைக் தொடர்ந்து செவலூரில் நகரத்தார்க்கு முப்பது வீட்டுமனை ஒதுக்கியதைக் கல்வெட்டுச் சுட்டுகிறது. நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் என்னும் செட்டியார்கள் வாழ்ந்த தொண்ணூற்றாறு ஊர்களில் செவ்வலூரும் (செவலூர்) ஒன்றாகும்.

## இரண்டு கோயிலார்

இக்கல்வெட்டில் கல்வாசல் நாட்டுக் குலசேகரபுரத்து இளையாத்தக்குடி நகரத்தாற்கும் மெற்படி ஊர் கழனிவாசலுடையான் செழிய தரையர் ஆவுடையீற்கும் என்ற பகுதி நகரத்தார் வரலாற்றுக்கிரிய குறிப்பை வழங்குகிறது. கல்வெட்டுத் தொடரின் முற்பகுதி, இளையாத்தக்குடியில் வாழ்ந்த இளையாத்க்குடிக்

கோயிலைச் சார்ந்த நகரத்தார்களைக் கூறுகிறது. இதனையடுத்து இந்த ஊரில் வாழ்ந்த இந்த இனத்தாரான கழனிவாசலுடையாரைப் பற்றிப் பேசுகிறது. கழனிவாசலுடையார் இனத்தால் இளையாத்தக்குடியைரச் சார்ந்தவர்கள்; பங்காளி உறவு முறையால் கோயில் அடிப்படையால் வேறு பட்டவர்கள். அதனால்தான் இரு திறத்தாரையும் ஒன்றாகக் கூறாமல் தனித்தனியே உரைத்திருக்கின்றனர். கழனிவாசல் குடியார் என்ற பிரிவு இளையாத்தக்குடிக்கு உரியது; ஆனால் இக்கல்வெட்டோ `கழனிவாசலுடையான்' என்று குறிக்கிறது. கழனிவாசலுடையான் என்ற பிரிவு, இன்று வயிரவங்கோவிலைச் சார்ந்தது. கி.பி. 1458 இல் இளையாத்தக்குடி நகரத்தாரில் இளையாத்தக்குடி, ஏழகப் பெருந்தெருவான வயிரவன்கோயில் ஆகிய இரண்டு பிரிவினர் செவலூரில் குடிபோக வீட்டுமனை ஊராரிடமிருந்து பெற்றிருக்கின்றனர் என்பது புலனாம்.

## செவலூரில் குடியேற்றம்

செவலூரில் இருபத்தெட்டு மனைகளை ஒருங்கே இளையாத்தக்குடியாரும், அவற்றைச் சார்ந்த இரண்டு மனைகளை வயிரவன் கோயிலாரும் ஊராரிடமிருந்து பெற்றிருக்கின்றனர். இந்த மனைக்கட்டுகள் செவலூர் மலையடி ஊரில் வடக்குத் தெருவில் உள்ளன. இக்கல்வெட்டில் `இடுகாடு இவர்களும் ஊரவரும் பொருந்தின இடத்திலெ இடக்கட வொமாகவும் (வரி 14.15) என்ற தொடர் காணப்படுகிறது. வீட்டுமனை பெறும் போதே பிறவற்றையும் நகரத்தார்கள் வரையறுத்துக் கொள்ளும் போக்கு இதனால் வெளிப்படுகிறது.

இளையாத்தக்குடி நகரத்தார்கள், இளையாத்தக்குடியில் இருந்து பல்வேறு ஊர்களுக்குக் குடிபோனமைக்கு ஓர் எடுத்துக் காட்டு, செவ்வலூர்க் கல்வெட்டு. இங்கு முப்பது மனைகளைப் பிரித்து நகரத்தார்களுக்கு எவ்வகைப் பயனும் பெறாமல் ஊரார் வழங்கினர் என்பது குறிக்கற்பாலது. இக்கோயில் கல்வெட்டுகள், இளையாத்தக்குடி நகரத்தார்கள் பற்றிய செய்திகளை மேலும் தருகின்றன.

## மூத்தோன் வருக

பூமிச்சுரர் கோவிலின் வாசற்படிக்குத் தென்புறம் சுவரிலுள்ள கல்வெட்டு, (ரௌத்தி வருஷம் ஆடி மாதம் 16 ஆம் தேதி ) கி.பி. 1500 ஆம் ஆண்டுக்குரியது. இதில் செவலூர்க் கோயிலில் நகரத்தார்களில் வயதில் மூத்தவர்களுக்கு முதல் மரியாதை கொடுப்பது என்று கோயில் பண்டாரத்தாரும் ஊராரும் கல் வெட்டிக்கோடுத்திருக்கின்றனர். (PSI 833). செவ்வலூரில், நகரத்தார்கள் குடியேறிய நாற்பதாண்டுகளில் அவர்கள் சிவன் கோயிலில் தனி மரியாதை பெற்றிருக்கின்றனர்.

## நித்தியப்படி—திருத்தொண்டு

மேற்படி சுவாமி கோயிலின் வாசற்படிக்கு வடபுறம் சுவரிலுள்ள கல்வெட்டு, முற்கூறிய கல்வெட்டு வெட்டியபின் பத்து நாள்கள் கழித்து வெட்டப்பட்டிக் ருகிறது.(ரௌத்தி வருஷம் ஆடி மாதம் 26 ஆம் தேதி). இக்கல்வெட்டும், இவ்வூரில் முப்பது மனை வாங்கிய நகரத்தாரொடு தொடர்புடையது. செவலூர் சிவன் கோயிலில் அமுதுபடிக்கு முட்டு ஏற்பட்டது. அப்போது அவ்வூரார் நூற்றுநாற்பது சக்கரத்துக்கு மாதன் வாய்க்கால் என்ற பெரியசெய்யையும் அதிலுள்ள கிணற்றையும் தெங்கடிப்பறியாலையும் விற்றனர். அத்துடன் இக்கோயிலில் இவர்கள் அமைத்த கடவுளர்க்கு இவர் தருமமாக அமுதுபடி வழங்க வேண்டும் என்றும் வரையறுத்தனர். இத்தருமத்தை இளையாத்தக்குடியாரும் கழனிவாசற்குடியாரும் இணைந்தே செய்ய உடன்பட்டிருந்தனர்.

இதனைத் தொடர்ந்து, இக்கல்வெட்டு முப்பது வீட்டு மனைச் செய்தியில் ஒரு மாற்றத்தைக் கூறுகிறது. கி.பி. 1456 இல் கோயில் பண்டாரத்தாரும் ஊராரும் இளையாத்தக்குடி நகரத்தாருக்கு இருபத்தெட்டு மனைகள் ஒதுக்கினர். கி.பி. 1500இல் இந்த இருபத்தெட்டு மனைகளில் மூன்றனைக் கழனிவாசலுடையான் செழியதரையர் சிவந்த கால அழகியரான செதிபராயர்க்கு விடுத்தனர். சிவந்த கால அழகியர் கழனிவாசலுடையான், செழியதரையன் மகன் ஆவான். ஆதலின் முன் இரண்டு மனை பெற்றவர்கள் மேலும் மூன்று மனை பெற்றுப் புள்ளி பெருகினர் என்பது தெரியவரும். இளையாத்தக்குடியாரொடு வயிரவன் கோயிலாரும் செவலூரில் வாழ்ந்து வளம்பெருகினர்.

## இராங்கியத்தின் பழமை

செவ்வலூர் கல்வெட்டுகள் போல இராங்கியம் பூமீச்சுவரர் கோயில் கல்வெட்டுகளும் இளையாத்தக்குடி நகரத்தார்களைப் பற்றிக் கூறுகின்றன. இராங்கியம் (இராசசிங்கமங்கலம்) இளையாத்தக்குடி நகரத்தார்கள் தொன்று தொன்டு வாழ்ந்த ஊர்களில் ஒன்று. பாடுவார் முத்தப்ப செட்டியார்.

``ராசசிங்கம் வாழ்பூமி நாதர்சிவகாமியையும்
நேசமுடன் போற்றி நிறைந் திருப்போர்'

என்று அவர் ஒன்பது நகரக் கோயிலொடு இணைத்துக் திருமுகவிலாசத்தில் பாடியிருக்கிறார். இதனால் வழிவழியாக இராங்கியம் சிவன் கோயில் நகரத்தார்களால் போற்றப் பெற்றமை தெளிவாகும்.

## குறைத்திருப்பணி

பூமீயீசுவரர் கோயிலுள்ள சுவாமி கோயிலின் கீழ்ப்புறம் சுவரில் வாசற்படிக்குத் தென்புறம் உள்ள கல்வெட்டு கி.பி. 1456 ஆம் ஆண்டுக் குரியது. (PSI 796). இக்கோயிலைக் `கல்வாசல் நாட்டு குலசேகரபுரத்து ஒக்கூருடையான்வணிகராமர் தருமமாகக் கட்டினார். இவர் இக்கோயிலை இந்த ஆண்டுக் கட்டினார் என்ற விவரம் இல்லை. `முன்னாள்' கட்டினான் என்றுதான் கல்வெட்டுத் தெரிவிக்கிறது. ஆகையால் இக்கோயில் கி.பி. 1456 க்கு முன்பே கட்டப்பட்டது என்று புலனாகும்.

இக்கல்வெட்டு, இளையாத்தக்குடி ஒக்கூருடையான் இராமர் பற்றியது. இவர் இராங்கியம் பூமியீசுவரர் கோயிலைக் கட்டினார். ஆனால் இது குறைத்திருப்பணியாய் முழுமை பெறாமல் கிடந்தது. அவருக்குப்பின் மகாமண்டபம், எழுபடி ஆகிய திருப்பணிகளை நிறைவேற்ற மூவர் முற்பட்டனர். அந்த மூவர்

1. மெற்படி (கல்வாசல் நாட்டு குலசேகரபுரத்து ஒக்கூருடையான்) சிவந்தெழுந்தார் இராயர்

2. மெற்படி சி. ராமதேவர் ஆசிரியங்காத்தார்

3. மெற்படி ஊர்கழனிவாசலுடையான் திருக்கொளக்குடியாண்டரான செழியதரையர்.

இவர்கள் மூவரும் கூடி வணிகராமர் செய்த குறைத்திருப்பணியை நிறைவேற்றினர். இத் திருப்பணிகளில் பங்கு பெற்ற ராமரும், சிவந்தெழுந்தாரும், ஆசிரியங் காத்தாரும் ஒகூர்ப்பிரிவினராய் இளையாத்தக்குடியைச் சேர்ந்தவர்கள். கழனிவாசலுடையான் செழியதரையன் வயிரவன் கோயிலைச் சார்ந்தவன். எனவே இராங்கியம் பூமியீசுவரர் கோயில், இளையாத்தக்குடி, வயிரவன் கோயில் ஆகிய இரண்டு கோயிலாரும் செய்த திருப்பணி என்பதில் அய்யமில்லை.

## ஒக்கூரார்—முதல் மரியாதை

இக்கோயில் கட்டிச் சிறப்பெய்தியமையாலும் முதற்கண் கோயில் திருப்பணியைச் செய்ய முற்பட்டமையாலும் பூமியீசுவரர் கோயிலில் முதல் மரியாதை (ஒடுக்கு) ஒக்கூர் உடையானுக்கே கொடுக்க வேண்டும் என்று கல்வெட்டு வரையறைசெய்கிறது. ஒக்கூரார்க்குச் சிறப்புச் செய்தபின்னர்தான் வயிரவன்

கோயிலார்க்குச் (கழனிவாசற்குடியார்) சிறப்புச் செய்ய வேண்டும். இவ்வாறு விதிமுறை வகுத்துக் கோயில் பண்டாரத்தாரும் ஊராரும் ஒப்புக் கொண்டு கல் வெட்டுக் கொடுத்துள்ளனர். இன்றும் ஒன்பது கோயில் நகரத்தார்கள் கூடியிருக்கும் திருக்கோயில்களிலும் இதே மரபு பின்பற்றப்படுகிறது. இளையாத்தக்குடியில் வாழ்ந்த காலத்திலிருந்த முதற்கண்கோயில் கட்டிய சிறப்பால் ஒக்கூர் நகரத்தாருக்கு இச் சிறப்பு அளிக்கப்பட்டு வருகிறது.(PSI 796). ஆனால் முத்துமீனாள் கொலைக்கீடாக `வியன்தலை' கொடுத்ததால் இச்சிறப்பு ஏற்பட்டதாக கி.பி. 1894 இல் நகரத்தார் வரலாறு எழுதியவர்கள் எழுதியுள்ளனர்.

### வணிகராமர்-தொன்மைக்குடி

இராங்கியம், பூமியீசுவரர் கோயில் கட்டிய ஒக்கூர் நகரத்தார் வணிகராமர் இராங்கியத்தில் தொன்றுதொட்டு வாழ்ந்துவந்த புகழ்பெற்ற குடியினர். பூமியீசுவரர் கருவறையின் வடபுறமுள்ள கல்வெட்டு `இவர்கள் பூறுவராகளில் உதையப்பெருமாள் ஆன வணிகராமர் எழுந்தருளிவித்த உடையார் திருப்பூமிசுவரமுடைய நாயினாற்கு' என்று கூறுகிறது. இது `பூர்வீகமானவர்கள் என்பதை உணர்த்துகிறது. வணிகராமரின் இன்னொரு பெயர் உதையப்பெருமாள் என்பதும் தெரிகிறது.

### பெருந்தெரு

வயிரவன் கோயில் நகரத்தார்கள் இசை பிடிமானம் எழுதும்போது, `கேரள சிங்கவள நாடாகிய ஏழகப் பெருந்திருவான வீரபாண்டிபுரத்தில் சிறுகுளத்தூருடையார்' என்று எழுதுகின்றனர். இந்த வாசகத்தில் வயிரவன் கோயில் என்பது வரவில்லை. இவ்வழக்கு மிகப் பிற்பட்ட ஆட்சியுடையது. ஏழகப்பெருந்தெரு என்பதே வரலாற்றுத் தொடர்புடையது; தெரு என்பதனை மங்கலம் கருதித் திரு என மாற்றிவிட்டனர். வயிரவன்கோயிலுக்கு ஏழகப் பெருந்தெரு என்பதுபோல ஒவ்வொரு நகரக் கோயிலுக்கும் ஒவ்வொரு பெருந்தெரு என்ற ஆட்சி இருந்தது. இராங்கியத்திலுள்ள இக்கல்வெட்டால், இளையாத்தக்குடிக்குரிய பெயர் தெரிகிறது. `கல்வாசல் நாட்டு இளையாத்தக்குடியான குலசேகரபுரத்து காளையகாலன் பெருந்தெருவில் ஒக்கூர் உடையான் என்று கல்வெட்டில் வருகின்றது. குலசேகரபுரம் என்பது இளையாத்தக்குடியே; இதனையே காளையகாவல் பெருந்தெரு' என்பர் (PSI 854)

வயிரவன் கோயிலார் மட்டும் தொன்மையான வழக்கை விட்டுவிடாமல் பயன் படுத்தி வருகின்றனர்.

காளையார் கோயிலில் உள்ள கல்வெட்டொன்றிலும் (கி.பி. 1511) `இளையாத்தக்குடியான குலசேகரபுரத்துக் காளையார் காவற் பெருந்தெருவில் திருவெட்பூருடையான்'(182/தொ) என்ற வாசகம் வருகிறது. எனவே காளையார்கோயிலொடு இளையாத்தக்குடி நகரத்தாருக்குத் தொடர்பிருந்திருக்கிறது. கோயிலொடு தொடர்புடைய பெருந்தெரு என்று முடியும் ஒரு வகைப் பிரிவுமுறை எல்லாக் கோயிலார்க்கும் இருந்திருக்க வேண்டும். அவ்வழக்குக் காலப்போக்கில் மறைந்துவிட்டது.

### ஊருணி அமைத்த பேராளர்

இளையாத்தக்குடி நகரத்தார்களுக்குப் பதினான்கு, பதினைந்தாம்

நூற்றாண்டு முதலே நாட்டில் நல்ல மதிப்பும் சிறப்பும் இருந்தன. திருமயம் தாலுகா மறவா மதுரையிலுள்ள அகளங்கீசுவரர் கோயிலில் சுவாமி கோயிலின் தென்புறம் சுவரிலுள்ள கல்வெட்டு கி.பி. 1518 ஐச் சார்ந்தது. அதில் `ஆறிலொன்று காணி அங்கிஷமாகப் பூண்ட செட்டிகளில் இளையாத்தக்குடிக் கழனிவாசலுடையான் பொதிய கொனார் திருவொத்த சாமமழகியாரான செழியதரையர்' என்று வருகிறது. செழியரையர் உள்ளிட்டார் வடமதுரை என்னும் மறவாமதுரை ஓர் ஊருணி வெட்டினார். அந்த ஊரிணிக்குத் தண்ணீர் வருவதற்காக மறவாமதுரை ஊராரும் பூச்சா நாயக்கரும் ஊருணியை ஒட்டிய பகுதியை ஊருணிப்புறமாக விடுத்துள்ளனர். இதற்கு எல்லாவகையான வரிவிலக்கும் அளித்துள்ளனர் (PSI 726). தொன்று தொட்டு இளையாத்தக்குடி (வயிரவன் கோயில்) நகரத்தார் ஊரிணி வெட்டிக் கட்டி அறம் செய்து வந்துள்ளனர் என்பதற்கு இதுவும் நல்ல சான்று.

இவ்வண்ணம் இளையாத்தக்குடி நகரத்தார்கள் நடுச்சொல்லியும் கோயிற்பணி செய்தும் குறைத்திருப்பணிகளை நிறைவேற்றியும் ஊருணிகள் அமைத்தும் பதின்மூன்று, பதினான்கு, பதினைந்தாம் நூற்றாண்டுகளிலேயே வாழ்ந்திருக் கின்றனர், அவர்கள் தம் பணி வளர்வதாக.

## நிறைவுரை

நாட்டுக் கோட்டை நகரத்தார்கள் வரலாற்றை இன்னும் விரிவாகவும் விளக்கமாகவும் எழுதவேண்டும். பொருள் வளம் மிக்க நகரத்தார்கள் பல்லகலைக்கழகங்களில் பேராசிரியர்களை அமைத்து இவ்வராய்ச்சியையும் ஆய்வு மூலங்களையும் முறைப்படுத்தினால் வரலாறு மறையாது. காலமெல்லாம் திகழும்.

என்றும் இன்பம் பெருகும் இயல்பினால்
ஒன்று காதலித்து உள்ளமும் ஓங்கிட
மன்று ளார்அடி யார்க்கவர் வான்புகழ்
நின்றது எங்கும் நிலாவிய உலகெலாம்.

—திருத்தொண்டர் புராணம்








" தங்கக் கலசத்தில் தண்டமிழாம் பன்னீரைக்
கூட்டாக வந்திங்கே கும்பம் சொரிந்தோரே !
அன்பு வணக்கம் அநேகம் சொன்னோம்
நன்றி சொல்லி நலம்பல வேண்டுகின்றோம் !

*மகிழ்ந்து நன்றி நவிலும் :*

எஸ். ஆதப்பன் - ஆத. ஞானம்
எஸ். மீனாட்சி சுந்தரம் - மீ. அழகம்மை
எஸ். கருப்பையா - கரு. உமா
எஸ். இராமநாதன் - ஆர்.எம். சுபா
எஸ். பழநியப்பன் M.B.B.S
கோமதி - Lt. இராமன் B.E.
சேதுக்கரசி - ஆறுமுகம்.





